# பாரதிதாசன் கவித்திறன்

(ஆராய்ச்சி விமரிசனம்)




Dr. மு. கோவிந்தசாமி, M.A., M.Litt., Ph.D.
தமிழ் ஆராய்ச்சித்துறை
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

விற்பனை உரிமை:

பாரி நிலையம்
59, பிராட்வே · சென்னை-1.

முதற் பதிப்பு : ஆகஸ்டு, 1957
இரண்டாம் பதிப்பு : நவம்பர், 1969

வாசுகி பதிப்பக வெளியீடு

விலை ரூ. 3-50

ஆசிரியரின் பிற நூல்கள்

*பாரதி கவித்திறன்*
*நல்ல நாடு*
*இலக்கிய காலம்*
*வள்ளுவரும் காந்தியும்*
*ஔவை*
*நக்கீரர்*
*குறள் மனம்*

*மாணிக்கம் பிரஸ், அமைந்தகரை, சென்னை-29*




## உள்ளே ...

# அணிந்துரை

ஆசிரியர், திரு. க. அன்பழகன், M. A., M.P.

'பாரதிதாசன் கவித்திறன்' பெற்றுப் படித்துச் சுவைத்து மகிழ்ந்தேன். பாரதியின் கவிதைச் சுவையில் தோய்ந்து ஆய்ந்த புலவர், அதன் தொடர்ச்சியாக இம் முயற்சியில் ஈடுபட்டது பொருத்தமேயாகும்

இருபதாம் நூற்ருண்டின் ஈடு இணையற்ற இருபெருங் கவிஞர்களின் திறமான புலமையும், தமிழகத்தின் அரசியல் விழிப்புக்கும் தன்மான எழுச்சிக்கும் வித்தாக விளங்கும் கவிதைகளின் ஆற்றலும், நாட்டவரால் நன்கு உய்த்து உணரவேண்டிய செல்வங்களாகும். அதற்குத் திறன் ஆய்வு தேவையன்ருே?

தமிழில், திறன் ஆய்வு அண்மையிலேயே கால் கொள்வதாயிற்று. அதன் வளர்ச்சியை ஒட்டியே கவிஞரின் சீரும் சிறப்பும் புலனுவதாகும்.புடமிட்ட தங்கமென,தீட்டப்பட்ட வைரமென, புலமை, ஒளி உமிழ்வதாகும். பிறநாட்டுப் பெருங் கவிஞர்களுடன் நமது கவிஞர்களை ஒப்பிட்டுக் காண்போர்க்கே, அவர்தம் கற்பனை வளனும், கருத்து மாட்சியும், புதுமை நாட்டமும் புரட்சி மனமும் புலனுகும். எனவே, இத்தகு திறனுய்வு ஏடுகளின் மலர்ச்சி வேண்டப்படுவதாகும்.

கவிஞன், கற்பனைவானில் பறந்து பாடிடும் வானம்பாடி. ஆனுல் உலகையும், உலகியல் உண்மைகளையும் அடியோடு மறந்திட்ட கற்பனை சிறப்பதில்லை. மனித வாழ்வின் இயற்கை நியதிகளை உளங்கொண்டு அவர்தம் வாழ்வினைத் தனது கவிதைகளால் உயர்நிலை எய்துவிப்பவனே கவிஞன். அதனுற்ருன் அவனது

கவிதை உள்ளம்,பல்வேறு கோணங்களிலிருந்து ஆரயப் படுவது நலம் பயக்கின்றது.

ஒரு கவிஞனின் உள்ளக் கருத்தை அவ்வாறே ஏற்போர், அடியோடு மறுப்போர்,அளவாக ஒப்புவோர் என்னும் பல திறத்தினரும், கவிதையைத் தாம் தாம் சுவைத்து உணர்ந்த வகையில் உரைத்திட முன்வருவது கவிதையின் முழு வண்ணத்தையும் எழிலையும் அறியத் துணையாகும்.

அவ்வாறு துணை செய்யும் வகையில், எனது கெழு தகை நண்பரும், அண்ணமலைப் பல்கலைக் கழகத்தில் முன்னாள் என்னொடும் பயின்ற தோழரும், (ஒரு சாலை மாணாக்கரும்) இந்நாள் அப் பல்கலைக்கழகத்திலேயே ஆராய்ச்சித் துறையில் இலங்குபவருமான திருவாளர் மு. கோவிந்த சாமி எம். ஏ., அவர்கள், இம்முயற்சியில் ஈடுபட்டது பாராட்டத்தக்கதாகும்.

நண்பர் கோவிந்தசாமி அவர்கள் குன்றாத தமிழ் ஆர்வமும், பரந்த இலக்கியப் புலமையும், தெளிந்த நல் லறிவும், சிறந்த ஆய்வுத் திறனும் வாய்க்கப்பெற்றவர். எனவே 'திறன் ஆய்வினை'ச் சுவையுற நடாத்தியுள்ளார்.

பாரதிதாசன் அவர்களின் கவிதை மாண்பை அவரைப் போற்றுவோர் மட்டுமன்றித் தூற்றுவோரும் உணர இந்த ஏடு துணை செய்வதாகும். ஏனெனில் திரு. கோவிந்தசாமி அவர்கள் கருத்தளவில் புரட்சிக்கவிஞ ருடன் சில பல மாறுபாடு (வேற்றுமைக்) கொண்டவர்- இந்நூலிலும் ஆங்காங்கே அவற்றைக் குறிப்பிடத் தவற வில்லை. எனினும் புரட்சிக் கவிஞரை அவரது கவிதை மேன்மைக்காக, கற்பனை உயர்விற்காகச் சிறப்பித்து, அவரே பாரதியின் ஒரே வழித்தோன்றல், கவிதை வாரிசு என்பதைச் சான்றுகள் பல தந்து நிறுவியுள்ளது, புரட்சிக் கவிஞரின் தன்னிகரற்ற கவிதைத் திறனையும் மேன்மையையும், மாற்றாரும் மறுக்காது ஏற்றுப் போற்றத் துணை செய்வதாகும்.

இந்நூலின் - ஆசிரியர் நடுவுநிலை வழுவாமல், தன்னுள்ளத்தில் பட்டாங்கு இதனைத் தீட்டியுள்ளார். பாரதிதாசனார் கவிதைகள் அனைத்தையும்-பல்வேறு தலைப்புக்களில் பாகுபடுத்திக்கொண்டு - அவரது கவிதையை முற்றும் படித்தின்புறவேண்டும் என்ற ஆவலைத் தூண்டும் முறையில், - பற்பல கவிஞர்களை ஒப்புவமை காட்டி, நயத்தினைப் புலப்படுத்தி இனிமை தவழ வரைந்துள்ளார். கருத்தளவில் மாறுபாடு கொள்ளினும், கவிதைச் சிறப்பினை ஒரும் வகையில் பாரதிதாசனாருக்கு உரிய சிறப்பினை வழங்கியுள்ளார். எனவே இந்நூலினைப் போற்றுவதுடன் ஆசிரியரைப் பாராட்டுகின்றேன்! அவர் முயற்சி வெல்க என வாழ்த்துகின்றேன்.

வாழ்க புரட்சிக் கவிஞர்! வளர்க தமிழ் ஆர்வம்!

இங்ஙனம்,

9—9—57

க. அன்பழகன்

# முன்னுரை

இரண்டாண்டுகட்கு முன் ' பாரதி கவித்திறன் ' என்ற ஒரு நூலை எழுதினேன்; உடனே பாரதிதாசன் கவிதைகளைப் பற்றியும் ஒரு மதிப்பீடு எழுதவேண்டுமென்ற தூண்டுதல் உண்டாயிற்று; பாரதிதாசன் கவிதைகளில் முன்பு பார்க்காத நூல்களையெல்லாம் பார்த்தேன், முடிவில் நூல் எழுதிவிட வேண்டியதே என்ற விரைவுண்டானது. ஒரு சிறந்த கவிஞன் பாரதிதாசன் என்ற நம்பிக்கையாலும், என்னைப்போல ஒரு புலவன் என்ற ஆர்வத்தினாலுமே இந்நூலை எழுதினேன். எனது கட்சி ஒன்றே, தமிழ்க் கட்சி; சங்கப்புலவர்கள் மூவேந்தர்க்கும் பொதுவாக இருந்த மாதிரியே இன்றும் தமிழ்ப் புலவர்கள் கட்சிப் பொதுமை, பொறுமையுடையராக வேண்டுமென்பதே என் கட்சி. தமிழறிவோர் பாரதிதாசன் புலமையைப் பயன்படுத்திக்கொள்ளவேண்டும். திராவிடப் பற்றுடையோர் புலமையைப்பற்றிய மற்றையோரின் கருத்தென்னவென்பதையும் நினைக்க வேண்டும்; இவ்விரு நோக்குடனேயே இந்நூல் எழுதப் பட்டது.

இரண்டாவது நோக்கிற்கு இடம் சிறிதே அளித்திருக்கிறேன். கவிஞனின் கவித்திறனே நூற்றுக்குத் தொண்ணூற்றைந்து பங்கு காணப்பட்டுள்ளது. குறையையும் குறிக்காதது மதிப்பீடல்லவே, கண்ணை மூடிக்கொண்டு

கவிஞனை ஏத்தி ஏத்தித் திரிவதல்லவே! நிலைத்த புகழ்நூல் என்பதற்காகவே இடையிடையே இரண்டொரு குறைகளை அதுவும் வள்ளுவர் நாகரிகத்துடன் குறிப்பிட்டுள்ளேன். மேனாட்டறிஞரைப் பின்பற்றி உண்மையான ஈடுபாட்டுடன் இந்நூல் எழுதப்பட்டது. இதில் குறிக்கப்பட்ட குறைகள் பூவின் புறவிதழ் போன்றன, 200 பக்கத்துள் எல்லாம் சேர்ந்தால் 10 பக்கம் வரும் ; அதனையே நோக்கி 190 பக்கங்களை இழந்துவிடவேண்டாம். நாட்டிலுள்ள நிறைகுறைகளை எடுத்துக் காட்டுவதில் பாரதிதாசனது துணிச்சல் நமக்கும் வேண்டும் என நினைத்துத் தொடங்கினேன், எனினும் முழுவெற்றி பெறவில்லை. நிறைகள் நிறைய உள்ளன. கண்டு மகிழுங்கள் ; குறைகளைக் குறிப்பதில் சீறவேண்டாம், நினையுங்கள். எதிர்க் கொள்கையினரைச் சீறுங்காலம் மாறிவிட்டது ; மதிக்கும் காலம் இது. இந்நூலுக்கு இனியதோர் அணிந்துரையெழுதிய என் ‘உடன் தமிழ் கற்றோனாகிய’ தோழர் சீர் இளஞ்செம்மல் திரு. அன்பழகன், M.A., M.P. அவர்களுக்கு மிக்க நன்றியுடையேன்.

மு. கோவிந்தசாமி

# பாரதிதாசன் - 'கவித்திறன்'

## கவிஞனே!

பாரதிதாசன் ஒரு சிறந்த கவிஞனே. பாரதியின் **கவித்திறனைக்** கண்டவுடனே அவர் தாசனின் திறத்தையும் காணவேண்டுமென்ற விழைவுண்டானது. உள்ளத்தில் உணர்ந்தாலும், பாரதிதாசன் ஒரு கவிஞனா எனப் பலர் கேட்கின்றனர். கவிதையை அரசியல் கண்கொண்டு பார்க்கலாகாது. அதற்குத் தனிக்கண்-கலை 'ஞானக் கண்' வேண்டும். அதனாற்றான் சிவன் இரண்டு கண்களுக்கப்பால் மூன்றாவதொரு தனிக்கண் கொண்டு விளங்குகிறார்!

'யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல் இனிதாவதெங்குங்காணோம்; யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல் வள்ளுவர்போல் இளங்கோவைப்போல் பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை' என இசைக்கும் போது பாரதியின் உணர்ச்சியை மட்டும் நாம் ஒப்புவதில்லை; அவருடைய தீர்ப்பையும் நாம் தேர்ந்து ஏற்றுக் கொள்கிறோம்.

இது குடியரசுக் காலம். மக்கள் எதனை மதிக்கிறார்களோ அவர்கள் எதனை விழைகிறார்களோ அதனையே

மதிப்பவன், விழைபவன்தான் உண்மையானவன், உயர்ந்தவனுகிருன். ஆயிரம் இரண்டாயிரம் ஆண்டுகளாக ஆயிரக் கணக்கான புலவர் இந்நாட்டில் தோன்றிப் புகழ் பெற்றுள்ளனர். எனினும் மக்கள் கம்பனையே கல்வியிற் சிறந்தவன் என்றும் கவிச்சக்கிரவர்த்தி யென்றும் (தலைமைக் கவிஞன்) பாராட்டுகின்றனர். அவர்கள் மதிப்பீட்டை யொட்டியே 'கம்பனைப் போல்' என மூவரில் முதலில் வைத்தமையால் பாரதியின் தீர்ப்புத் திறனில் நாம் நம்பிக்கை வைக்கிருேம்.

அவரால் புகழப்பெற்றவர், கவியெனப் பேரிடப் பெற்றவர் பாரதிதாசன்.

'சுப்புரத்தினம் கவி இயற்றவல்லவன்' எனப் பாரதியே இவரது திறத்தை முதலில் எடுத்துணர்த்தினர். அப்போது தோன்றியதே 'எங்கெங்குக் காணினும் சக்தியடா' என்ற இசைக் கவி. இப்பாடலில் சக்தி இருந்தமையால் பாரதி அவ்வாறுரைத்தாரா, அன்றிப் பாரதி அவ்வாறு கூறிவிட்டதால் அக்கவிதையில் 'சக்தி' ஏறிவிட்டதா, அன்றிச் சக்தியே அப்பாடலுக்கு அடியெடுத்துக் கொடுத்தாளா அறியோம். கவிஞரின் சக்தியுள்ளதும் முதன்மை வாய்ந்ததுமான பாடல் இன்றளவும் அதுதான். 'சுப்பிரமணிய பாரதியின் கவிதா மண்டலத்தைச் சேர்ந்த கனகசுப்புரத்தினம் எழுதியது' எனப் பாரதியே அதற்குத் தலைப்பிட்டுச் சுதேசமித்திரனுக் கனுப்பினர்.

கம்பனது கவித்திறனைக் கூறுகையில் கூடித் தலையசைக்கும் நாம் கனகசுப்புரத்தினத்தின் கவித் தன்மையைப் பாரதி எடுத்துப் பேசும்போதும் செவிமடுத் திசைய வேண்டியவர்களாகவே இருக்கிருேம். அத்துடன் பாரதியுடன் பத்தாண்டுக்குமேல் பழகியவர் கவிஞர். பன்னீரியாண்டுகள் ஓராசிரியனிடம் பழகினுலே அவன் ஒரு உண்மை மாணவனுகிவிடுகிருன். பாரதியின் உணர்ச்சியோ ஒரு

நெருப்பு; அது தச்சன் பட்டறையன்று கடைந்தெடுப்பதற்கு! அந்நெருப்பில் சிறிது நேரம் பட்டாலும் அனைத்து மண்ணும் உருக்கும் கரைந்து உள்ளிருக்கும் பொன் ஒளியுடன் வெளிப் பட்டுவிடும்.

பத்தாண்டுகள் பழகியேவிட்டால் பேசவேவேண்டாம். பாரதியின் பரம்பரைக் கவிஞன்-வாரிசுக் கவிஞன் பாரதி தாசன் என்பதற்கு.

கவிஞனுக்குப் பழுத்த மொழியறிவும் நூலறிவும் வேண்டும். நல்ல சத்தும் இயல்புமுள்ள மாங்கொட்டையில் தான் நல்ல மாமரம் தோன்றும்; பழுக்கும்; இனிக்கும்.

பத்திரிகைத் தமிழைக்கொண்டு எழுதும் கவிதைகள் செப்படி வித்தைக்காரன் மாஞ்செடிகளே. பாரதிதாசன் சிறந்த தமிழ்ப்புலவர்; தமிழாசிரியராகவே பணி புரிந்து ஓய்வு பெற்றவர். தமிழாசிரியருக்காக மூவாண்டு புதுவை யில் தமிழ்க்கல்வி பயின்றவர். இலக்கண இலக்கிய மேம் பாடு மிகவுடையவர், யாப்பிலக்கணத் திறமும் வகைகளும் அவர் பாடலுள் அழகுற விளங்குகின்றன, பாரதி; வ. உ. சிதம்பரம் பிள்ளை; வ. வே. சு. ஐயர் முதலியோருடன் நீண்ட நாள் நெருங்கிப் பழகியவர். எனவே இவர் கவியாதற்குரிய தகுதிகள் முதலிலிருந்தே மிகுதியும் வாய்க்கப் பெற்றவர்; எனவேதான் தமிழ்த் தென்றல் திரு. வி. க. அவர்கள்,

'எனக்குக் குயிலின் பாடலும் மயிலின் ஆடலும் வண்டின் யாழும் அருவியின் முழவும் இனிக்கும்; பாரதிதாசன் பாட்டும் இனிக்கும்' எனக்கூறி மகிழ்கிறார். 'பாரதிரவே புரட்சி பாடும் புலமை'யினன் என நாவலர் சோமசுந்தர பாரதியார் நவில்கிறார்.

'எனது கவிகளும் என்னைப்போன்ற புலவர்களின் கவி களும் தமிழ்மக்கள் **உளத்தை** மகிழ்விக்கும் ஆற்றல் வாய்ந்தவை; அன்பர் பாரதிதாசனின் கவிதைகள் நாட்டின்

சமூகத்தின் மக்களின் **உயிரை** மகிழ்விக்கும் ஆற்றல் வாய்ந்தவை' என, நாவலர் வேங்கடசாமி நாட்டார் அவர் களே கூறினரெனில் கவிஞரின் தமிழ்ப்புலமையை அளக்க நாமெல்லாம் எதற்கு!

கவிஞனதற்குரிய இன்னுமோர் இயல்பு கவி-உணர்ச்சி யாகும். மக்கள் நிலையைக் கண்டெழும் உணர்ச்சியும் ஆத் திரமும் துடிப்பும் அவற்கியல்பாக இருக்கவேண்டும். அது நம் கவிஞரிடம் அளவாக இருப்பதைக் கடந்து சற்று அதிக மாகவும் இருக்கிறது. 'சில இடங்களில் அவரது கண்டனம் மிகவும் கடுமையாயிருப்பின் அதற்கு அவரது உணர்ச்சி மிகுதியே காரணமாகும்' எனப் பரலி. சு. நெல்லையப்பர் பகர்கிறார். பாரதியையும் அவரைச் சேர்ந்தோரையும் பற்றிப் பேசுவதற்கு நெல்லையப்பரை விட அதிக நெருக்க மானவர் யாருமில்லை. 'அவர் உள்ளத்திலும் உடம்பிலும் இளமையுடையவராகவே விளங்குகின்றார். அவர் ஓர் உண்மைக் கவியாயிருப்பதே அவரது இளமைக்குக் காரணம்' என அவரே மேலும் அளவிட்டுரைக்கிறார். இவ் வுணர்ச்சியே அவரை உண்மைக்கவியாக்கிற் றெனலாம்.

தனக்கென வாழாப் பிறர்க்குரியாளனாகச் செயலாற்று பவன் கொடையாளியாகிறான்; பேசுபவன் அரசியல் வாதி யாகிறான்; பிறர்க்கென நினைப்பவன் எழுத்தாளனாகிறான். அவ்வண்ணமே உணர்ச்சியால் வெம்மையுற்றுத் துடிக்கை யில் கவிஞனாகிறான். உணர்ச்சி அடங்காமல் விரைந்து வெளிப்படுமிடம் கவிதையாகும். இத்தகைய உணர்ச்சியும் துடிப்பும் இவரிடம் நிரம்ப இருப்பதால் இவரை ஒரு சிறந்த 'கவிஞரே' என்னலாம்.

## 'பாரதி' தாசன்

காந்திஜியின் வாரிசு நேரு ஆவார். பாரதியின் வாரிசு பாரதிதாசன் என்னலாம். இருவரும் தாம் இருக்கும் போதே தம் வாரிசை அறிந்துகொண்டனர்; குறித்தும் விட்டனர். வாரிசிருவரும் தம் நெறியில் ஒப்பற்றவரே. இப் போதைய கவிஞரெல்லாம் தம்மைப் பாரதிப் பரம்பரை என்று பெருமிதப்படுகின்றனர். எளிய பாடல் வகையால் உரிமை, பெண் விடுதலை, தமிழ் எனப் பாடுவோரெல்லாம் இப்பரம்பரை யென்ற கருத்து பரவியுள்ளது. எனினும் யானையின் ஒரு கன்று போன்று இதுவரைத் தோன்றிய பாரதிக் கவித்தோன்றல், பாரதிதாசன் ஒருவரே யாவர்.

அரசியல், சமூகம் முதலிய பல துறைகளிலும் நேரு காந்திஜியுடன் அடிப்படையில் இணைந்து மேலே சிலசில வேறுபாடுகளைக் கொண்டவர். ஆனல் பாரதிதாசன் அரசியல், போர்முறை ஆகியவற்றில் பாரதியுடன் அடிப் படையிலேயே வேறுபட்டுவிட்டார். சமயத்தைப் பொறுத்த வரை தாசன், நேரு இருவரும் தம் முன்னோருடன் முற்றிலும் வேறுபடுகின்றனர். பாரதி, சமயம் அரசியல் இவற்றில் இருந்துகொண்டே அவற்றுடன் உறவும் அன்பும் விடாமல், அவற்றைக் குறைகூறவோ தாக்கவோ செய்தார். ஆனல்

பாரதிதாசன் அவற்றைப் பிரிந்து ஒருவகை வெறுப்பும் காழ்ப்புங்கொண்டு தாக்குகிருர். இவற்றைத் திருத்த இந் நெறி இன்றியமையாததெனக் கருதுகிருர் போலும். எனவே தான் இவர்க்குப் 'புரட்சிக்கவி' என்ற பெயர் பரவி இருக்க லாம். பாரதியைவிட இவர் செய்யும் தாக்குதல் அதிகம். இவர்க்கு எதிரிகளும் மிகுதி. இந்நெறியில் துணிச்சலும் மிகுதி வேண்டும். இவற்றை யெல்லாம் எண்ணியே இவர் கவிகள் புரட்சிகரமானவையாகக் கருதப்படுகின்றன. மற்றும் இவரது முதல் கவிதைத் தொகுதியில் 'புரட்சிக்கவி' என்றதொரு சிறு காவியம் வருகின்றது. அதனைப் படித்த பின் அதன் அருமைகளை யறிந்தோர் அங்கு வரும் 'புரட்சிக் கவிஞனைகவே' இவரையும் பாராட்டத் தொடங்கினரோ அறியோம். அக்காவியத்தில் கவிஞன் நால் வருணத்தை நசுக்கி யெறிகின்ருன்; புவியாட்சியினின்று அரசனைத் துரத்திச் செல்வத்தையெல்லாம் நாட்டார்க்கே பொதுவாக்கு கிருன். இக்கருத்து இவரது பாடல் முழுவதிலும் பரவி நிற்கின்றது. எனவே, இத்தகைய மாபெரும் புரட்சியைக் கற்பனை செய்யும் இவரைப் 'புரட்சிக் கவி' என்றனர் பைந்தமிழர்.

> **'உய்வகை காட்டும் உயர் தமிழுக்குப்**
> **புதுநெறி நாட்டின் புலவன் பாரதி'**

இது பாரதியைக் கவிஞர் பாராட்டும் இடம். 'புதுமைக் கவி' பாரதியென இவர் அவரைப் போற்றுகிருர். இவர் புரட்சிக் கவி; புதுமையும் புரட்சியும் பிணைந்தவையே. புதுமையான விடுதலையை வேண்டி, பறையருக்கும், மாதருக்கும், ஏழை கட்கும் மாற்றத்தை அதன்வழி எண்ணினர் பாரதி. அம் மாற்றங்களிலேயே நேரத்தையும் கருத்தையுமெல்லாம் நிலவவிட்டார் புரட்சிக் கவிஞர். பொருளாதாரப் பொதுமை, சமூகம், பெண் விடுதலை, தமிழ் பற்றிய வகைகளிலெல்லாம் இருவர் போக்கும் ஒன்றேயாம். சமயத் திருத்தத்திலும்

பாரதி வேறுபட்டவரல்லர். பாடுந் திறனில் பாரதியைக் கவிஞர் முழுதும் பின்பற்றுகிறார்.

பாரதியைப் பற்றிக் கவிஞர் பாராட்டியுள்ளதுபோல இதுவரை வேறெவருமே கூறவில்லை. இதுகொண்டு பாரதியைப்பற்றிப் பேசவும் மதிக்கவும் பாரதிதாசனை விடத் தகுதியும் நெருக்கமுமுடையோர் வேறெவருமில்லை யெனலாம்.

**' தமிழகம், தமிழுக்குத் தரும் உயர்வளிக்கும்**
**தலைவனை எண்ணித் தவங் கிடக்கையில்**
**இலகு பாரதிப் புலவன் தோன்றினன் '**

என நெஞ்சாரப் புகழ்கிறார் கவிஞர். தமிழகம் தவங்கிடந்து பெற்ற தலைவற்கு இவரே தாசனானது வியப்பில்லை.

கொல்லா நோன்பு நிலைபெறச் சமண மதத்தையும், முத்தியை அனைவர்க்கும் பொதுவாக்கி வடகலையை வெறுத்துத் தென்கலைவை உயர்த்த இராமாநுசரையும், சமரச சன்மார்க்க சமயத்தைக் காண இராமலிங்கரையும்' பொதுவுடைமையை நாட்ட லெனினையும், ஏழை செல்வர் ஏற்றத் தாழ்வைப் போக்க விக்டர் யூகோவையும், தமிழக மும் உலகும் பெற்றமை பற்றிப் பேருவகை யடைகிறார் கவிஞர். அதேபோலத் தமிழகம் தமிழுக்குயர்வளிக்கத் தவஞ்செய்து பாரதியைப் பெற்றதாம். இவ்வாறு பாரதியின் வரிசையை விளக்கஞ் செய்கிறார். இவரும் பாரதி, தாசன் ஆதலாலே இவ்வரிசையில் தனக்குமோர் இடம் பெற வேண்டும் என உயரிய குறிக்கோள்கள் உடையராக வேண்டுமன்றோ? அவை இவர்தம் பாடலுள் அமைந்து நிற்பனவாகவே அறிகிறோம்.

வசனமட்டும் நித்தம் எழுதுமாறும் பாட்டு எழுத வேண்டாமென்றும் சென்னைப் பத்திரிகையொன்றன்

ஆசிரியர் எழுதியதுபற்றிப் பாரதி புலம்பினராம். 'பாட்டின் பயனறிய மாட்டாரோ நம் தமிழர், பாட்டின் சுவையறியும் பாக்கியந்தான் என்றடைவார்' என ஏங்கினராம். அவ் ஏக்கத்திற்கோர் ஆறுதலாகவே இவர் எழுத்தாளராகாமல் 'கவி'யாகவே திகழ நினைத்துவிட்டார் போலும்! செய்யுளும் காவியமுமே ஒரு நாடு மற்றொரு நாட்டைப் பார்த்துக் காப்பியடிக்க முடியாத செல்வமெனத் திரு. வி. க. இளமை விருந்தில் கூறுகிறார். செய்யுள் சிறந்த நாட்களிற்றான், செய்யுளின்பம் மக்களால் விழையப்பட்ட காலத்திற்றான் தமிழகமும் உலக நாடுகளும் ஒதுங்கியிருந்துள்ளன.

பாரதியின் தமிழ்ப் பாடல்களை ஆங்கிலத்தில் பெயர்த்து உலகமெங்கும் பரப்பத் தொடங்கிவிட்டனர். 800 ஆண்டுகளாய்க் 'கவிஞர்' இந்நாட்டில் தோன்றவில்லை என்ற வ. வே. சு. ஐயர் மனம் இதனால் மகிழ்ந்ததாம். அதாவது, கம்பனுக்குப் பின் பாரதிதான் 'கவிஞன்' என்பது கருத்து.

**'தாயாம் தமிழின் தரும்கவியின் நற்பயனைச்**
**சேயாம் தமிழன் தெரிந்துகொள்ள வில்லை**
**அயலார் சுவைகண் டறிவித்தார்'**

என்றாராம் பாரதி. வரலாறு, மொழிநூல் துறைகளில் ஆங்கிலேயர் நமக்காக எவ்வளவோ பணிசெய்துள்ளனர்

**' சாதி களைந்திட்ட ஏரி–நல்ல**
**தண்டமிழ் நீரினை ஏற்கும்–சாதி**
**வேரைப் பொசுக்குங்கள் என்றே**
**என்றுரைப் பார்என் னிடத்தில்-அந்த**
**இன்ப உரைகளென் காதில்,**
**இன்றும் மறைந்திட வில்லை-நான்**
**இன்றும் இருப்பதனாலே'**

இது பாரதிக்கும் கவிஞர்க்குமிருந்த பழக்கத்தைப் பற்றியது. ஜான்சனைப்பற்றி பாஸ்வல் கூறும் வாழ்க்கைக் குறிப்புக்

களைக் கேட்கையில் உள்ள ஆர்வமும் இன்பமும் இவ்விடங்களில் உண்டாகின்றன.

'கந்தையை எண்ணுவ தில்லை—கையிற்
காசை நினைப்பது மில்லை
செந்தமிழ் வாழிய வாழி—நல்ல
செந்தமிழ் நாடென்று வாழ்ந்தார்'

பாரதி, என்கிறார். கோவணத்தைக்கூட விரும்பாத ஜைன முனிவர்கள்தாம் தமிழ்மொழிக்கு எல்லையற்ற தொண்டு செய்துள்ளனர்!

மகாகவி என்ற தலைப்பில் இவர் பாரதியைப்பற்றிக் கூறிய பாடல் ஒப்பற்றதாகும். பாரதியார் உலககவி எனத் தொடங்குகிறார்.

'ஒருருக் கொருநாட்டுக் குரியதான
ஒட்டைச்சாண் நினைப்புடையர் அல்லர்'

என்கையில் யாதும் ஊரே என்ற புறநானூற்றுப் புலவன் கனவு நனவாகிவிடுவதாய்த் தென்படுகின்றது. ஒட்டைச் சாண் என்ற வழக்குச்சொல் கருத்தை அடித்துப் பேசுகிறது.

'சீருயர்ந்த கவிஞரிடம் எதிர்பார்க் கின்ற
செம்மைநலம் எல்லாமும் அவர்பாற் கண்டோம்'

என்கையில் 'யாமறிந்த புலவரிலே' எனப் பாரதி பாடுகையில் அவர்க்கிருந்த அறிவும் நம்பிக்கையும் இங்குப் பாரதி தாசனுக்கு இருக்கக் காண்கிறோம். 'தங்குதடையற்ற உள்ளம் சமத்வ உள்ளம், இராதமெதன ஒன்றில்லாப் பெரிய உள்ளம்' அவர் உள்ளம் என்கிறார். இங்கு இவர் உள்ளம் நன்கு இலங்குகிறதல்லவா?

**தராதலத்துப் பாஷைகளில் அண்ணல் தந்த**
**தமிழ்ப்பாட்டை மொழிபெயர்த்தால் தெரியும் சேதி**

என்ற வரிகள் கவியாகத் தோன்றவில்லை. ஏதோ பாரதி தாசனே எதிரில் இருந்து பேசுவதுபோல இருக்கிறது! கண்டிப்பாக வெட்டெனப் பேசுபவர் பாரதிதாசன் என்பர், அது இங்குப் புலனுகின்றது.

**'கூனர்களும் குவலயத்தை அளாவும் வண்ணம்**
**கொட்டிவைத்த கவிதைதிசை எட்டும் காணும்**
**ஞானரதம் போலொருநூல் எழுதுதற்கு**
**நானிலத்தில் ஆளில்லை'**

உண்மையைச் சொல்லுகையில் கவிதை நெகிழ்ந்தோடு கிறது; உறுதியுடைய சொற்களெல்லாம் வந்து விழுகின்றன. கொட்டிவைத்த, திசை எட்டும் காணும் என்ற தொடர்கள் பாரதியின் எட்டுத் திக்குமெட்டக் கொட்டுமுரசே, பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை என்ற தொடர்களை நினைவூட்டு கின்றன.

சில்லாண்டுகட்கு முன், பாரதியைப் போற்றியோரே,

**'உலககவி அல்லஅவர் எனத் தொடங்கி**
**ஐயர் கவிதைக் கிழுக்கும் கற்பிக்கின்றார்'**

எனப் பாரதிதாசன் ஏக்கமும் எரிச்சலுமடைந்துள்ளார். என்னதானிருந்தாலும், இராவணனிறந்தால் அழுபவன் வீடணு மற்றவரா? அன்று கவிஞர் செய்த கிளர்ச்சிதான் இன்று பாரதியை அனைவரும் பரவுவதற்கு ஒரு காரண மென்னலாம். இன்று, கவியென்றால் அது எங்கிருந்து வந் தாலும் ஏற்று வாழ்த்தும் நிலையும் வந்துள்ளது.

இது நாடு வாழத் தொடங்கிவிட்டது என்பதற் கடை யாளமாம்.

ஒருமுறை மதுரைத் தமிழ்ச் சங்கத்தார் அமைவான பாட்டுக்களிப்போம் பரிசென்று, பாட்டெழுதி அனுப்புமாறு கேட்டனராம். நண்பர், பாரதியைத் தூண்ட பாரதிக்கு அவ் வகையில் பாட்டெழுத நம்பிக்கையில்லை போலும், நண்பர்க் காகப் பாடினுராம் செந்தமிழ்நாடெனும் பாட்டு.

**'காதினிக்கும் நல்ல கருத்தினிக்கும் பாட்டிந்நாள்**
**மேதினியிற் சோதி விளக்கு'**

என்கிருர் இங்குப் பாரதிதாசன். இவ்வாறினிக்கும் பாடல் கள் ஒரு கவிஞனிடம் பல தோன்றிவிடுமானுல் அதுவே தமிழன் பரவும் 'கார்த்திகை விளக்காம்'.

மார்கழிமாதம் காலையில் நண்பரொருவர் 'திருப்பள்ளி யெழுச்சி' பாடித் தருமாறு பாரதியைக் கேட்டாராம். காலை அமைதியில், நெஞ்சு குளிரும் நெடுமரச் சாலையில் கோல நடையிற் குதிக்கும் மகிழ்ச்சியால், காலை மலரக் கவிதை மலர்ந்ததாம், அது 'ஞானப்பொழுது புலர்ந்தது' என்ற பாடலாம். 'ஞான' என்ற அடைமொழியால் அப் பாடலை எத்தனை மேம்பாடாக மதிக்கிருர் கவிஞர் எனத் தெரி கின்றது. கவி தோன்றுவதற்குரிய சூழ்நிலையும் ஞானத் திருப்பாவை, திருவெம்பாவைகள் தோன்றுவதற்குரிய காரணங்களும் இங்குத் தெளிவாகின்றன. இதனைக் கூறும் கவிஞரின் கவிதையும் கவினுடையதாகவே காணப்படுகிறது.

ஒருநாள் பாரதி நண்பருடன் நாடகம் பார்த்தாராம். நாடகத்தில் ஒரு மன்னன் விஷமருந்தி மயங்கி உயிர்வாதை அடைகின்ற சமயம் 'என்றனுக்கே ஒருவித மயக்கந்தானே வருகுதையோ' எனும் பாட்டைப் பாடினுனம். வாய்பதைத் துப் பாரதி,

**மயக்கம் வந்தால் படுத்துக்கொள் வதுதானே**
**வசங் கெட்ட மனிதனுக்குப் பாட்டா,**

என்றாராம். இவ்விடத்தில் பாரதிமட்டுமல்ல, அதனைக் கவிஞர் எடுத்துச் சொல்வதும் நமக்கு நகைச்சுவையை உண்டாக்குகிறது. பாரதிதாசன் நகைச்சுவைப்பட உரையாடுபவர் என்பார் கூற்றுக்கு இவ்விடம் ஒரு எடுத்துக்காட்டாகலாம். கவி-நாணயத்தில் இரு பக்கங்கள் அவலமும் நகைச்சுவையும் இங்கு நகைச் சுவை நிறைபெறுகிறது.

மற்றும் பாரதிதாசன் கவிதைகளைப் படிக்கும்போது பாரதியின் உணர்ச்சியையும் கவிக்கருத்தையும் மனக்கண் முன் கொண்டு வருமிடங்கள் மிகப் பல. அவற்றை ஆங்காங்குச் சுவைப்போம்.

## பரம்பரை

பண்டுதொட்டு வரும் தமிழ்ப்புலமைப் பரம்பரையைச் சேர்ந்தவரே பாரதிதாசன். இதனைக் கூறும் காரணம், இப்போதைய கவிஞர்கள் பழம்புலவர்ப் பரம்பரையெனத் தம்மைக் கூறிக்கொள்ள வெட்கப்படுகின்றனர்; வெறுப்படைகின்றனர். தம்மை ஏதோ புதுப் பரம்பரையாக, பெரும் புரட்சி கண்டவராக எண்ணி இறுமாந்து நிற்கின்றனர்.

கம்பனைப்போல் வள்ளுவர்போல் இளங்கோவைப் போல எனப் புலவரைப் போற்றினர் பாரதி. அவருள் 'வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ்நாடு' எனவும் தெளிவுறுத்தினர். தமிழ்க் கவியை விளக்கியவன் கம்பன். பண்பையும் அறிவையும் விளக்கியவர் வள்ளுவர் என்பது பாரதி கருத்து. கம்பனைப் பற்றிய கருத்தில் கவிஞர் வேறுபடுகிறார், வள்ளுவர் பற்றிய விடத்தே பாரதியுடன் ஒன்றுபடுகிறார்.

**பன்னீ ராயிரம் பாடிய கம்பனும்**
**இப்பொது மக்கள்பால் இன் தமிழ் உணர்வை**
**எழுப்பிய துண்டோ இல்லவே இல்லை**

என்பது இவர்தம் கருத்து. இங்கே கவிஞர் கருத்துடன் கவிநலம் தமிழ்நலம் அறிந்தோர் அநேகரும் வேறுபட்டேதீருவர்.

கல்வியிற் பெரியவன். கவிச்சக்கிரவர்த்தி எனப் பொதுமக்களால் அறியப்பட்ட புலவன் கம்பன். ஒரு புலவன் மற்ருெரு சிறந்தபுலவனை இத்தகையகாழ்ப்புடன்காண்பது தமிழுக்கே கூட தீமையேயாகும். இங்குக் கட்சிக்கண் (அரசியல்) கொண்டு நோக்கத் தொடங்கிவிட்டார். கவிதைக்கு இக் கண் கூடாதெனு முதலிலேயே கூறிஞேம். தமிழெனும் நறவ மாந்தி கவிதைக்கே முதலில் தமிழ்வெறி யூட்டியவன் கம்பனே என்னலாம்.

வெறுப்புடன் அவனைப் பின்பற்றுகிருர் கவிஞர் ஓரிடத்தில்; அங்கு வெற்றி கிடைக்கவில்லை.

கவிதைக் தொகுதியில் பூசணிக்காயைப் பாடுகிருர். 'கைவண்ண மங்கு கண்டேன் கால்வண்ண மிங்கு கண்டேன்' என்பது கம்பர் பாடல். அகலிகைச் சாபநீக்கத்தில் ராமனின் கால்வண்ணத்தையும், தடாகை வதத்தில் அவன் கை வண்ணத்தையும் கண்டதாகப் பாராட்டுகிருர்.

'இங்குக் கைவண்ணம் அங்குகண்டேன் கறிவண்ணம் இங்குக் கண்டேன்' என்பது கடைசிவரி. வீடுகட்டப் பூசணியைத் தொங்கவிடுகையில் அதன் கைவண்ணமும், கறி செய்துண்கையில் கறிவண்ணமும் காண்பனவாம். அங்குத் தாடகையை அழித்ததில் கையின் வண்ணம் தெளிவு பட்டது, ஆனல் இங்குப் பூசணிக்காய் ஒன்றும் வீடு கட்டவில்லை; அடையாளமே. கற்பனையில்தான் கைவண்ணம் காண்கிறது.

கவிஞன் மற்ருேர் கவிஞனைப் பின்பற்றுகையில் ஆர்வமும் அன்பும் இருந்தாலன்றிக் கவி சுவைக்காதென்பது இதனல் புலனகின்றது.

வள்ளுவரை நினைக்கையில் பாரதியைத் தாண்டி ஒரு படி மேலே கூடப் போய்விடுகிருர் கவிஞர். பூமிதனில்

பிறந்ததில்லை என்கிறார் பாரதி. பின்னும் பிறக்கப்போவ தில்லை என்றுகூட இயம்புவார்போலும் இக்கவிஞர். 'தொன்னூற்படியில்லை, திராவிடர் தூய கலை யொழுக்கம் பின்னூற் படியிற் பெறும்படி இல்லை' எனப் பேசுகிறார். 'ஆரியர் நான் மறைபோல் அத்திப் பழமன்று; தித்திக்கும் முப்பழம்' திருக்குறள் என்கிறார்.

**'வள்ளுவனைப் பெற்றதாற் பெற்றதே**
**புகழ் வையகமே.**

தமிழகம் வள்ளுவனை உலகிற்கீந்து உயர் புகழுற்றதென் பவர் பாரதி. ஆனால் வையகம் வள்ளுவனை ஏற்றுக்கொண்டு புகழ்பெற்றது என்கிறார் கவிஞர் பாரதிதாசன். இங்கும் பாரதியை விஞ்சி விடுகிறார். தன் புகழுக்கு வள்ளுவனைத் தருவது செய்தாகவேண்டுவதே, ஆனால் உலகம் அவரை ஏற்றுக்கொண்டதே பாராட்டற்குரியது. குறளால் உலகிற்கே புகழ் என்ற கருத்தே மேம்பாடானது.

**பழந்தமிழ் நாட்டின் பண்பே பண்பென**
**அன்னார் ஆய்ந்த அறமே அறமென**
**ஒழுக்கமே ஒழுக்க இலக்கணம் ஆமென**
**வள்ளுவர் நாட்டினர்**

என இவர் நாட்டுகிறார். 'சமயக் கணக்கர் மதிவழி கூறாது, உலகியல்கூறிப் பொருளிதுவென்ற வள்ளுவன் என்றார் மன்னுகல்லாடனார்' எனக் கல்லாடனார் கருத்தை ஒப்புகிறார். வள்ளுவர் எந்த மதத்தையும் சார்கிலார், சாங்கியமதமன்று தத்துவ நூலே (குறள்) என்பது கவிஞர் கருத்தாம்.

வள்ளுவரே இவர்க்குத் தெய்வம்; அவரை உள்ளாத இடமேயில்லை. வள்ளுவர் வாய்மொழியையே அடிக்கடி கவிதையில் பொன்னேபோற் போற்றுகிறார். குடும்ப விளக்கில் மனையாளுக்குரைப்பதும் அவர் மணிமொழியே :

**'வள்ளுவனுர் சொன்னுர் அதனைநீ எப்போதும்**
**உள்ளத்தில் வைப்பாய் ஒருபோதும் தள்ளாதே'**

இவர் காட்டும் வாழ்வின் அடிப்படையே வள்ளுவர் குறள். மக்கள் படித்ததாகக் கேட்க விழைவதும் அம் மணி மொழியே.

ஒன்றே குலமென அகவல் பாடிய கபிலரை அடிப்படையாகக் கொண்டு வள்ளுவர் குறள் இயற்றினுர் எனக் கபிலரைப் போற்றுகிருர். இரண்டாம் கவித் தொகுதியில் தகைகொண்ட அன்னை நிலமே, அழகுசேர் அன்னை நாடே என அழைத்துப் பல பாடல்களைப் பாடுகிருர். அங்கெல்லாம் தாயுமானவரின் 'எங்குநிறைவான பரமே' எனவெல்லாம் விளித்துப் பாடும் பாடல் நினைவுகள் வருகின்றன. கருத்துக்களும் தாயுமானவர் பாடலுடையனபோல நினைக்கச் செய்வனவாகவுள்ளன.

' தவிப்பதற்கோ பிள்ளை ' என்ற பாடல்களைப் படிக்கும் போதெல்லாம் திருவருட்பாவின் பாவமைப்பும் ஓசை நயமும் மனதிலுறுகின்றன.

**தளையவிழ்ந்து செக்கச்சி வந்த மலர்போலே**
**தமிழ்நிலஞ்சி றக்கப்பு ரந்த இறைபோலே [காணீர்.**
**தலைசிறந்த முத்தைச்சொ ரிந்த அலைமேலே – கதிர்**

தைப்பொங்கல் வாழ்த்தில் கதிரவன் வருணனை. 'உலகமுவப்ப வலனேர்பு திரிதரு பலர்புகழ் ஞாயிறு கடற்கண்டாங்கு' முருகன் நினைவைக் கொண்டுவருகிருர் நக்கீரர். இங்கும் அதே கதிரவனைக் காட்டி அம் முருகபக்தி முறுகிய அருணகிரிநாதரை நினைவூட்டுகிருர் கவிஞர். கருத்தால், யாப்பால், வண்ணத்தால் எல்லாம் தன் பரம்பரை முன்னோர் யாரென அறிவிக்கிருர் கவிஞர் இவ்விடங்களில்.

தான் வெறுக்கும் வடநாட்டிலே தமிழை விதைத்த ஒரே புலவர் குமரகுருபரரிடம் அளப்பற்ற ஆர்வங் காட்டு

கிறுர் எதிர்பாராத முத்தத்தில். தொடுக்குங் கடவுட் பழம் பாடல் என்ற கவி மீனுட்சியம்மையையும் தமிழகத்தையு மட்டும் தளிர்க்கச் செய்யவில்லே. இவரது நெஞ்சத்தையும் நனையுமளவு தொட்டிருக்கிறது. அப்பாடல் முழுவதையுமே எடுத்தாண்டுவிடுகிறுர் தம் பாடலில்.

**‘ அமுதப் பாட் டாரம் பித்தான்**
**அப்பாட்டுக் கிப்பால் எங்கும்**
**சமான மொன் றிருந்த தில்லே ’**

என்பது இவர் தம் உள்ளம். இன்னெரு முறை பாடும்படிக் கேட்டாளாம் பெருமாட்டி தொடுக்கும் கடவுட் பாடலே. பின்பும் குருபரர் பாடியது தமிழ்க் கனி பிழிந்ததாக இருந்த தாம். பிராட்டி கேட்டு மறைந்ததைக் கற்பனே செய்கிறுர் கவிஞர்.

**ஏட்டினின் றெழுத்தோ டோடி இதயத்துச் சென்ற தாலே**
**கூட்டத்தில் இல்லே வந்த குழந்தையாம் தொழும் சீமாட்டி.**

கடவுளேப்பற்றிக் கவலேப்படாத கவிஞர்க்கும் இவ்விடத்திய கடவுள் நிகழ்ச்சி கருத்தை யீர்த்துள்ளது. இங்கே இவர் பாடலேயும் இன்னுமோர் முறை பாடிக் கேட்கவேண்டும் போலுள்ளது. இப்பாடலும் ஏட்டினின் றெழுத்தோடோடிப் புக்கு நம் இதயமெய்திவிடுகிறது.

பிற இலக்கியங்களில் நெஞ்சை அள்ளும் இடங்களே யெல்லாம் அதே சுவை குறையாமல் தோற்றும்படிப் பாடுவதெனில் அது புலமைப் பரம்பரையில் வந்தோர்க்கே வாய்ப்பதொன்றும்.

## சக்திப் பாடல்

**எட்கெங்குக் காணினும் சக்தியடா – தம்பி**
**ஏழு கடல் அவள் வண்ணமடா**

இதுவே முதற்கவிதையென முன்பே கூறினோம். இப் பாடலை எழுதி மேலே பாரதி பாடியது எனத் தலைப்பிட்டாலும் யாரும் மறுக்கமாட்டார்; பாரதியின் சக்திப் பாடலுள் ஒன்றேயென மயங்குவர். காளமேகப் புலவருக்குச் சக்தியே நாவில் எழுதினாளென்பர். இவர் நாவில் இப் பாடலைச் சக்தி முதலில் எழுதி மறைந்தாளோ தெரியவில்லை. சக்தியைப்பற்றிய பாட்டும் சக்தியுடையதேயாம். பாரதியின் சாயலடித்த பாட்டாகலாம் இது. நம் நாட்டில் பழக்கம், ஒரு செயலைத் தொடங்குகையில் கடவுளை நினைத்துப் பிள்ளையார் சுழியிட்டுத் தொடங்குவது. பின் அச் செயலில் கடவுள் தொடர்போ நினைவோ இருக்கவேண்டுமென்பதில்லை. அதுபோல இவர் கவிதை சக்திப் பாடலைப் பிள்ளையார் சுழியாகக் கொண்டு தொடங்கியுள்ளது. இக் காலத்தில் பிள்ளையார் கவலையும் அற்றதால் இவர் கடவுட் கொள்கையுடயவரா என்ற ஐயமும் ஏற்பட்டது.

பாரதியைப் பெரியவராகக் கருதும் இவர், வள்ளுவர் சொல்லை வேதமாகக் கொள்ளும் இவர் கபிலரையும் குமர

குருபரரையும் இராமாநுசரையும் பாராட்டுமிவர் கடவுட் கொள்கைக்கு எதிரியாகத் தோன்றவில்லை. அதுவும் தன்னிடம் கடைப்பிடி இல்லையேனும் பிறரிடம் 'கடவுள் என்ற அளவில் இருப்பதானல் அக்கோட்பாட்டைக்' கண்டிப்பவராகவோ வெறுப்பவராகவோ தோன்றவில்லை.

சமயத்தை வெறுக்கிருர் ; திருத்தங்களைப் பேசுகிருர். இது மேலே இவரால் போற்றப்படும் எல்லாரிடமும் இருப்பதே.

இனி, எங்கெங்குக் காணினும் என்ற பாடலில் கடவுட்டன்மையின் மூலவுண்மையை மெய்ப்பிக்கிருர். சக்தியை மங்கையாக உருவகிக்கும் இவர் ஏழு கடல் அவள் வண்ணம் என்கிருர். மற்ருேர் இலக்கியத்தும் சக்தி நீலமேனி (கடல்வண்ணம்) வாலிழையாகவே நினைக்கப்படுகிருள். பலநிற உடைகள் பூண்டு பரவச முறுத்துமோர் பருவ மங்கையர் என்பதற்கேற்ப இம்மங்கையின் சாயலும் ஏழு கடலால் எடுப்பாகின்றது. சாயலால் கவரப்பட்ட கவிஞர் இன்னும் நெருங்கிச் சக்தியின் செயலைக் காண்கிருர். வரிப்பந்தாடும் வண்ணமங்கையர் சக்தி.

**தங்கும் வெளியினில் கோடியண்டம் – அந்தந்**
**தாயின்கைப் பந்தென ஓடுமடா**

என்கிருர். அலகிலா விளையாட்டெனக் கண்டுவந்தார் கம்பர் கடவுள் நிலையை. கவிஞர் இன்னும் நெருங்கி மங்கையின் இளநகையையும் நகைப்பொலிவையும் கண்டின்புறுகிருர்.

ஏழு முகிலினமும் கர்ச்சனை செய்வது மங்கை நகைத்த ஒலியெனலாம், அவள் மந்த நகையங்கு மின்னுதடா என்கிருர். தலைவன் பாங்கனிடம் தலைவியின் இயல்பும் இடமும் கூறுவதாக உள்ளது இக்கற்பனை. பாரதியின் கண்ணம்மா பாடற்போக்கை இது பின்பற்றுகிறது.

இயற்கை உடலாக, இலங்குவது கடவுள். வள்ளுவர் கடவுளை வான் (மேகம்) சிறப்பில் வழிபட்டார். இங்கும் மேகம் சக்தியை இலங்கச் செய்கிறது. இதுவரை கடவுளின் புறத் தோற்றம்; இனி அகத்தோற்றம் அரும்புகிறது.

**காளை ஒருவன் கவிச்சுவையை-கரை**
**காண நினைத்த முழுநினைப்பில்-அன்னை**
**தோளசைத் தங்கு நடம்புரிவாள்-அவன்**
**தொல்லறி வான திறம்பெறுவான்-ஒரு**
**வாளைச் சுழற்றும் விசையினிலே-இந்த**
**வைய முழுவதும் துண்டு செய்வேன்-என**
**நீள இடையின்றி நீநினைத்தால்-அம்மை**
**நேர்படுவாள் உந்தன் தோளினிலே.**

வாளுக்கு மட்டுமின்றி பேனாவுக்கும் அவள் வலிமை தருகிருளாம்.

**'நாடிப் புலங்கள் உழுவார் கரமும் நயவுரைகள்**
**தேடிக் கொழிக்கும் கவிவாணர் நாவும்'**

உவந்து நடம் ஆடிக் களிக்கும் மயிலைக் கலைமகள் என்கிருர் கவி தேசிகவிநாயகம் பிள்ளை. இங்கு ஏருக்கும் கவி நாவுக்கும் சக்தியளிக்கிருள் அன்னை. 'கொள்ளை இன்பம் குலவு கவிதை கூறு பாவலர் உள்ளத் திருப்பாள்' என்கிருர் பாரதி.

**'பாம்பை யடிக்கும் படையே சக்தி**
**பாட்டினில் வந்த களியே சக்தி'**

என்பார் பாரதி பிறிதோர் இடத்தில்.

இங்ஙனம் சக்தி மனிதனின் புறவலிவையும் அகவலிவையும் அருளுபவளாகிருள். எத்தனையோ இன்ப எண்ணங்கட்கும் தத்துவங்கட்குமெல்லாம் இடமளிக்கிறது இச் சக்திப் பாடல்.

# குடும்ப விளக்கு

பாரதிதாசன் கவிதைகளின் ஒரு நல்ல பகுதி 'குடும்ப விளக்கு'. இதுவரை ஐந்து பகுதிகள் வந்துள்ளன. குடும்ப வாழ்வை அழகுறக் கூறுவதே பாடற்கருத்து. திருமணம், மக்கள், விருந்தோம்பல், முதியோர் காதல் என்பன இதன் பிரிவுகள். முதலில் குடும்ப விளக்கென்றே ஒரு பகுதி வந்துள்ளது. பின்பு மக்கள், விருந்தினர், முதியோர் குடும்பத்தில் பெருக வீட்டின் அளவும் பெருகுகிறது ; விளக்குகள் பல வேண்டப்படுகின்றனவன்ருே? அதுபோலவே காவியமும் பெருகியுள்ளது.

முல்லைமலர் தமிழ்நாட்டிற்கு எளிமையும் அருமையும் ஆனதுபோல முல்லைக் கற்புடைய குடும்ப-விளக்கும் கவிஞர் பாடல்களில் எளிமைக் கெளிமையும் அருமைக் கருமையும் உடையது. காவியத்தில் இது ஒரு புதிய நெறியெனலாம். மற்ற காவியங்கள் பாண்டியன் பரிசு, எதிர்பாரா முத்தம் போன்றவை. இயற்கை, தமிழ், தொழிலாளர், பெண்கள், விடுதலை, பொருளாதாரம் பற்றியெல்லாம் யாவரும் பிறரும் எழுதியவை. ஆனல் இத்துறை ஒப்பற்றதாகும். பாரதிதாசனுக்கேயுரிய காவியத்துறை இதுவெனலாம். முருகன் வழிபாடு, தமிழிசை, நடராச தாண்டவம் முதலிய தமிழகத்

திற்கே உரியனபோல குடும்ப விளக்கு கவிஞர்க்கேயுரிய புதிய பண்புத் துறையாம்.

ஒரு நாட்டு மக்கள் பழக்க வழக்கங்களை யறிவோர்க்கும் வரலாற்றுக்கும் இந்நூல் மிகுதியும் துணையாகும். காவியக் கருத்தில் தமிழகத்தார்க்குப் புதிதென ஒன்றுமில்லையாயினும், அன்றாட வாழ்க்கையை, இன்றைய தமிழர் மணமுறையை, குழந்தைப்பேற்றினைத் தொகுத்து வரிசைப் படுத்தி ஆங்காங்கே உரிய உயர்ந்த கோட்பாடுகளைக் கூறி எழுதுவது நல்லதேயாம். சங்கப் பாடலுள் அகவாழ்வினை, ஆயிரம் பாடல்களைத் தனித்தனிப் படித்து இணைத்த பின்னரே அறிய முடிகிறது. வெறியாடுதல், மடலூர்தல் என்றால் அவற்றின் இயல்பை ஓரிடத்தில் காணமுடியவில்லை ; ஒரு பெரிய ஆராய்ச்சியே நடத்த வேண்டியுள்ளது.

இதனை ஒரு காவியமென்றே இயம்பிவிடலாம். அன்றாட வாழ்க்கைச் செயல்களைத் தொகுக்கிறார். அன்றிச் சிறுகதை செப்புதல்போலத் தமிழ்நாட்டுத் திருமணத்தைத் தெளிவிக்கிறார். மனைவி, மக்கள், விருந்து, பெற்றோர், முதுமை என வாழ்க்கை முழுதுமே படம் பிடிக்கப்பட்டுள்ளது. எனவே இஃதொரு முழுநூலே எனலாம். இவ்வாழ்விற்கு வழிகாட்டி அடிப்படை அனைத்தும் முற்கூறியாங்குத் திருக்குறள்தான் ! சாதாரணமாய்த் தோன்றும் அன்றாட நிகழ்ச்சிகளெல்லாம் அழகுற, செம்மைபெற, கற்பனை கெழுமப் பேசப்படுகின்றன.

குடும்பமே விளக்குதான். மணமாகாத ஆண் பெண் வாழ்வு, குழந்தையில்லாத வீடு எல்லாம் இருண்டே கிடக்கின்றன. ‘ குடிக்கு விளக்காகிய புதல்வர் ’ என்றே அகநானூறு மொழிகின்றது. ‘ மங்கல மென்ப மனைமாட்சி ’ என்கிறார் வள்ளுவர். ‘மனைக்கு விளக்கம் மடவாள்.’

## முதற்பகுதி

*வீட்டில் விளக்கேற்றி வைக்க வருகிருள், அவளும் விளக்கு. விளக்கு சிறந்தது. சூரியன் இல்லாத இரவில் ஒளி தருவதல்லவா? அவன் விளங்கும் பகலிலும் கூட இருட்டு அறையிலும் குகையிலும் ஒளி வேண்டின் அதனைத் தருவது விளக்கே யல்லவா? அந்த விளக்கைக் கொண்டு வருபவள் ஒரு விளக்கு! இப்பகுதியில் வீட்டரசி சூரியனுக்கு முன் விழிப்பதிலிருந்து நாட்செல்ல முடிந்து இரவில் தூங்கச் செல்வது வரை, தூங்கி இரவு கழிந்து மறு விடியல் வருவது வரை கூறப்படுகிறது.*

*'இளங்கதிர் கிழக்கில்' எனத் தொடங்குகிறது குடும்ப விளக்கு. தொடக்கம் இளமையும் கதிரொளி நிலையும் வளர்ச்சிக்குரிய கிழக்கும் உடையதாகின்றது. விளக்க முள்ள குடும்பத்திற்கு இவை வேண்டும்.*

*இருள் நீங்கவில்லை, ஆனல் மெல்ல அகன்றுகொண் டிருந்தது என்பதற்கோர் அழகிய உவமை: 'கேள்வியால் அகலும் மடமைபோல்', இனிய உவமை. இருளும், கதிர் தோன்றும் என்று கேள்விப்பட்டமையால் விலகுகிறதெனப் பொருள் கொள்ளலாம். உவமைப் புதுமையில் புலமை யுகத்தைக் கணக்கிடலாம்; புலவன் திறனையும் மதிப்பிட லாம். பாரதிதாசன் பண்டையோர் உவமைகளையும் பல விடங்களிலே போற்றிக்கொள்கிருர்; பெண்களின் வரு ணனை பற்றிப் பெரிதும் பழைய உவமைகளையே பற்றுகிருர், புதிய உவமைகளும் நிறைய வருகின்றன.*

**'கொட்டி நீலத்தில் சுண்ணும்பு கலந்த**
**கலப்பென இருள்தன் கட்டுக் குலைந்தது'**

*இது புதிய உவமை.*

**'சின்ன மூக்குத் திருகொடு தொங்கும்**
**பொன்னுற் செய்த பொடிமுத்தைப் போல'**

துளிஒளி விளக்கு (விடி விளக்கு) எரிந்து கொண்டுள்ள தாய் உவமையும் ஒளியுற்று விளங்குகிறது. செங்காந்தள் நிகர் மங்கை விரல் என்பது பண்டைய உவமை. குடும்ப விளக்கு, விளக்கைத் தூண்டித் தொடங்குகின்றது. அதுவும் இரவிலும் அணையாது விடிவிளக்காக இருத்தலால், வீட்டில் ஒளி என்றும் மாருதிருக்க வைக்கிருர் கவிஞர்.

காலையில் எழுந்த நங்கை புதுநீர் தெளித்துக் கோலம் போடுகிருள். உடனே கதிரவன் அவட்குப் பரிசாகப் பொன்னொளியை நீட்டுகிருனும்; பகலில் அவள் விளக்கேற்றவில்லை, ஆனல் விட்டிற்கொளி வேண்டுமே, அதற்கென ஒளி உதவுகிருள்; தானில்லாத காலத்தே ஒளியணையாமல் பார்த்தாளே, அதற்காக.

பின்னர் யாழை மீட்டி 'வாழிய வையம்' எனப் பாடினளாம். எல்லாராலும் இது முடியுமா? வானொலி கொண்டு இதனை நிறைவேற்றலாம். விழைவு உயர்வுடையதே. மலரிட்டு வையத்தை வாழ்த்தலாம். யாழை இசைக்கும் பெண் கொத்துமல்லிக் காபி போட்டுக் குடும்பத்திற்களிக்கிருள். அத்தான் என அழைக்கிருள் கணவனை காபி குடிக்க. அழகனும் வந்தானும். 'அழகனும் அவளும் துஞ்ச' என்று இளைய ஆடவர்களை அழகாகவே காண்கிருன் கம்பன். மனையில் மனைவியில் அழகிருந்தால் மகனிடமும் அழகிருக்கும்.

**'துளிதேன் சூழும் களிவண்டு போல**
**அன்பனின் அழகிய பொன்னுடல் சூழ்ந்து'**

அவனை நீராடச் செய்கிருளாம். 'கரும்பே தேனே' என்கிருன் கண்ணகியைக் கோவலன். உவமை பழமையும் புதுமையும் பிணைந்தது. இளங் குழந்தைகட்குப் பெண்ணே

முதலாசிரியர் ஆகவேண்டுமென்பது இவர் மனம்; பாராட்டத் தக்கது.

**'அவள்வாத் திச்சி அறைவீடு கழகம்**
**தவழ்ந்தது சங்கத் தமிழ்ச்சுவை'**

என்கிறார்.

குழந்தைகளைப் பள்ளிக்கனுப்பி அவர்கள் செல்கையில்

**பிள்ளைகள் பின்னழகு வெள்ளம் பருகி**
**கிளைமாறும் பசுங் கிளிபோல் ஓடி**
**அளவளாவினாள் ஆளவ னிடத்தில்**

இங்குக் கற்பனை சாதாரண நிகழ்ச்சியாயினும் உள்ளத்தைத் தொடுகின்றது. கணவனது கிழிந்த உடைகளைத் தைத்துத் தருகிறாளாம். தையல் பொறிக்குச் 'சடுகுடுப் பொறி' எனப் பேரிட்டு மகிழ்கிறார். ஆடையணிந்து கணவன் 'பாண்டியன்' போலப் பிறங்குகின்றான். பாண்டியரிடமும் அவர்தம் பரிசிடமும் இவர்க்கு ஏதோ ஒரு தனிப்பித்து!

வெற்றிலைச்சுருள் தருகிறாள் பெண். விலை என்ன என்கிறான், 'பொருளுக்குத் தக்கது போதும்' என்கிறாள். கையிற் கொடுப்பதைவிடச் சுருளை வாயிற் கொடு என்கிறான். அப்படியே அளிக்கிறாள், அவள் தளிர்க்கைக்கு முத்தம் தந்தானும்; வாயில் தருவதைக் கைக்களித்தது பொருளுக்குத் தக்கதோ! அது மேல்நாட்டு முறை, விலை குறைச்சல்தானே. இன்னும் சுருளை அவள் வாயாலேயே கொடுத்திருந்தால் இதழுக்கே முத்தமீந்திருப்பான் போலும்.

பள்ளிக்குச் சென்ற பிள்ளைகளில் சிறுவன் துள்ளி விளையாடுகையில் தொடர்ந்தோடி வீழ்ந்தானோ என வீட்டிலிருந்து நினைக்கிறாள், அன்னை அன்பு-தலைவன் 'தளிரடி

தாங்கிச் செல்கிறது' தமிழ்த்தலைவி மனம்; அவன் பிரிந்து சேணிடைச் சென்றபோது அவன் காலில் முள் தைத்து விடுமோ என அஞ்சுகிருள் அகநானூற்றில். எனவே காலுக்கும் பூமிக்குமிடையே இவள் மனத்தைச் செலுத்து கிருளாம். இவ்விடங்களிலெல்லாம் இயற்கை அணியுடன் குடும்ப அன்பு மிக அழகாக விளக்கப்படுகிறது. இவள் என்ன செய்துகொண்டிருப்பினும் 'நெஞ்சம் நாடிக் கொண்டேயிருக்கும் குடித்தன நலத்தை' என்கிருர். இந்த நெஞ்சம் பெண்களிடம் பரவவேண்டியதே- 'முத்தர் மன மிருக்குமோனத்தே' என்ற வரி இங்கு மனதிலுறுகின்றது.

மாமியார் வெளியூர் சென்று வீடு திரும்பிஞள், அவள் வாங்கிவந்த பொருள்கட்கோர் பட்டியல், குடும்பம் நடத்து வோர் படித்து மனனம் செய்யவேண்டியது. அத்தனை அழ காகக் குடும்பத்திற்கு வேண்டியவை அழகுறத் தொகுக்கப் பட்டுள்ளன; படித்து இன்புறுமிடம்.

இவ்வளவு பொருளையும் ஏற்றிவந்த வண்டியில், புளி யடைத்த பாண்டத்தில் உள்ள அந்துப்பூச்சிகட்கும் இட மிராதே, மாமி உட்கார இடமேது என்கிருள் மருகி!

இவைகளின் உச்சி மீதில் குன்றுமேல் குரங்குபோலக் குந்தவைத்தாராம் மாமனர்.

**'ஏன் தலை நிமிர வேண்டி மூடிமேல் பொத்த லிட்டார்'**

என்கிருள் மாமி. கவிஞரின் நகைத் துணுக்கு இங்கு வீசப் படுகிறது. குடும்பத்தில் சோகம் குடிகொள்ளாமல் செயற்கை வழியிஞலேனும் சிலபோதுகளில் சிரிப்பும் களிப்புமாக இருக்கவேண்டுமென்பதனை இக்கட்டம் எடுத்துக் காட்டு கிறதோ? கடையிலே செலவிட்ட கணக்கை எழுதிஞள்; இடையிலே மாமஞர் விக்கிஞர், நீர் கொண்டு கொடுத்தாள்; பின்னர் 'அடுக்களை அரங்கில் நெஞ்சம் அசைந்திட ஆட லாஞள்' எனப் பாடுகையில் நாடகமே எதிரே நிகழ்வது

போலுள்ளது, கவிதைப் பொருளில் இன்பமேற்படுவ தொன்று; யாப்பிலும் ஓசையிலும் ஏற்படும் இன்பம் மற்ருென்று. இங்கு இரண்டாவது இன்ப நிறைவு ஏராள மாகக் காண்கிறது.

அவரவர்க்குத்தக்க கறி ஆக்குகிருள்; 'கறிகள்தோறும் உண்பவர் தம்மைக் கண்டாள்' யாவரும் அறிந்ததே. ஆனல் இதுவரை இலக்கியத்தில் எழுதப்படாதது. கண்ணகி, மதுரை மாதரி வீட்டில் அட்டில் புக்கு உணவாக் கியது பற்றிய இளங்கோ கற்பனை இனிக்கத்தானே செய் கிறது!

பொறியல் பூனைக் கண்போலிருந்ததாம்; இதனைச் சிறிய பிள்ளை அருந்துமா என நினைத்தாளாம். உடனே அவன் அதைச் சுவைத்து இச்சென்று சப்புக்கொட்டுவது போல இவள் காதில் கேட்டதாம். இங்கெல்லாம் அன்பூறி நிற்கிறது கற்பனை. குழந்தைகளிடம் இருக்கவேண்டிய தாய்ப்பற்று, பொறுப்பு புலனுகின்றது.

**'பொருளையே பெரிதென் றெண்ணுள்**
**பூண்வேண்டாள் தனை மணந்தோன்**
**அருளையே உயிரென் றெண்ணும்**
**அன்பிறைல்'**

சங்கப் புலவரின் திறம் பாடலில் தென்படுகின்றது. பொன் னெழுத்தால் பொறித்து ஒவ்வொரு வீட்டிலும் நடுவீட்டில் மாட்டவேண்டும். 'பொருளே மன்ற பொருளே, அருளே மன்ற ஆரு மில்லதுவே' என்ற சங்கப்பாடல் வரியை ஒப்பிட வேண்டும்.

மாமன் மாமிக்கு 'நானோர் தவழ்பிள்ளை அவர்கட் கென்று'ளாம் வீட்டுப்பெண்; மாட்டுப்பெண்ணல்லள். இவ்வுறவு குடும்பங்களில் அருகும் நாகரிகம் வளர்கிறது. மற்றதுவே நிலைக்கவேண்டும்.

இழந்த உரிமையை எய்தியோர் போலக் குழந்தைகள் பள்ளிவிட்டுப் பறந்து வந்தார்களாம். அவர்களை வரவேற்கிருள்.

**'வழிந்தோடும் புதுவெள் ளத்தை**
**வரவேற்கும் உழவ ரைப்போல்'**

குழந்தை புதிது. அதன் அன்பும் களிப்பும் வெள்ளம். ஈன்று புறந்தரும் உழவு செய்பவள் தாய். உவமை பொருத்தந்தானே!

**அன்றைக்கு மணம் புரிந்த அழகியோன் வீடு வந்தான்**
**இன்றைக்கு மணம்புரிந்தான் எனும்படிநெஞ்சில் அன்பு**

குன்ருத விழியால் அவனைக்கண்டாளாம். 'இன்றேபோல்க நும் அன்பு' என்ற சங்க வரியை எண்ணியே இதனைப் பாடியுள்ளார் புலவர்.

அதிர்ந்திடும் இளமையில் ஆவன அறங்கள் (அன் றறிவா மென்னது) செய்து முதுமையில் மக்கட்கு முடிசூட்டி, எதிர்ந்திடும் துன்பமேதுமின்றி மக்கள் பேரர் வாழ்வைக் கண்டு 'நெஞ்சு மகிழ்வதே வாழ்வின் வீடு' என வீட்டு நெறியை விளக்குகிருர் கவிஞர்.

இங்குத் தலைவனுக்கு மளிகைக் கடை. தலைவியே கடையைப் பார்த்துக்கொள்கிருள் கணவற்கு ஓய்வு வேண்டி. மளிகைக்கடை வருணனை மிக நன்ருயுள்ளது.

**இளகிய நெஞ்சத் தாளை இளகாத வெல்லம் கேட்பார்**

இது முரண்தொடை எனப்படும். இங்கு அணிநயம் நன்கமைந்துள்ளது. அளவாக இலாபங் கூறி அடக்கத்தை எடுத்துரைப்பாள்; புளுகாமல் புகன்ற வண்ணம் புடைத்துத் தூற்றிக் கொடுப்பாள். மளிகை வியாபாரத்தின் பின்னும்

மாலையில் மனமகிழக் கடலோரம் செல்கிருள் வீட்டுப் பெண்.

இந்நூலின் கடைசிப் பகுதியில் யாப்பு நயமும் ஓசை நயமும் 'பாண்டியன் பரிசிலில்' போலச் செம்மையுற அமைந் துள்ளன.

இவர்கள் வளர்த்த பிள்ளைகட்கு, 'பிள்ளை வளர்ப்புப் போட்டிப் பரிசு' கிடைத்துவிட்டது. இக்காலப் புதுமை இங்கு இடம்பெற்றுள்ளது. ஆல் ஒடிந்து வீழ்ந்தாலும் தோள்கள் தாங்கும் அப்படி நாம் பிள்ளைகளை வளர்க்க வேண்டுமாம். எஃகனைய நரம்பும் இடியேறுபோன்ற தோள் களும் வேண்டுவார் விவேகாநந்தர்.

எல்லாக் காரியங்களையும் எண்ணிஎண்ணிச் செய்து முடிக்கிருள். இதற்குவமை :

**பண்டிதர்கள் பழங்கதையின் ஒட்டைக் கெல்லாம்**
**பணிக்கையிடல் போல் அனைத்தும் தணிக்கை செய்தே**

புராணங்களில் இவர்க்குப் பெரும் வெறுப்பு என்பது இங்குப் புலனுகும். 'படுக்கை யறையில் பொதுநலம் பேசும் தம்பதிகளைக் காண்டல் அருமை' ஊராரெல்லாம் தூற்றுவது தலையணை மந்திரத்தைப் பற்றி. தமிழ் இலக்கணங் கூட இதற்கு இடந்தராதாகலாம்; பெருந்திணையைச் சேரும் இவ்வொழுக்கமெனப் பகரலாம்.

**'அடுக்கடுக்காய் நமது நலம் சேர்ப்ப தல்லால்**
**இதுவரைக்கும் பொதுநலத்துக் கென்ன செய்தோம்'**

என்கிருள் பெண்.

'இன்றைக்குக் கறி என்ன, செலவு யாது, கொழுக் கட்டை செய்யலாமா, செந்தாழை வாங்குவமா, கடைச் சரக்கை ஒன்றுக்கு மூன்ருக விற்பதெந்நாள், உன்மீதில்

எனக்காசை பொய்யா, கொடுக்கலென்ன, வாங்கலென்ன இவைதான் கண்டோம்' என மனிதனின் தன்னலத்தை அடுக்கிக் காட்டுவது தனியழகாகிறது. அந்தமிழர் 'எப்படிக்கும் முதற்படியாய் தமிழ்ப் படிக்க வேண்டும்' என்கிருள் தலைவி. இது தமிழகம் செய்து முடிக்க வேண்டும் உண்மை.

மண்ணின் சுவையுள்ள பொருள்கள் எல்லாம்,

**'ஒன்ருென்றும் மறுநாளே பழமை கொள்ளும்**
**ஒன்ருென்றும் சிலநாளில் தெவிட்டிப் போகும்**
**அன்றன்று புதுமையடி தெவிட்ட லுண்டோ**
**ஆருயிரே நீகொடுக்கும் இன்பம் என்ருன்'**

இது இல்லற இன்பம்பற்றிய இறுதியான கருத்து.

## விருந்தோம்பல்

இது இரண்டாம் பகுதி. முதற்பகுதியின் விளக்கமே, விரிவே மற்ற பகுதிகள் என்னலாம். விருந்தோம்பல் என்பது தமிழனின் தனிப் பண்பு. இது வள்ளுவர் வகுத்தது. விருந்தோம்பல் உள்ளத்தில் மகிழ்ச்சி; சொல்லில் இனிமை; செயலில் ஒப்புரவு; பிறர் நலம்; புதுமையுடன் உறவு; அன்பின் தழைவு இவையெல்லாம் அடைகின்றன; எனவே யாணர் என்ற சொல்லைப்படைத்த தமிழர் இதனைப் பெரிதும் போற்றினர்.

**நற்றமிழர் சேர்த்தபுகழ் ஞாலத்தில் என்னவெனில்**
**உற்ற விருந்தை உயிரென்று பெற்றுவத்தல்**

என்கிருர் கவிஞர். கோவலன் கண்ணகியை விருந்தெதிர் கொள்ளும் மாதரியின் நிலையைச் சிலப்பதிகாரத்தில் காண வேண்டும்.

கவிஞர் பெண்ணைக் கரும்பென்பதெல்லாம் வந்த விருந்தோம்பும் மேன்மையினாலன்றோ வென்கிறார்.

இவ்விலக்கியத்தில் என்ன இன்பமென்றால் ஒரு செயல் ஒருமணி நேரம் நிகழ்ந்தால் அதனை ஓரிரண்டு வரிகளால் உரைத்திடாமல் ஒவ்வோர் நிமிடமும், அச்செயலின் பகுதிகள் ஆன விவரங்களை அலசிக் கூறலே யாகும். வந்தோர்க்கு 'சாய்ந்திருக்க நாற்காலி தந்தும் வெண் தாழையினால் வாய்ந்திருக்கும் பாய் விரித்தும்' இங்கே இரண்டு வரியில் இரண்டு நிமிடத்தில் இரண்டு செயல்கள் இயன்றுவிடுகின்றன. இக்காலத்துப் பெண் வந்தோர்க்குச் செய்தித்தாளைக் கொண்டு தருகிறாள். இதுவும் விருந்துக்கு ஒரு விருந்து (புதிது). ஒக்க நின்றே தக்கபடி 'கேட்டும் குறிப்பறிந்தும் கெஞ்சியும் மிஞ்சுமன் பால் ஊட்டுதல் வேண்டும் தாய்போல்' என்கிறார். இன்று நாட்டில் விருந்தோம்பும் மனமும் பொருள் நிலையும் அருகி வருவதாகக் கேட்டு அஞ்சுகிறோம். ஆனால் விருந்தோம்பல் என்பது மனத்தளவன்றிப் பொருள் அளவைப் பற்றியதன்று.

கவிஞர் புதுச்சேரிக்காரர் ஆதலால் அருகிலுள்ள வில்லியனூருடன் குடும்ப விளக்குச் சம்பந்தம் பண்ணுகிறார். விருந்தினர் வந்த வண்டிமாடொன்று, 'பூட்டை அறுத்தோடி'

**மூலைக் குளத்தண்டை முள்வேலந் தோப்பினிலே**
**காலைப் பரப்பியது கண்டுபின்—கோல்பிடித்து**
**காட்டிப் பிடித்துவந்து வண்டியிலே, கட்டி வந்தாராம்.**

இயற்கை வருணனை இங்குக் கருத்தைக் கவர்கின்றது, நகைச்சுவையும் சிறிது நாவை நீட்டுகிறது.

முதியோர் தளர்ந்த உடலை, நுங்கின் இளகல் உடல் எனக் கற்பனை செய்வது நுங்கின் இனிமை தருகிறது.

**'இளமை அறிவோ டியைந்தால்-விளைவதெல்லாம்
நாட்டுக்கு நன்றே யாம்'**

*என்கிறார் ஓரிடத்தில். இளமை இன்று அறிவோடியைய வில்லைதான்: ஆனால் அறிவு அறிவு என அலறுகின்றது; ஆணவங் கொள்கிறது!*

*கண்டவர் விண்டிலர் எனக் கழறும் போலித் துறவினை இவர் பரிகசிக்கிறார். வள்ளுவரும், திரு. வி. க-வும் இத்துறவை வெறுத்தனர். முழுப்பூசணிக்காயைச் சோற்றில் மறைப்பதிது என்கிறார். உற்றாரை யான் வேண்டேன் பெற்றெடுத்த தாய்தந்தை வேண்டேன், தமிழ் வேண்டேன், தாய்நாட்டின் ஓய்வு தவிர்க்கும் உரம் வேண்டேன் என அவர்கள் ஒளிந்து ஓடுவதைச் சுட்டுகிறார். இவ் வாத்திரத்திற்கும் காரணம் காட்டிய அரவிந்த ஆசிரமத்தையும் ரமணாசிரமத்தையும் அம்பலத்திற்குக் கொண்டுவருகிறார்.*

*விருந்துவந்த சிறுவர் உண்டபின் உரையாடலில் தன் தன் அனுபவங்கள் இவை.*

**பதிவு மணம் காணல் கடனாகும், காதல்
உடையார்தம் வாழ்வில் உளம்வேறு பட்டால்
மடவார் பிறனை மணக்க விடவேண்டும்.**

*மேனாடுகளில் இன்று இம்முறை மலிந்துள்ளது. இந்நாட்டிற்கும் ஏற்றதேயென இந்திய அரசியலார் சட்டமியற்றியுள்ளனர். புது முறைகளிலெல்லாம் சமையற்கலை வளர வேண்டுமாம். சமையல்முறைத் தாழ்ச்சிக்கு சாதி சமயச் சழக்கே காரணம் என்கிறார். ஒரு வீட்டில் மற்றவர் உண்ணாதிருப்பின் சமையல் எங்ஙனம் இனிக்கும் என்கிறார்.*

*வந்த விருந்தினர் நகைமுத்து என்ற மணமாகாத நங்கையை அழைத்து வந்துள்ளனர், விருந்தினை வரவேற்றவர் வீட்டில் வேடப்பன் என்ற இளையன் இருந்தான். நங்*

கைக்கும் இளையனுக்கும் காதல் கனிகின்றது. திருமணப் பேச்சும் முடிகின்றது. வந்தவர்கள் வண்டி ஏறும்போது இவ்விருவரின் காதலாடல்களைக் கவின்பெற எழுதிக் காட்டுகிறார் கவிஞர். மிதிலைக் காட்சியைப் படித்து இதனைப் படிக்கவேண்டும்.

விருந்தில், இதுவும் ஒரு விருந்துதானே. விருந்தென்பது புதுமை. புதுமை நினைவுடன் விருந்தோம்பல் பகுதி முடிகின்றது.

## திருமணம்

சிறுகதை போன்று 'திருமணம்' பற்றிச் செப்பப்படுகின்றது. முற்கூறிய வேடப்பன் நகைமுத்து மணமக்கள். மளிகைச் சாமான் வாங்கிய பணத்தைக் கேட்க வில்லியனூர் போகிறான் வேடப்பன். கொடுக்கவேண்டியவர் நகைமுத்தின் தந்தைதான். பணத்தைப் பெற்றுக்கொண்டு வரும் வழியில் நகைமுத்தின் வீட்டிற்குச் சென்று வருகிறான் வேடப்பன். காதல் மலர்கிறது. வீடு திரும்புகிறான். பின் சின்னாள் இரு பெற்றோர்க்கும் கொடுக்கல் வாங்கலில் பிணக்கு ஏற்படுகிறது. இருவரும் சம்பந்தம் செய்துகொள்வதால் பகை தீருமெனக் கிழவரொருவர் நடுவே அமைதி செய்கிறார். ஆமென மகிழ்ந்து மணப்பேச்சு முடிந்து மணம் நடக்கிறது.

இங்கும், பாண்டியன் பரிசிலிலும் நல்ல பஃறொடை வெண்பா யாப்பு பிறங்கக் காண்கிறோம். வெண்பா செப்பலோசையுடையதென்பது இங்கு நன்கு பொருந்துகிறது.

சின்னானிடம் பணம் கேட்கும் வேடப்பன் வியாபாரத் தோரணையில் பதில்சொல்வது இயல்பாக அமைந்துள்ளது. 'இளகிய வெல்லம் மாற்றி' என அவ்வெண்பா இயங்குகின்றது.

நகைமுத்தாள் வீட்டிற்கு நடக்கையில் முன்பு அவர்கள் விருந்தாக வந்தபோது வளர்ந்த காதலையும் அவள் வண்டியில் ஏறும்போது நிகழ்ந்ததையும் நினைக்கும் கட்டம் நன்கு அமைந்துள்ளது. சீதையைக் கண்டபின் இராமன் நிலையை இங்கு இணைத்துப் பார்க்கவேண்டும்.

வீட்டுப் புறத்தே இருவரும் தனித்துக் காண்கிறார்கள். தமிழ்க் களவு இங்கு நிகழக் காண்கிறோம். களவு தெரியுமோ, பிறர் வருவரோ என்று அஞ்சுகிறான் பிள்ளை. அனைவரும் வெளியேயுள்ளனர் அஞ்சற்க என்கிறாள் அன்னம். இங்கோர் உவமை இயற்கையும் எழிலுமுடையது.

**'கருமணற் கடலோரத்தில் பிறர்வரக் கண்டநண்டு**
**விரைந்தோடு வதுபோல் ஓடவேண்டாம்'**

என்கிறாள் தலைவி.

களவில் தலைவி தன் வீட்டில் விருந்துண்டு செல்லுமாறு கேட்டலுண்டு. இங்கும் வேடப்பன் விருந்துண்கிறான். மணியாயிற்றெனக் கிளம்புகிறான். ஒரு கிழவர் குறுக்கிட்டுத் தான் துணை வருவதாயும் சற்று இளைப்பாறிப் போகுமாறும் இறுத்துகிறார். ஆங்கிலத்தில் கூறும் நாடக முன்னம் (Dramatic Irony) இங்குக் காண்ப்படுகிறது, இதனைத் தமிழில் நாடகமுன்னம் என்னலாம்! வழித்துணை வருவதாய்க் கூறும் இதே கிழவரே அடுத்துத் திருமணத்தை முடிப்பதற்கும் துணையாகிறார். இவர் தூது செவிலி அறத்தொடு நிற்றல்போன்று அமைகிறது.

'மட்டாய்ச் செலவிடுக எங்கள் மணமுடித்துத் தட்டாமல் ஈக தனியில்லம்' என்கிறாள் மணமகள். மாமி கொடுமைக்கும் மைத்துனர் கூறும் குறைகளுக்கும் மிகவும் கலங்குகிறார் கவிஞர்.

விடிந்தால் மணம், அந்த இரவு நிகழ்ச்சி எப்படியோ கவினுற எழுதப்பட்டுவிடுகிறது. காதலர் இருவரும் ஒருவரை யொருவர் கருதியே இரவைக் கழிக்கின்றனர். யாவரும் தூங்கச் சென்றனர். எல்லாரும் உறங்கினரோ எனத் தோழியைக் கேட்கிறான் வேடப்பன். தோழி எம்மாதரும் துயின்றாரெனவே, இது பொய்ம்மை என்றே செம்மாதுளை இதழ் சிந்தினளே வெண் நகை முத்தமே என்கிறார் கவிஞர். நுட்பமான நகைச்சுவை! மூடிய கண்களும் மூடாத நெஞ்சுமாய், 'ஆடியதோகை அடங்கினாளாம். பாடிய யாழ்போல் கிடந்தானும் பையன். பாழ் இரவோ ஓடியதே என்கையில் 'பாழ்' என்ற ஒரே சொல்லில் நிலவு தென்றல் அனைத்தையும் வைதுவிடுகிறார் கவிஞர்.

'ஆலெனச் செழித்து அறுகுபோல் வேர்பெற'— இது மண வாழ்த்து; பரம்பரையாகத் தமிழகம் பாடி வருவது.
படுக்கை அறை அழகுபடுத்தப்பட்டுள்ளது. சிறு பிள்ளை யொருவன் 'நான் விளையாடவா இவ்வறை' என்றான்.

**'புகவேண்டாம் புதுமணப்பெண் புதுமாப் பிள்ளை**
**தலைவர்தரு திருக்குறளின் பொருளாய் தற்கு**
**வகைசெய்து வைத்த இடம்'**

என்கிறார் கவிஞர். காமத்துப்பாலை மட்டுமின்றி வள்ளுவரின் பொருட்பாலையும் அங்கு ஆய்கிறார்கள் காதலர் என்பதைக் குடும்ப விளக்கு முதற்பகுதியிற் கண்டோம்.

## மக்கட்பேறு

'வள்ளுவன் அருளிச் செய்ததொகு சீர்த்தி' அறநூலின்கண் சொல்லிய தலைவி; மற்றும் வருசீர்த்தித் தலைவன், இது காதல் இருவரின் இலக்கணங்கள். முன்பு கூறினோம் வள்ளுவர் வழிப்பட்டது இவர் கூறும் வாழ்வு நெறியென. மக்கள் பள்ளிக்குப் போய்ப் புறநானூற்றில் நான்கும் குறளில்

கல்விபத்தும் பாடங் கேட்டு வருவது இவர்க்குப் பெரு மகிழ்ச்சி.

**பெற்றவர் தேடிவைத்த பெருஞ்செல்வம் உண்டென்றாலும்**
**மற்றும்தான் தேடவேண்டும் மாந்தர் சீர் அதுவே.**

பண்டைய தலைவன் தனது மணத்திற்காம் பொருளைத் தானே தேடிவந்தே பின் மணக்கிறான். இக்கருத்தைக் கொண்டு இங்கெழுதுகிறார் கவிஞர்.

நகைமுத்து கருவுற்றாள் மூன்றுமாதம். இதைப் பொன்னி கேட்போருக்கு மூவிரல் காட்டிக் குறிப்பிக்கும் நாட்டு வழக்கு நன்றாக இனிக்கிறது.

மூன்று மாதத்திலேயே பாட்டனும் பாட்டியும் பிறக்கப் போகும் குழந்தைக்குத் தொட்டிலும் பாலடையும் தேடும் காட்சி கவர்ச்சியாகிறது. தொட்டில் கிடக்கும் நாட்டுப்புற அறை, உள்ளது உள்ளவாறே வருணிக்கப்படுகிறது. முதல் குழந்தையின்போது உற்றார் அனைவருக்கும் இன்றும் நாட்டிலுறும் ஆர்வம் நன்கு படம் பிடிக்கப்பட்டுள்ளது.

இவ்விடத்தில் கர்ப்பிணியைப் பேணுமுறை வற்புறுத் தப்படுகிறது. நகைமுத்து முன்போல் இல்லை, நலிவு செய்யாதே யெனத் தாய் தாமே வெந்நீர் தூக்கி வந்தார் களே அஃதேன் எனக் காதலியிடமே வேடப்பன் கேட்பதும் அவள் 'இருநூறு தடவை கேட்பீர்' எனக் கூறி அடுக் களைக்குப் பரிமாறச் செல்லுமுன்

**தன் மூன்று விரல்கள் காட்டி முகநாணிக் கீழ்க்கண்ணாலே**
**முன் நின்றான் முகத்தைப் பார்த்தாள்,**

இக்காட்சி நல்ல காட்சி. கைவளை திருத்துபு கடைக்கணில் நோக்கிய சீதையின் 'புது நாணழுக்கக் காட்சி' வெளிப் படையாய்ச் சொல்லாமல் இப்படிக் குறிப்பாகப் பிறரைக்

*கொண்டு புலப்படுத்தல் கவிஞர் செயல். சாகுந்தலத்தில் இத்தகு காட்சிகள் மிகப் பல களிப்பூட்டுவன.*

**'இஞ்சி மொளைக்கப் போவுது, நல்ல**
**எலுமிச் சம்பழம் பழுக்க இருக்கிறது**
**நல்ல ஊட்டில் எல்லாம் பொறக்கும்'**

*என்கிறான் குடுகுடுப் பாண்டி. இல்லதென் இல்லவள் மாண்பு ஆனால் என்ற குறள் இறுதி வரியில் இனிக்கிறது.*

**'மூச்சோடும் அழகோடும் பெண்குழந்தை**
**முத்துப் போல் பிறப்பது தாய்நலமே என்றாள்'**

*கவிஞர்க்குப் பெண்களே மிகுதி. எனவேதான் இங்குப் பெண் குழந்தையைப் பிறக்கவைத்துப் பெருமைப்படுகிறார். பெண் பிறவியை (அதிலும் முதல்பிறவி அதுவானால்) பெருமையாய்க் கருதாத பேதமையை இடித்தெறிகிறார்.*

**'இளகிய பொன் உருக்கின் சிற்றுடல் இருநீ லக்கண்**
**ஒளிபடும் பவழச் செவ்வாய் ஒருபிடிக் கரும்பின் கையாம்**
**அளிதமிழ் உயிர்பெற் றங்கே அழகொடும் அசையும் பச்சைக்கிளி'**

*இது குழந்தை; கவியோவியமா, கற்பனை ஓவியமா கருத வேண்டும்!*

*குழந்தைக்குப் பெயர் வைக்கிறார்கள். தமிழ்ப் பெரியார் பால் குழந்தையைத் தருகிறார்கள். தமிழ்ப் பேர் 'அமிழ்தம்மை' என அழைக்கப்படுகிறாள் குழந்தை. இங்குத் தம் தலைவர் ஈ. வெ. ரா. அவர்களைத் தமிழ்ப் பெரியார் எனக் குறித்து மகிழ்கிறாராகலாம் கவிஞர்.*

*குழந்தையைத் தாய் முத்திடுவதும் குழந்தை தாய முகத்தைப் பார்ப்பதும் தனியழகுடையன. பால் குடிப்பதை நிறுத்தித் தாய்முகம் பார்க்கிறது குழந்தை:*

'உண்பது பிறகாகட்டும் உலகைப் பார்க்கின்றேன்'

எனக் கூறுவதுபோலிருக்கிறதாம். 'தன் மகனின்பெண்ணை' எனத் தொடங்கும் வரிகள் மிகமிக நயமும் ஓசை யமைதியும் உடையன, படித்துப் படித்து இன்புற வேண்டும்.

தாலாட்டு பெரியவர்களையும் மயக்கிக் கண்ணுறங்க வைத்துவிடும். கொஞ்சிக் குலாவுவது போதும் தூங்கு என்பதனை

'இன்னும் எமக்கே இனிப்பூட்டிக் கொண்டிருந்தால்
பொன் 'உறக்க நாடு' புலம்பாதோ கண்மணியே'

என்கிருள் தாய்.

ஒளவை, ஆதிமந்தி, காக்கைபாடினி, நச்செள்ளை, இளவெயினி, நக்கண்ணை ஆகிய தமிழ்ப் பெண்களெல்லாம் மீண்டும் ஓருருவில் வந்துள்ளனர் இங்குக் குழந்தையாக, புரட்சிக் கவிஞரின் பிள்ளைத்தமிழ்த் 'தால்' பருவத்தைக் கேட்க.

'போதுவிழி நீர்பாயப் போய்மீட்டுக் கொண்டுவந்த
ஆதிமந்திக் கற்புக் கரசியவள் நீதானே'

என்கிருள்.

'தஞ்சைத் தமிழன் தரும்ஓவியம் கண்டேன்
மிஞ்சு பலிவரத்தின் மின்னும்கல் தச்சறிவேன்'

இக்குழந்தையின் வடிவத்தை அனைத்துலகினும் காணலாமோ என்கிருர் மாமா.

'குழந்தையைக் கையில் தூக்கும் கலை' கவினுறக் காணப்படுகிறது.

'ஆழியில் உருவான அழகு மட்கலத்தை
இயற்றி யோர்க்கே எடுப்பது முடியும்'

*குயவன் திகிரியில் உள்ள உருவான பாண்டத்தை, அவன் தான் உரு அசையாமல் எடுக்கமுடியும்; உவமை ஒப்பற்றது!*

*தந்தையின் முதுகில் குழந்தை 'குதிரை ஆடுகிறது.' அப்பாக் குதிரைச் சிந்து அளவிடமுடியா அழகுடையது. மற்றவர்கள் தொடாத, செய்யாத கற்பனை.*

**' பேசும் குதிரை பெருத்த குதிரை**
**பிழையாக் குதிரை ஏய் ஏய் ஏய்**
**தோசைக் குதிரை சோற்றுக் குதிரை**
**சோராக் குதிரை ஏய் ஏய் ஏய்'**

*சிறுதேருருட்டுகிறது பிள்ளைத்தமிழில். இங்கு அத்தேரில் கட்டும் குதிரையோட்டுகிறது இக்காலப் பிள்ளைக்கவி.*

*குழந்தை தந்தையிடம் பேசி விளையாடுகிறது. தந்தை தத்துவஞானியாகிறார். கடிகார முள் நேரம் ஓடுவதைத், தான் ஓடிக் காட்டுகின்றது என்கிறார் தந்தை. முள் ஓடவில்லையே என்கிறது குழந்தை.*

**' ஓடுவது தெரியாது ஓடுகின்றது நாள்**
**வளர்வது தெரியாது வளர்கின்றாய் நீ'**

*இது உலக மாயை. காலமும் உலகமும் நம்மைக் கண் திறந்திருக்கும்போதே ஏமாற்றும் வித்தை! 'பிள்ளை வளர்ப்புப் பரிசு' போல இங்குக் குழந்தையுடன் குடும்பத்தார் புகைப் படம் எடுக்கின்றனர். இலக்கியத்தில் இவையெல்லாம் புதிய சேர்க்கைகள்.*

## முதியோர் காதல்

*விருந்தோம்பல், மணம், மக்கள்பற்றியெல்லாம் விவரிக்கும் இலக்கியங்கள் தமிழில் எண்ணில. ஆனால் முதியோர் தமிழ் இலக்கியப் புதுமைக்கற்பனைகள் இனிமையும் புது*

மையுமுடையன. பாரதிதாசன் மனவியலுணர்ந்து பாடுகிருர். இக்கவித்திறன் இவர் காவியங்கள் எங்கும் இலங்கி நிற்கின்றன. இளையோர் இருவர்க்குரிய காதல், பெரிதும் மணத்திற்கு முன் காதல்பற்றியே தமிழ் அகவிலக்கியமெல்லாம் ஆராய்வன. ஆனல் முதியோர் இருவர்-காதல் மணத்தின்-பயன் விடுபட்டதாம். தமிழில் விடுபட்ட இடத்தை நிரப்பும் பெருந்திறன் இங்குப் பிறங்குகின்றது.

வானப்பிரத்தமே இங்கு முதியோர் காதலாகலாம்! இலக்கியம் படித்து இன்பஅறிவுப் பொழுதுபோக்குகிருர் முதியோர். கிழவர் 'மயிர் வெண்பட்டே, உணவெலாம் 'பாலின்கஞ்சி, உலவுதல் சிறிதே ஆகும்'. நரைக்கு வெண்பட்டுவமை நன்று.

**' அன்புடல் அறத்தால் தேய்ந்த ஆயிரம் பிறைமூ தாட்டி**
**மன்னுசீர் அன்ஞர் மெய்யோ வானவில் போறக்கூ னிற்றே'**

இது கிழவியின் நிலை. 100 சரத்காலம் வாழ்வதுபற்றி வேதங்கள் அடிக்கடி வேண்டுகின்றன. இங்குக் கிழவி 80-வயதுக்குமேல் (1000 பிறை-மாதம்) இருந்துள்ளாள். இங்கு இவள் தேய்வு அறஞ்செய்ததால். உவமை வானவில். அதுவும் மழைக்கொடையின் அடையாளந்தானே. இவள் கூன் அறத்தையும் வானவில்லின் கூன் மழையையும் குறிக்கின்றன.

மக்கள் சுற்றம் யாவர்க்கும் முடிந்தது செய்தோம். 'இந்தநாள் வரைக்கும் வாய்மை இம்மியும் மறந்ததில்லை' என மகிழ்கின்றனர். நன்றி மறவாமல் பிறர்க்குத் தீமையை மறந்து நாட்டின் நலத்திற்காக வாழ்ந்தனராம்.

**' கதையாகிக் கனவாய்ப் போகும்**
**நிகழ்ந்தவை எனினும் அந்த**
**முதியோளே வாழு கின்ருள்**
**என்நெஞ்சில் மூன்று போதும்'**

நரை வந்தபோதும் நங்கையிடம் அன்பு மறவாதே என்கிறது அகவிலக்கியம். இங்கு முதியோர் உள்ளம் முப்போதும் மறவாத இறைவனாக இருக்கிறாள் முதியோள்-கிழவி. இங்குத் தெய்வந் தொழாஅள் தலைவித் தொழுவானாகிறான் தலைவன்.

**'மதியல்ல முகம் அவட்கு வறள்நிலம் குழிகள் கண்கள்**
**எதுஎனக்கின்பம் நல்கும் இருக்கின்றாள் என்பதொன்றே'**

'பல்கார்ற் காண்டலும் உள்ளத்துக் கினிதே' என்கிறாள் பண்டை இலக்கியத் தலைவி. இங்குக் காட்சியின்பம் 'காதலைக்' காக்கிறது. மொய்த்து வளர் பேரழகு இங்கு முகிழ்த்துக் காட்டுகிறது. அம்மூதாட்டி உயிர் வாழ்வாள் ஆதலாற்றான் உவப்பூட்டும் எனக்கிவ் வையம் என்கிறார் கிழவர். அன்பு அருளில் அழைத்தேகல்போல் இங்கு இவரிடம் உள்ள உவகை உலகெலாம் பரவி நிற்கிறது.

**'அறம்செய்த கையும் ஓயும் மக்களை அன்பால் தூக்கி**
**புறம்போன காலும் ஓயும், மறவனைச் சுமக்கும் என்றன்**
**மனமட்டும் ஓய்த லில்லை'**

என்கிறாள் கிழவி. அவன் மனாளனா மன-ஆளனா என இப்போது ஆராயவேண்டும். மனதிற்குரமூட்டுகிறான் காதலன். மனம், கை, கால், கண் முதலாம் உறுப்புக்களில், அன்பு தங்குவது மனதில்; அது ஓயவில்லை எனில் அவ்வுறுதியைத் தருவது 'அன்பு' என்பது ஆகின்றது.

பேரன் நீட்டிய மலைவாழைப்பழத்தைத் தாத்தாவுக்குக் கொடு என்கிறாளாம். இது வாழ்ந்த பழங்களின் காதல். மற்றவர்களையும் மறைத்துத் தின்பண்டங்களைப் பரிமாறிக் கொள்கிறார் முதியோர். தங்கள் இளமைக் காதல் ஆடல்களை, நேரங்களை அடிக்கடி நினைத்தும் பேசியும் மகிழ்கின்றனர். மனவியலறிந்து எழுதப்பட்டன இவ்விடமெல்லாம்.

இவ்விடத்தேதான் மனைவியே 'குடும்ப விளக்கு' எனக் கவிஞர் கருத்து வெளிப்படுகிறது. களிற்றியானைநிரை, மணிமிடைபவளம் என்ற பெயர்கள் பாடலுள் பயிலும் தொடர்களாலேயே கொடுக்கப்பட்டன.

**' அவள்என் 'குடும்ப விளக்கு' வேறெது கூறுவேன்!**
**அன்பின் வழிய துயிர்நிலை—அதுவே நிலைத்த இன்பமாம்'**

கடைசி காலத்தில் கடவுளை நினைத்து முத்திக்கு முயலலே முடிந்த இன்பம் என்பர் முன்னோர் பலர். அக்கருத்து இங்கே அசைக்கப்படுகின்றது. இந்தக் கிழத்திலும் மருமகளுக்கு உடனிருப்பதற்கு முன் நாணுகின்றனர் மாமி மாமன். இக்கிழவர் ஒரு பிசிராந்தையாக நூறாண்டு வாழ்ந்ததன் நுணுக்கம் இயம்புகிறார்.

' தந்தை தாயர் நல்லொழுக்க முடையவர் ; தான் ஒரு கற்றவர் ; கருத்திலும் தன்னிடம் தீயொழுக்கம் இல்லை' இம்மூன்றும் முதியோரை இளமையாக்கின.

இரவில்

**" பெரியாளும் பெரியான் அண்டைத் தலையணைமீது சாய்ந்**
**அருகருகிருவர் மிக்க அன்புண்டு செயலே இல்லை" [தாள்**

இது நகைச்சுவையா, கவிக்குறும்பா நினைக்கவேண்டும். கிழவர்களைக் கவி கேலிசெய்யும் இடம் இது!

ஒளிக்கப்பால் இவர்கள் வாழ்வாராம், இருட்கப்பால் விளங்குகின்றாராம்! எப்படி எண்ணித்தான் துணியுங்களேன்! ஒளி இருள் பகல் இரவாகிய காலங்கடந்தது காதலா, ஆயுளா அறிக!

# இருண்ட வீடு

இனியவை நாற்பது கண்டின்புற்ற தமிழிலக்கியம் இன்னா நாற்பதையும் இன்றியமையாமற் கொண்டது. குடும்ப விளக்கைப் படிப்போர் இருண்ட வீட்டையும் எதிர்ப் படுகின்றனர். விளங்கிய குடும்பம் எப்படி இருக்க வேண்டு மென அறிவோர் இருண்ட குடும்பம் எப்படியிருக்குமெனவும் அறியவேண்டும். என்னென்ன அடையாளங்களால் ஒரு குடும்பம் இருண்டுகொண்டுள்ளதென அறியலாம். நல்ல குடும்பத்தில் எந்நிகழ்ச்சிகள் இயலலாகாவென எடுத்துக் காட்டுகிறார் கவிஞர்.

நல்லாரைக் காண்பதுவும் நன்றே என நவின்ற ஔவை தீயாரைக் காண்பதுவும் தீதே என எதிர்மறுத்தும் உண் மையுரைத்ததால் கருத்து தெளிவும் வலிவும் பெறுகிறது. அவல நாடகத்தில் (Tragedy) மிக இழிநிலையடையும் தலை வன் முதலில் எவ்வளவு உயர்வுடையவன் எனவும் எடுத்துக் காட்டப்படுகிறான்.

குடும்ப விளக்கிற்கு நேர்மாறானது இருண்ட வீடு. கல்வியே குடும்ப ஒளி; அஃதின்மையே இருண்ட வீட்டிற்குக் காரணம் என்பது கவியுள்ளம். 'ஒண்மை' என்பது ஒளி,

அறிவு கல்வியென்பது வள்ளுவர் கருத்து. எனவே இருள் என்பது கல்வி யின்மையன்றோ? மனிதப்பண்பு அறிவாற்றானே விளக்கம் அடைகிறது. அவ்வறிவுக்கு முதற்காரணம் கல்வியே. இருண்ட வீட்டின் இலக்கணம் படித்தோர் நடத்தும் வீடு பலவற்றிலும் இருப்பினும் இருட்டுக்குக் கல்வியைக் காரணமாக்கியது சிறந்ததே.

தூக்கம், சோம்பல் குழந்தைகளின் வாய் தூய்மையின்மை; மூடமருத்துவம்; மனநிறைவின்மை; மரியாதை இன்மை; மூடநம்பிக்கை, அமைதியின்மை; எதிரிக்கிடம்; கொலையுணர்ச்சி.

இவை யாவும் இருண்ட வீட்டின் அடையாளங்களாகின்றன. நிகழ்ச்சிகள் காவியமாக, கதையாக வெளியாகின்றன. ஒன்றன்பின் ஒன்றாக இடையூறும் இன்னதுமாகத் தொடர்கின்றன. தேர்வு முடிவு வெளியானதும் 'தன் எண்'ணை அதிர்ச்சியுடன் தேடும் மாணவன்போல இதனைப் படிக்கும் ஒவ்வொருவரும் தன் வீட்டுக்குறையை இதில் இணைத்துவிட்டாரோ, இதிலிருப்பது தன்னில்லத்தே இயல்வதால் தன்வீடு இருண்டுவருகிறதோ என்றெல்லாம் எண்ணுகின்றனர்.

அங்குக் குடும்ப விளக்கிற்குப் பகலவன் காலையில் பொன்னிறக்கதிர்ப் பரிசளிக்கிறான். இங்குத் தலைவி சாணமிடுகிறாள்;

**'கோலம் போட்டவள் கொஞ்சம் நிமிர்ந்தாள்**
**காலைப் பரிதியின் கண்கள் நடுங்கின'**-வாம்.

எங்குத் தன் கண்களும் இருண்டுவிடுமோ என்றா?

காலையில் முதலில் தலைவி எழாமையால், பால்காரன் கறந்த பாலை இடமாறி வைத்தேக, பையன் பல்துலக்க அதனை நீரென எண்ணிப் பயன்படுத்த, மிகுந்த பாலில்

தலைவி சாணியைக் கரைத்துத் தெளித்துவிடுகிருள். ஒரே குழப்பத்தில் தொடங்குகிறது குடும்பம்.

வயிறு புடைக்க உண்கிருன். அவன் கழுத்து கவலை மாட்டுக் கழுத்துப்போல் புடைத்ததென்கிருர், பொருந்திய உவமை. மேலே வடையை எடுக்கிருன் "வாயில் நுழைய வடைக்கு வழியில்லை" என்கிருர் ஒரே சிரிப்புக்கிடையில்.

மருத்துவம் பார்க்கின்றனர். ஏழரை ஒன்பது இராகு காலம்; மந்திரக்காரனை இப்போதழைக்காதே என்கிருள். 'நாளும் கிழமையும் நலிந்தோர்க் கில்லை' யென்பது கவிப் பரம்பரைக் கருத்து.

காலராவுக்கு மாரியம்மன் பெயரில் இப்போது நம்பிக்கை, கடவுள் பற்றுடையோர்க்கும் கழன்றுவிட்டது. நாலைந்து கடவுளின் நற்பெயர் கூறிக், காப்பீர் என்று கங்கணம் கட்டி, வேப்பிலை ஒடிக்கும் வேலைக்குப் புகுந்தராம். நோய்க்குழந்தை இருக்குமிடத்தை ஈயும் எறும்பும் "உழுந்து கிடந்த ஒருகலம் போலவும் வேம்பின் பழம்பூவிரிதரை போலவும்" மொய்த்தவாம். இயற்கை உவமை அகநானூறு முதலாம் நூலுவமையுடன் ஒப்புவைக்கும் தரத்தது.

தலைவன் தலைவி சச்சரவு நேரே நடப்பதுபோல் உள்ள படி வருணிக்கப்படுகிறது. முழுவதையும் படிக்க! 'பந்தாடிடுவேன் பார்எனக் குதித்துப் பல்லைக் கடித்தே பார்க்க விழித்தே, கொல்லைக் கோடி கோலைத் தேடி விட்டேன எனமீசையை முறுக்கி' துண்டைத் தோளில் போட்டு சாப்பிட மாட்டேன் என்று வெளியே செல்பவன் வேலைக்காரியிடம் பையனைப் பார்த்துக்கொள்ளும் பொறுப்பை ஒப்படைக்கிருன்; அடுத்த தெருவில் ஓர் வீட்டில் இருப்பேன் அங்கு வந்து அழைக்காதே என அதட்டுகிருன்; இங்குள்ள நகைச்சுவை அந்த வீட்டின் எண்ணைச் சொல்கிருன்.

நடைவரைக் கும்போய் இடையில் திரும்பி
அழைப்பார் இல்லை ஆதலால் மீண்டும்
திரும்பிப் பார்த்துத் தெருவொடு சென்றாராம்

*தலைவியின் அண்ணன் விருந்தாக வருகிறான். அவ மரியாதையும் பசியும் அடைகிறான். காப்பிக்கடையில் போய் உண்டுவருகிறான். வேலைக்காரி பாலைக் காய்ச்சிப் பருகிவிடுகிறாள். அப்போதுதான் தங்கை 'காப்பி' கீப்பி' ஏற்பாடு செய்யலாமா என்கிறாள். வேலைக்காரி விருப்பப் படி, வேண்டாம் என்றுவிடுகிறானும் விருந்தாளி.*
*இரவில் தூங்குகிறான் :*

'நவாப்புக் குதிரை நாடு முழுவதும்
சவாரி வந்து தரையில் புரளல்போல்
படுத்துப் புரண்டு பிடித்தாள் தூக்கம்'

*தலைவன் வருகிறான், கதவிடிக்கிறான்.*

'தச்சுப் பட்டரை வைச்சது போல
அச்சுப் பீப்பாய் அடிப்பது போல'

*இரவில் வீட்டில் திருட்டு நடக்கிறது. பையனுடைய விளையாட்டுத் துப்பாக்கியால் தலைவன் திருடனைப் பய முறுத்துகிறான். அப்போது விழித்த பையன் அது பொய்த் துப்பாக்கி எனப் புகன்றுவிடுகிறான். திருடன் பணத் தோடும் தப்பித்தான். எரிச்சலால் மனைவியையும் பையனையும் அடித்து மாய்க்கிறான் வீட்டுத் தலைவன். ஊரார் இரங்குகின்றனர்.*

'எல்லா நலமும் ஈந்திடும் கல்வி
இல்லா வீட்டை இருண்டவீ டென்க'

*என முடிக்கிறார் கவிஞர்.*

# அழகுச் சிரிப்பு

'அழகுடைப் பொருள் அழியா இன்பம்' என்ருன் ஆங்கிலப் புலவன் ஒருவன். இயற்கையிலே கருத்தாங்கி இனிமையிலே வடிவெடுத்தது தமிழ் எனத் திரு. வி. க. கூறுவர். எனவே அழகும் இன்பமும் இயற்கையிலுண் டென்றறிகிருேம். இயற்கைக் காட்சியையே நம் கவிஞர் அழகின் சிரிப்பு என்கிருர். இயற்கை இறைவன் கோயில். அவன் 'பச்சைமா மலைபோல் மேனி'யன் ஆழ்வாருக்கு. 'மாசில் வீணையும் மாலை மதியமும்-வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்-ஈசன் எந்தை இணையடி நிழ'லும் எல்லாம் ஒன்றே என்பார் அப்பர் பெருமான்.

அழகும் இன்பமும் இயற்கையும் கவிதைக்கு உணர் வூட்டுவன. கவிதைக்கு உடலங்கள். காதலர்க்கும் கவிஞர்க்கும் இயற்கை எண்ண ஊற்ருயமைந்தது.

சங்கப்புலவர், சம்பந்தர், புராணங்கள், பாரதி ஆய எவரும் இயற்கையெழிலை எண்ணிப் பாடியவர்கள். நாட்டு வளம், மலைவளம், ஆற்றுவளம், நகரவளம் என்பன புராணங்களில் இயற்கைக்குரிய தனி இடங்கள். கம்பன் இயற்கையையே காதலியாகக் கொண்டான்.

இங்குப்புலவர் இயற்கையை ஏற்றமுறவே வனைகிறார். அழகின் சிரிப்பில் 'அழகு' என்பதோர் பாடல். 'வெள்ளைத் தாமரைப் பூவி லிருப்பாள்' என்ற பாரதி பாட்டுடன் இணைத்துக் காணவேண்டும். காலை யிளம் பரிதி கடற்பரப்பு ஒளிப்புனல் சோலை மலர் தளிர் எங்கும், எல்லாப் புலவரும் கண்டனர். சிறுகுழந்தை விழியினிலே ஒளியாய் நின்றாள் திருவிளக்கிற் சிரிக்கின்றாள்.

**நாரெடுத்து நறுமலரைத் தொடுப்பாளின் விரல்வளைவில்**
**நாடகத்தைச் செய்கின்றாள்.**

இவை கூர்ந்த நோக்குடையன; புதியன. பசையுள்ள பொருளிலெலாம் பசையவள்காண், பழமையினால் சாகாத இளையவள்காண். இங்கு இளமையும் புதுமையும் அழகில் அமைதிகளாகின்றன.

**நகையோடு நோக்கடா எங்கும் 'உள்ளாள்'**
**நல்லழகு வசப்பட்டால் துன்பமில்லை.**

கடைசி வரி கடைந்தெடுத்ததாகும். அழகுக்குப் போலவே அழகுடைய கலையையும் கவியையும் உணர, சுவைக்க ஒரு நசை அல்லது ஈடுபாடு வேண்டும். கடவுள் கோட்பாட்டினரும் இவ்வீடுபாடில்லாதவர்க்குக் 'கடவுள்' இல்லையென்கின்றனர்.

கடலலைகள் பள்ளிச்சிறார்போலப் பூரிப்பால் ஏறும் வீழும் புரண்டிடும் பாராய் தம்பீ என்கிறார். புதுவைக் கடலோரத்தில் பொழுதெலாம் கழிப்பவர் கவிஞர். புரட்சிக்கப்பால் அமைதிபோல அலைகட்கப்பால் தாண்டி அமைதி அன்றோ என்பார். புரட்சிக்கவியாயினும் இவர் கவியுள் நெடுந்தூரம் சென்றால் அமைதியைக் காணமுடிகிறது, அமைதிவரைக் கவி அத்தனை அகன்றுமிருக்கிறது.

கதிரொளியை மாற்றி நிலவொளியில் கடல் நிலவுவது பொன்னுடை களைந்து கடற்பெண் புதிதான முத்துச்

சேலையை மேனியிற்கொண்டது போன்றதாம். பகலொரு ஆடையும் இரவொரு ஆடையும் பூண்டு மினுக்கும் பண்புடைய புதுமைப் பெண்போலும் கடல்!

பொதிகையில் குளிர்ந்து மலரில் மணமுண்டு வண்டின் பண்ணில் கேள்வியை அடைந்து வளர்கின்றதாம் தென்றல். பொருப்பிலே பிறந்து வைகையில் தவழ்ந்து கற்ருேர் நினைவிலே நடந்து வளரும் தமிழ்பற்றிய பாடலை ஒப்பிடுக.

தமிழ் எனக்ககத்தும், தக்க தென்றல் நீ புறத்தும் இன்பம் தருவதனைக் கனவிலும் மறவேன் என்கிருர்.

'காடு' வருணனையைச் சங்கப் பாடலுள் பாலை வருணனையுடன் ஒப்பிட் டின்புறவேண்டும். பரத்துவாசன் என்ற பறவையை வலியன் என்றும் சகோரத்தைச் செம்போத்தென்றும் புன எலுமிச்சையைக் குருந்தென்றும் குறிப்புத் தருகிருர். சங்க நூற்களிலுள்ள செடிகளின் பேரை அடையாளம் காணும் முயற்சி இன்னும் தமிழகத்தில் மிகவில்லை. இலக்கியக் குறிப்புக்களைப் பார்த்தால் அன்றில் செம்போத்தென அறியக் கிடக்கின்றது!

கிளிக்கூட்டத்தில் கவண் எறிகின்றனர் காரிகைகள். ஒருத்தி அதன் சிறகை வீழ்த்தினேன் என்ருள். குலுக்கென்று நகைத்தொருத்தி அது கொடும்புன்னை இலைகள் என்கிருள். சிறகுப் பச்சையும் அளவும் புன்னையிலையின் பச்சையும் ஒரே மாதிரியோ! சங்கப்பாடலுள் பெண்கள் வேங்கைமரத்தினைப் பார்த்துப் புலிபுலியெனப் (வேங்கைக்குப் புலியெனப் பெயர்) பூசலிடுகின்றனர். தலைவன் புலி (விலங்கு)யென நினைத்து அங்கே ஓடி வருகிருன். அங்கே எழும் பெண்களின் கேலிச் சிரிப்பு, இங்குக் கிளிப் புன்னையிலும் கிளைக்கின்றது!

பறவைகள் 'குப்பத்து மரத்தில் வந்து குந்திய புதுமை கண்டேன்' என்பதோரிடம். குப்பம், குப்பன், குந்துதல்

இம்மூன்று சொற்களும் இவரிடம் ஏராளமாகப் பழகுகின்றன. நீரில் மிதக்கின்ற மரங்களின்மேல் ஒரு நாரை வெண்டாழம்பூ—இது இயல்புடைய உவமை.

**' நோய் தீர்ந்தார் வறுமை தீர்ந்தார்**
**நூற்றுக்கு நூறு பேரும்**
**ஆற்றுத்தாய் நடக்கின்ருள் வையம்**
**தழைகவே தழைக என்றே '**

இது ஆற்றின் (கவி) நடை, தனியொருவருக்கும் உணவில்லா நிலையைத் தகர்க்க எண்ணினுர் பாரதி. இவர் நூற்றுக்கு நூறுபேரும் வறுமைதீர வேண்டுகிருர்.

தங்க இழையுடன் நூலை வைத்துப் பின்னிய ஆடை காற்றில் பெயர்ந்தாடி அசைவதுபோல் நன்னீரில் கதிர் கலந்து நளிர்கடல் நெளிகிறதாம்.

**' எத்தனை பெரிய வானம், இத்தரை கொய்யாப் பிஞ்சு**
**நீ, ' அதில் கொய்யாப் பிஞ்சு '**

இது வானத்தைப் பார்த்து வளர்ந்த கற்பனை; பித்தேறி மேல்கீழ் என்று மக்கள்தாம் பேசல் என்னே என அடக்கத்தை அறிவுறுத்துகிருர். 'சில்வாழ்நாள் பல்பிணிச் சிற்றறிவு' என்ற மனிதஇயல் இங்கு எடுத்துணர்த்தப்படுகின்றது.

**புரு:** தனைச் சுற்றும் ஆணைப் பெண்புரு குறுக்கே சென்று திரும்பி 'தலைநாட்டித் தரையைக் காட்டி 'இங்கு வா' என அழைக்குமாம். மலைகாட்டி அழைத்தாலுந் தான் மறுப்பரோ மையல் உற்ருர் என்கிருர். 'காற்றிலேறியவ் விண்ணையும் சாடுவோம் காதற் பெண்கள் கடைக்கண் பணியிலே' என்பார் பாரதியார்.

கிளி காட்டில் கிரீச் என்கிறதாம், கூட்டில் குழந்தை போல் கொஞ்சுகிறதாம் யாரைப்போல்? இன்றமிழைக்

கொடுப்பார் போலவாம்; அவர்கள் வீட்டிலே தூத்தம் என்பாராம். வெளியிலே பிழைப்புக்காக ஏட்டிலே தண்ணீர் என்பராம்.

பாரதி இயற்கை என்றே ஒரு அத்தியாயம் எழுதியுள்ளார். காற்று, வானம், தீ இயற்கை பற்றி ஆழ்ந்த கற்பனைகளை ஆக்கியுள்ளார். அவற்றுடன் ஒப்ப நோக்கத் தகுவது இவரது 'இருள்' பற்றியது.

ஆடி ஓடி வாடி ஓய்ந்து உலக உயிர்க்கூட்டத்தை ஓடி அணைப்பாய் உன்றன் மணிநீலச் சிறகுகளால் மூடுவாய் 'அன்பின் முழக்கமே' என்கிறார். உறக்கம் உடலுக்கு உயிர் சிவனின் 'மறைத்தருளும்' ஐந்தொழிற் செயல்கள் அன்பின் முழக்கந்தானே! ஒளிபற்றிய கற்பனையில் பாரதி இருளைப் பேசுகின்றார்.

கவிதை முதற்பகுதியில் 'மயில்' கற்பனை; உள்ளக் களிப்பின் ஒளிக்கற்றை அதன் கொண்டையாம். 'சாயல் உள் தனிக்கொத்து சபாஷ்! கரகோஷம்!' என்பதோர் வரி. சபாசு என்பதைக் குமரகுருபரரும் ஆளுகிறார். திசைச் சொற்கள் கவிதைக்குள் எப்படியோ புகுந்துவிடுகின்றன. 'வடசொற் கலவாது எழுதும் மறைமலையடிகள்' என மகிழ்கிறார். தண்ணீரைத் தூத்தம் என்பதனைத் தாக்குகிறார். ஆனால் இவர் கவிகளில் 100 கவிக்குக் குறைந்தது 4—5 சொற்களேனும் வேண்டா வடசொற்களாகின்றன. இந்நிலையை எப்படி அமைதி காண்பதென எனக்குப் புலனாகவில்லை.

பிறர்பழி தூற்றும் பெண்கள் கழுத்து உன் கழுத்தாகுமா, அயலாள் வீட்டில் அறையில் நடப்பதை எட்டிப் பார்க்காதிருப்பதற்கே இயற்கை அன்னை இப்பெண்கட்குக் குட்டைக் கழுத்தைக் கொடுத்தாள் என்கிறார். இது பெண்ணிழிவு படுத்தலாகாது. சிலர் குறையைப் பழித்து நீக்கும்

நகைச்சுவையாம், பெண்ணிற் பொருந்தக்க என்ற வள்ளுவர் பொருட்பெண்டிரைப்பற்றிக் கூறல்போல.

'உதய சூரியனை'ப், பாஞ்சாலி சபதத்தில் அர்ச்சுனன் மாலைச்சூரியனைப் பாஞ்சாலிக்குக் காண்பிக்குமிடத்துடன் இணைத்துப் படிக்கவேண்டும். இங்கு 'அமுதப்ரவாகம்', என்ற சொல். அண்ணாமலை ரெட்டியார் 'காவடிச்சிந்து' பரவியது பாரதி காலம். அத்தொடர்பால் சிந்துப் பாடல்களும் இவரிடம் சிறந்து நிறைந்துள்ளன. 'காடு' பற்றியதோர் கருத்து.

'கானலை' கலிங்கத்துப் பரணி 'காடு பாடியது' என்ற பகுதியுடன் கூட்டிப் படிக்கவேண்டும். கானலிலே நிழல் 'ஊனுடல்' அன்றி மற்றில்லையாம். பரணியில் பாலை தாண்டும் மக்கட்கு நீர் அவர்கள், வெம்மைக்குக் கலங்கி விடுகிறாரே அக் கண்ணீர்தான் என்பார்.

இரண்டாம் கவித் தொகுதியில் 'வானம்பாடி'க் கற்பனை. சிட்டுக்குருவி ஆங்கிலப் புலவன் ஷெல்லியை மயக்கியதனைப் பாரதி மொழிபெயர்த்துக் காட்டினார். நைட்டிங்கல் என்றொரு பறவை பற்றி அவர்கள் அடிக்கடிக் குறிப்பிடுவர். நம் நாட்டு அன்றில், வானம்பாடிக்கு அதனை ஒன்றுக்கலாமா அறியவேண்டும். இங்குப் புலவரது கவி முழுவதையுமே படித்தின்புறவேண்டும். வானம்பாடி மேலிருந்து இசைப்பது.

**வானூர்தி மேலிருந்து வல்ல தமிழிசைஞன்**
**தானூதும் வேய்ங்குழலா யாழா?**

என்கிறார். கவியின் காலக்குறிப்பு பாடல்களில் கலந்து கிடக்கும். இங்கு வானூர்தி அழகுடன் விரவிக் கிடக்கின்றது பாடலில். வானந்தான் பாடிற்றா வானிலவு பாடிற்றா? மேலிருந்து வருகிறது இடிக்குரல்தானே. இது மென்மையாயுள்ளதே. 'நடுங்கும் இடிக்குரலும் மெல்லிசை பயின்று மிக இனிமை தந்ததுவோ!' அணியழகுடைய வரி. இடிக்குரலை

யும் மென்மையாக்கும் வன்மை வேண்டுகிறார் கவிஞர். வானம்பாடி நிலவொளியை உண்டு வாழ்வது எனவேதான் வானிலவு பாடிற்று என்கிறார்.

பனைமரம், மாவலிபுரச் செலவில் பேசப்படுகிறது. பனை மட்டை சத்தம்: மட்டைக் கரங்கள் பிணைத்தே-இன்ப வார்த்தைகள் பேசிடும்போது கட்டுக்கடங்கா நகைப்பைக் கலகலவென்று கொட்டிற்றே: நகைப்பை உண்டாக்கவோ அன்றி நகைப்பைப்பற்றியோ அடிக்கடி கவிஞன் பாட வேண்டும். அதிலேயே அவலம் தோன்ற ஒன்றைப்பாடுவது அன்றி அவலத்தைப்பற்றிப் பாடுவது என இருவகையில் 'இவ்வுணர்ச்சி' கிளர்ந்தெழுகிறது.

தென்றல் கற்பனை ஆழ்ந்த உள்ளத்தில் எழுந்தது. கவி, சிந்திக்க வைக்கவேண்டும். அதற்குரிய பாடலுள் ஒன்று இது. தலைவன் தனித்துக் கிடக்கிறான். தென்றல் துயரப்படுத்துகிறது. இங்குத் தென்றல் இரண்டுருவம் எடுக்கிறது, சினிமாவில் ஒரே ஆள் ஒரே சமயத்தில் இரண்டுருவத்துடன் தன்னிடமே தான் உரையாடிக்கொள்வதுபோல!

**'தெரியாமல் பின்புறமாய் வந்த பெண்ணாள்**
**சிலிர்த்திடவே எனைநெருங்கிப் படுத்தாள் போலும்**
**சரியாத குழல்சரிய லானாள் போலும்**
**தடவினாள் போலும்எனைத் தன்கரத்தால்**
**புரியாத இன்பத்தைப் புரிந்தாள் போலும்**
**புரியட்டும் என இருந்தேன் எதிரில் ஓர்பெண்**
**பிரிவுக்கு வருந்தினேன் என்றாள் ஓகோ**
**பேசுமிவள் மனைவி,மற் றொருத்தி தென்றல்,'**

கவிகட்குச் சிலேடைஅணி தோன்றுவதற்குரிய கற்பனை ஊற்று இத்தகைய காட்சிகளிலிருந்தே தோன்றியிருக்க

வேண்டும். இங்கு முன் ஐந்து வரிகள் பெண்ணுக்கும் தென்றலுக்கும் பொதுச்செயலான சிலேடை.

முல்லைக்காடு என்ற தொகுப்பில் 'அந்திக் காட்சி' நிலா வருகிறது.

**' சிந்தையை அள்ளுது கண்டீர்—அங்குச்**
**சீதக் கடல்மதிச் சேர்க்கை**
**அந்தியும் நிலவும் கடலின்—இரு**
**மனைவியர் சக்களத் திகளாம்'**

அந்தி வாடி நடந்தது, பீடழிந்தான் கடற் கணவன்;

**' வந்திடும் சோதி நிலவைக் கடல்**
**வாரி யணைத்தனன் கண்டீர்'**

'சோலை'யில் ஒரு காட்சி: 'தண்டலை மயில்களாட' என்ற நாடறிந்த பாடலுடன் நிறுத்தி இதனை நினைக்க வேண்டும்.

வானவில் ஏந்தல் கண்டு மாந்தளிர் மெய்சிவக்க மலர் மகரந்தம் தூவ ஆனந்தத் தென்றல் ஆலவட்டம் பிடிக்க, வானவில் மறைய மாவை, 'மல்லிகை சிரிக்கும் சோலை' அது. 'தண்டலை மயில்க ளாடத் தாமரை விளக்கந் தாங்க வண்டு பண்பாட மருதம்வீற் றிருக்கும்' காட்சி முன்னது.

எண்ணத்திலே இன்பம், அழகு, இளமை, மணம் என்பவற்றை ஏற்றிக்கொண்டே இருப்பது இயற்கை. அதனை நேரே அடையாதபோது நினைவால் அடையுமாறு செய்வது கவிதை; காலம் இடத்திற்குக் கட்டுப்பட்டதை யெல்லாம் காலங்கடந்ததாக்கி அழியாநிலை யளித்து அமுதத்தன்மை யளிப்பதே கவிஞன்-படைப்புத் திறன். நேரிற்காணும் மாறுபடக்கூடிய, அழியக்கூடிய இயற்கைமரம் செடி, மதி, மலர் முதலியவற்றை எண்ணத்தில் சேர்த்து என்றும் நிலையாக்குவதே கவிஞன்-கற்பனைத் திறன்.

# இசைப்பாடல்

தமிழோ டிசைபாடல் மறந்தறியாத தமிழ்ப்பண்பும் இலக்கியமும் சங்கத்திற்குப் பின்பும் முத்தமிழ் என்ற தமிழில் வளர்ந்தன. அருளின் மாறுதலைப் பெயர்க்கும் (மறத்தனத்தை மாற்றும்) மருவின்பாலை (பண்) எனப் பத்துப் பாட்டு இசைபற்றி இயம்புகிறது. புரட்சிக் கவிஞர் முத்தமிழ்ப் புலவர் எனப் பாராட்டப்படுதல் ஏற்றமுடையதே. நாடகக் காவியங்களை நாலைந்து எழுதியுள்ளார். மற்றும் அவர் தனிக்கவியெல்லாங்கூட நாடகக் காட்சிகளே. இசைப் பாடலோ (சாகித்யம்) எண்ணில இயற்றியுள்ளார். 'இசையமுது' என அத்தொகுதிகள் பேர்பெற்றுள்ளன. கலித்தொகை, பரிபாடல், தேவார-பிரபந்தம், திருமுறைகள், திருப்புகழ், அருணசலக்கவி, கோபாலகிருஷ்ண பாரதி ஆகியோர் பாடல்கள் எனப் பரம்பரையைப் பார்த்தால் இசையோடு தமிழ் என்றும் பிரிந்து நிற்கவில்லையெனப் புலனாகும்.

நாடகம் எழுத்தறிவற்ற சாதாரண மக்களையும் பிணிப்பதென்பர். இசையும் ஒரு வகையில் அத்தகையதே. அதனாற்றான் நாடகத்தில் அதனை இணைத்தனர். கவிதையைப் படித்துணரும் பண்பும் அறிவுமற்ற அனைவரும் இசைப் பாடல்களைக் கேட்டு அப்பயனை அடையலாம். எனவே

இசைப் பாடல்கட்கும் பொருள்—கருத்து நல்லதா யிருக்க வேண்டும்.

இவர் இசைப்பாடல்களும் அத்தகுதி வாய்ந்தன. பொதுமக்களைக் கவர்ந்து கொண்டு, புலவரைப் பரவசப் படுத்தியது கொண்டு சாகித்தியத்தின் சிறப்பினை அளந்து விடலாம். இவர் பாடலுள் 8—10 ஏராளமான இன்பமும் புகழும் ஏற்றவை.

'தலைவாரி பூச்சூடி உன்னை' என்ற பாடல் இளையர் மூத்தோர் எவரையும் பிணிப்பதும் பணிசெய்யத் தூண்டு வதுமாம். 'மலைவாழை அல்லவோ கல்வி, என் கண்ணல்ல அண்டைவீட்டுப் பெண்களோடு, கடிகாரம் ஓடுமுன் ஓடு' என்ற தொடர்களை இசைக்கையில் இயற்றமிழும் இசையாக மாறி யுருகுகிறது. *'துன்பம் நேர்கையில் யாழெடுத்து நீ' என்ற பாடல்: இவருக்கும் யாழ் என்ற சொல்லுக்கும் உறவு மிகுதி. யாழில்லா இவர் நூலே யிராதெனலாம். அன்பிலா நெஞ்சில் இசை அல்லலை அகற்றுகிறது; வாழ்வில் உணர்வு சேர்ப்பது வண்டமிழ்க் 'கூத்து' (நாடகம்), அறம் மறம் இன்னதென அறிவிப்பது வள்ளுவனாரின் இயற்றமிழ்க் குறள்.

'வெண்ணிலாவும் வானும் போலே' கன்னல் தமிழும் நானும் என்கிறார். தமிழ் என நினைத்தாலே இவரிடம் தனிக் கற்பனை தளிர்த்துவிடுகின்றது. தமிழ், வானும் வாளும் மணமும் இசையும் ஒளியும் போல்வதாம். வான் புகழ் கொண்டது தமிழ் என்பர் பாரதி. எம்மொழியை யும் வெல்லும் வாள்-தனம் உற்றது. என்றும் இன்பம் (மணம்) செறிந்தது. கலை (யிசை)கள் கெழுமியது. ஒன்று இருக்கும்போதுறுவது ஒளி. மறைந்தபின் அடைவது புகழ். இங்குத் தமிழ் ஒளி என்பது என்றும் இருந்தடையும் புகழை யடைந்துள்ளது எனக் கருத்து.

வெண்ணிலா-வான் காட்சியின்பமும், வீரன் வாள் தொட்டுறும் ஊற்றின்பமும், பூமணம் முகருமின்பமும் யாழ்-இசை கேட்டலின்பமும் கண்-அறிவின்பமும் அளிப் பன. எனவே ஏந்திழை யின்பம்போலத் தமிழ் தனக்கு ஐம்புல வின்பமும், மேலே அறிவின்பமுங் கூடத் தருவதெென ஆழமும் அழகுமுறக் கூறுகிறார் கவிஞர்.

'இன்பந் தருந்தமிழில் அன்பு பிறந்ததுண்டு' என்ப தோர் பாடல். 'தாயின்மேல் ஆணை'—வெற்றி யெட்டுத் திக்குமெட்ட என்ற பாரதி பாடலின் மறம் உடையது.

'அந்த வாழ்வுதான்' என்ற பாடலைக் கரும்புத் தோட் டத்திலே என்ற இரக்கவுணர்ச்சி யெழுப்பும் பாரதி பாட லுடன் இணைத்துக் காணவேண்டும்.

'தமிழனே இது கேளாய்', நீராருங் கடலுடுத்த என்ற சுந்தரம்பிள்ளையின் உணர்ச்சியும் மொழிநூற் குறிப்பும் உடையது. உயர்ந்த கோட்பாடுகளையும் இசையில் இணைத்துவிடுகிறார்.

'வாழ்வினில் செம்மை செய்பவள் நீயே' 'இன்று நீங்கள்' என்ற பாடலெல்லாம் என்றும் நிலைத்தனவாம். இப்பாடல் களெல்லாம் இன்று தமிழகத்தே வாளெலியிலருமல் வழங்கி வருகின்றன.

'ஆலையின் சங்கே நீ ஊதாயோ'—தொழிலாளர் பாட்டு. கடவுளைப்பற்றிப் பாடினால்தான் கவி இசையாகும், என்பதைக் கழறி எந்தப் பொருளும் இசைக்குச் சேரும் எனக் காட்டுமிடம்.

சங்கப்பாடற் கருத்தையெல்லாம் கலந்து சாகித்திய மியற்றியுள்ளார் பலவற்றுள். 'யாயும் ஞாயும் யாராகி யரோ' என்ற குறுந்தொகைப் பாடல் கற்றோர் பெருந்

தொகையால் பேசப்படுகிறது. என் தாய் யாரோ உன் தாய் யாரோ எனத் தொடங்கி

**' செம்மண் நிலமும் பெய்த மழையும்போல்**
**சேர்ந்தோம் அடடா இன்பம் ஆர்ந்தோம் '**

எனச் செல்கிறது பாடல்.

' செல்லார் என்று நான் ' என்ற பாடல்

**' செல்வார் அல்லரென் றவளிகழ்ந் தனளே**
**வீவாள் அல்லளென்று யானிகழ்ந் தனனே '**

என்ற சங்கப்பாடலை நினைக்கிறது. மற்றும் அகத்திணைத் துறை பலவற்றை அழகிய பாடல்களில் அமைக்கிறார். வாழ்க வாழ்கவே வளமார் திராவிடம் என்ற பாடல் செந்தமிழ் நாடெனும் போதினிலே என்ற பாரதிப் பாடலின் பெருமையெல்லாம், பரவலெல்லாம் பெற்றது.

ஊர்ந்தின்புறாவிடினும் ஈர்த்தின்புறும் இளையோர்போல என்ற எழிற்பாடல் குறுந்தொகைக் குரியது. குழந்தை மரத்தால் செய்த யானையை ஏறிச் சவாரிசெய்ய முடியா விடினும் ஈர்த்து இன்புறுகிறது.

தலைவனைத் தொட்டின்புறாவிடினும் அவனை நட்பு கொண்டிருத்தலே இன்பம் என்கிறாள் தலைவி. இது 'அடிக்கடி பார்த்துக்கொண்டிருந்தால் போதும்' என்ற தேனருவிப் பாடலுள் தெளிவாகிறது. எதை வேண்டித் ' தவங் கிடந்தாய் ' என் தமிழ்த் தாயே—என்பது இரக்க உணர்ச்சிக்கு எல்லை காண்பதாயுள்ளது

தனிக் கவிதைகளில் சொல்லும் தம் கருத்துக்களை யெல்லாம் இசையிலும் இணைத்துவிடுகிறார். உரை நடையில் எழுதவேண்டிய சொந்தக் கருத்து, மறுப்புக்கள் அனைத்தையும் பாடலிலேயே எழுதிப் பரப்பிவிடுகிறார். சீட்டுக்கவி

காதற் கடிதமெல்லாம் முற்காலத்தே பாவகையிலேயே பொறிக்கப்பட்டன அதுபோல. 'எனக்கு வந்த அஞ்சல் அட்டையில்' என்பது அத்தகையதொன்று.

இணிப்பு, இளுப்பு, குனம், காக்ஷி, அப்போ, இப்படிக்கி, அவைகள் வந்தது, பாட்டி செத்தது, கவர்ந்துக் கொண்டான், கண்டுச் சொன்னுன், காற்று பட்டது, கடித்து தின்ருன், எவரை கண்டீர், எப்படி சொன்னீர்—இவையெல்லாம் தமிழைக் கொன்று குலேத்தவர் இலக்கியம் என இரங்குகிருர். இவர்கள்

**'சுவையுள்ள எட்டுத் தமிழ்ப் படங்களின்**
**தூய தமிழ்எழுத் தாளர்என் ருர்தமை'**

தமிழர்கள் துன்பத்தைத் தழுவினர். கடமையில் வழுவினர் ஆதலால், என்பது கருத்தோவியம்.

**'தமிழ்நெறி தன்னே இகழ்ந்தார்**
**பிறநெறி தன்னே மகிழ்ந்தார்**
**நமரெலாம் எக்கேடு கெடினும்**
**நமக்கென்ன என்று பகைவரைப் புகழ்ந்தார்'**

ஒன்றே அலால் குலமில்லே ஒருவனே அலால் தெய்வமில்லே என்ற தமிழரின் சொல்லே மறந்ததால் அல்லவா வந்ததிந்தத் தொல்லே என்று இடித்துக் காட்டுகிருர்.

ஒருவனே தேவனும் என்ற திருமூலர் சித்தாந்த நெறியைச் சிறப்பித் துரைத்தலால் 'பிறர் சமயச் சழக்கற்ற உயர்ந்த தூய ஒரு கடவுள் கொள்கை' உடையராயிருத்தலே இவர் வெறுக்கவில்லேயென உணரலாம். முன்பும் இது பற்றிக் குறிப்பு மொழியப்பட்டுள்ளது.

வாழு மாந்தர்க்கு என்ற பாடலில் 'சிறுகொம்பு பெரும் பழம் தாங்குவதுபோலே' என்பது சிறுகோட்டுப் பெரும்

பழம் தூங்கியாங் கிவள்உயிர் தவச்சிறிது காமமோ பெரிதே' என்ற குறுந்தொகைப் பாடலை அகத்தே கொண்டதாம். குறுந்தொகைப் பெருந்திறல் வரிகளையெல்லாம் இவர் பாடலுள் எடுத்து வைக்கிறார்.

அத்தானே வேண்டும் என்ற பாடல் (காதல்) அன்புக்கு முரணானவை எவையென முற்றுப்புள்ளி வைக்கின்றது. முத்துச் சரப்பளி, பட்டுப்புடவை, மூக்குக் காது நகை, பத்துக்காணி நிலம், பால் நெய், மெத்தைவீடு வேலைக்காரி அத்தை மாமன் அனைத்தும் வேண்டாம் ஆனால் **முத்தமிழ் கற்ற அத்தான்** ஒருவனே வேண்டுமாம்.

பெருந்திணையன்பினைத் 'துயருற்ற மகளிர்' பாடலுள் தோன்றக் காணலாம். மற்றும் நற்றிணை, புறத்திணைத் துறைப்பாடலெல்லாம் படித்தும் பாடக் கேட்டும் நுகரத் தக்கன. பைந்தமிழ் இலக்கிய, புறத்திணை அகத்திணை இலக்கண அறிவில்லாத ஏழைத் தமிழர்க்கு இப்பாடல்கள் மிகப் பயன் அளிப்பன.

மற்றும் கவித்தொகுதிகள் அனைத்திலும் இவரது இசைப்பாட லமைப்புக்கள் கவிந்து நிற்கின்றன. தாலாட்டுப் பாடல்கள் தனியின்பமும் இசையும் தளிர்ந்தன.

ஆர். கே. சண்முகமும் அண்ணாமலைச் செட்டியாரும் கல்கியும் தமிழிசைக் கிளர்ச்சி தொடங்கி வெற்றிகண்ட காலத்தே ஏற்பட்ட வீரவுணர்ச்சியின் விளைவுகள் இவ் விசைப் பாடல்கள் எனலாம். பண், இசைக்கருவி பழைய இலக்கியக் குறிப்புக்கள், தெலுங்கு மலையாளம் முதலாம் மொழிகளில் கிடையா. கர்நாடக இசை பழந்தமிழ் இசையே. இவ்வுண்மையைக் காணும் ஆராய்ச்சி இன்று தெளிவடைந்து வருகிறது. இவர் கோட்பாடுகளை அறிய இவ்விசைப் பாடல்களே போதும். மற்றக் காவியங்கள், கவிதைகள் வேண்டாம்.

*பல்லவி*

| | |
|---|---|
| இன்பங் குறையாத | இசைகொண்ட தமிழ்தந்தான் |
| அன்பு பெரிதென்று | பாடுவோம்—அவன் (இ) |

*அநுபல்லவி*

| | |
|---|---|
| துன்பம் கணக்கில்லை | தூற்றல் வழக்கில்லை |
| வன்பு மனிதரின் | வாயை அடக்கிட (இ) |

*என நமது இந்த இசைப்பாடலால் புலவரை ஏத்துவோமாக!*

# தமிழியக்கம்

இப்பெயருடன் ஒரு தொகுப்புள்ளது இவர் கவிதை களில். பாரதிதாசன் திராவிட இயக்கம், நாத்திக இயக்கம். பொதுவுடைமை இயக்கம், சீர்திருத்த இயக்கம் எனவெல் லாம் இயம்புவதைவிடத் தமிழியக்கம் என்பதே தக்க தாகும்.

அவர் தமிழியக்கத்துட்பட்டதே மற்ற இயக்கங்கள் அவர் உயிரியக்கமே தமிழால்தான். தமிழின் இயக்கத் திற்குத் தொண்டாற்றிய புலவருள் அவரையும் சிறந்த ஒருவராகக் கொள்ளலாம். இசை, காவியம், கவிதை எங்கும் இவரது தமிழியக்கம் தலைதூக்கி நிற்கிறது. கத்தி கூட 'தமிழச்சியின்' கத்தியாலுற்றுன் கூராயிருக்கிறது. இவர், எதிர்பாரா முத்தத்தில் தமிழியக்கம் தலைசிறந் துள்ளது. புரட்சிக் கவியைத் தமிழ் இயக்குகிறது.

தமிழின் தாழ்நிலை, பெருமை, பண்பு, அதனை ஆக்கிய புலவர், தமிழ் எதிரிகள், திருத்தம், எனவெல்லாம் பிரிவு படுத்திப் பாடுகிறுர் கவி.

தமிழ் அவர்க்கு உயிர். தமிழ் என்றன் உயிருக்கு நேர் என்றேதுவார். தமிழ்ச்சீர், தமிழ்த்தீனி, தமிழ்ச் சாப்பாடு

என, எல்லாம் அவருக்குத் தமிழ். எங்கும் நிறைவான பரம் பொருள் அவர்க்குத் தமிழ்தான்.

தமிழை என்னுயிர் என்பேன் கண்டீர், தமிழும் நானும் மெய்யாய் உடலுயிர் கண்டீர் என்பவர் ஒரு நுட்பங் காட்டுகிறார்.

ஆண்டவனை வேண்டுபவன் இவ்வுலக உறவுகளை யெல்லாம் விட்டுத் தாண்டவேண்டும். அங்கு அண்ணன் தம்பி அன்னை தந்தை மனையாள் மக்கள் இவரனைவரும் அயலவராகிடும் வண்ணம் தமிழ் என் அறிவினில் உறைதல் கண்டீர்! எனவே வாழ்வது தமிழுக்கு, இஃதொரு பெரிய சித்தாந்தம். தான் எடுத்த உயர்ந்த பணியை முடிக்க இவ்வுலகில் எல்லாத் தொடர்புகளையும் விட்டு 'அக் கோட்பாடே' குறியாக நின்றால்தான் அது முடியுமென்பது. கடவுளைக் கண்டோமென்பாரும், உரிமையைக் கொணர்ந் தோமென்பாரும் இப்படியே வாழ்ந்துள்ளனர்.

'எங்கள் உரிமைச் செம்பயிருக்கு வேர்' தமிழ் என் கிறார். உரிமைகொண்ட தமிழ்மக்கள் ஊன்றியறிய வேண்டும் - தமிழ் எங்கள் பிறவிக்குத் தாய்!

'தமிழ் உரையில்' பெண்கள் காதலருடன் பேசி மகிழ்ந் தனர் ஆற்றங்கரைதனிலே. குழந்தைகள் அருகில் ஆடிக் கொண்டுள்ளனர்.

**'கோட்டைப் பவுன் உருக்கிச் செய்த**
**குத்து விளக்கினைப் போன்றவர்'**

குடிக்கு விளக்காகிய மக்கள் என்றே அகநானூறு பேசு கிறது. ஒரு புறம் பொருளற்ற பாட்டுக்கச்சேரி. அதனைப் புத்தமுதென்றனராம். இருளுக்குள் சித்திரத்தின் திறம் ஏற்படக்கூடுமோ என்கிறார்.

**சங்கீத விற்பனனும்—ஒரு**
**சண்டாளன் ஆரம்பித் தான் இந்துஸ்தான் ஒன்றை**

*அப்பாட்டில் சுவை அத்தனையும் கண்டுவிட்டதுபோல;*

**நம்குள்ளர் வாய்திறந்தே—நன்று**
**நன்றென ஆர்ப்பரித்தார்.**

*கவிஞர் ஆத்திரப்படுகிறார். எங்கிருந்தோ தமிழில் ஓர் இன்ப நறுங்கவி கேட்டதாம்.*

**'அஞ்சலை உன் மீதில்'—என**
**அவ்வண்ணத் தமிழ்ப்பதம் பண்ணிற் கலந்தென்**
**நெஞ்சையும் வானத்தையும்—குளிர்**
**நீரையும் நிலவையும் தமிழர் குலத்தையும்**
**ஒன்றெனச் செய்ததுவே.**

*இது நாட்டினில் எங்கணும் பல்குக! இன்பம் எனப்படுதல் தமிழ் இன்பம் எனத் தமிழ்நாட்டினர் எண்ணுக.*

*'கதைகள் சொல்லிக் கவிதை எழுதென்பாள் காவியம் பல நீண்டன கட்டென்பாள்' என்ற பாரதிப் பாடலுடன்,*

**ஏடெடுத் தேன்கவி ஒன்று வரைந்திட**
**என்னை எழுதென்று சொன்னது வான்.**

*என்ற கவியை இணைத்துப் பார்க்கவேண்டும். இயற்கைக் காட்சிகளைத் தீட்டுவதில் என் தமிழ் மக்கள் துயின்றிருந்தார்.*

*இன்பத் தமிழ்க்கல்வி யாவரும் கற்றவர் என்ற நிலை ஏற்பட்டுவிட்டால் துன்பம் நீங்கிச் சுகம் வருமாம், நெஞ்சில் தூய்மையுண்டாகி வீரம் வருமாம். இருண்ட வீட்டிற்குக் காரணம் கல்வியின்மை என்றார்.*

*எளிய நடையில் தமிழ்நூல் எழுதிடவும் வேண்டும். இஃது இவர் கொள்கை; பாரதிப் பரம்பரை. தேவாரம்*

சித்தர் தாயுமானவர், இராமலிங்கர் இவர்தம் பாடலெல்லாம் எளியனவே. எனினும் இவர் நடை மிக மிக எளிதானதெனலாம். சாதாரண மக்கள் பேசுவதை அப்படியும் இப்படியும் யாப்பிற்காகச் சிறிது மாற்றிப் பாட்டாக்கினாற் போன்றே உள்ளது. அகவல் (பேசுவதுபோல் ஓசை) ஆசிரியப்பா என்பது இவரிடம் தெள்ளத் தெரிகிறது. தமிழ்ப் போசனம் தகாத்தகாயத் தமிழ், தாபிப்போம் என்ற பிற சொற்கள் இடை மறிக்கின்றன.

**உலகியலின் அடங்கலுக்கும் துறைதோறும் நூற்கள்**
**ஒருத்தர்தயை இல்லாமல் ஊரறியும் தமிழில்**
**சலசலென எவ்விடத்தும் பாய்ச்சிவிட வேண்டும்.**

'கொட்டிவிட்டாள் என்னைத் தொட்டிழுத்தாள்' இவ்வரியின் ஓசை பாரதியை நினைவிற் கொண்டுவருகிறது.

தாயுமானாரின் 'எந்நாளோ' கண்ணியின் ஏக்கம் இங்கு வருகிறது. 'தமிழர் நூற்கள் வையத்தில் புதுமை என்னப் புத்தகசாலை எங்கும் புதுக்குநாள் எந்நாளோ? தமிழரின் கவிதைதன்னை ஆயிரம் மொழியிற் காண இப்புவி அவாவிற்றென்றே, செய்தி செவியில் வந்து பாயுநாள் எந்நாளோ!

எட்டுத் திக்கும் கலைச்செல்வம் யாவும் கொணரச் சொன்னார் பாரதி. இவர் இன்னும் ஓரடி எட்டிச் செல்கிறார். எட்டுத் திக்கும் இங்கு வந்து தமிழ்க் கலைச்செல்வத்தை அள்ளிச்செல்லும் நாளைக் காண அவாவுகிறார். வெள்ளம்போல் தமிழர் கூட்டம், வீரங்கொள் கூட்டம் உள்ளத்தால் ஒருவரே, கள்ளத்தால் நெருங்கொணாதே என வையம் நடுங்குநாள் வரவேண்டுமாம்.

இன்னதென இயம்பவியலாப் பழமையினர் சேர சோழ பாண்டியர் எனப் பகருவார் பரிமேலழகர். இங்குப் பரிதி, திங்கள் உடுக்கள் விண் கடல் இவற்றோடும் பிறந்தது தமிழ்

என வேறுவகையால் அதனை வற்புறுத்துகிருர். என்று பிறந்தவள் என்றுணராத இயல்பினளா மெங்கள் தாயென்பார் பாரதியார்.

கங்கையைப்போல் காவிரிபோல் கருத்துக்கள் ஊறு முள்ளம் எங்கள் உள்ளம் என்கிருர். காவிரிநாடனைய கங்கைநாடு என்ற கம்பர்வரி கருத்தில் வருகிறது.

தமிழ்க்கன்பு நன்று. கனவுபோய் விழிக்கப் பழைய நைந்த தமிழரொடு நானிருந்தேனே என நைகிருர் கனவில். சங்கீதமெல்லாம் தகாத்தகாயத் தமிழாம். இந்த தகத் தகாயச் சொல் பாஞ்சாலி சபதத்தே வருகிறது. பாரதி கூட்டத்தின் படைப்பு மொழியோ இது!

**கனல்நிகர் ஆரியர் நலிவே செயினும்**
**கலையாவும் வெந்து போகச் செயினும்**
**புனலிடைத் தமிழ் நூற்க ளெலாம் போயினும்**
**புதுமை இளமை எனும்படி**
**நாடாண்டது நற்றமிழ்**

‘சீரிளமைத் திறம் வியந்து’ சிறப்பித்தார் சுந்தரம் பிள்ளை. இங்குத் தேவார முதலியவற்றைத் தமிழ்க்கலையென ஒப்பு கிருர். ஏடுகளைக் கொளுத்தியமை அழித்தமை கண்டு எரிச்சலடைகிருர்!

**மொழிபொருள் மிகநன்ருய்க் காட்டுதல் கவியா**
**விழிபல் உதடுகாண அதட்டல் கவியா**

எனக் கருத்துப் புரியாத கர்நாடக இசையைக் காய்கிருர். பழமையை விடாமல் அகப்பொருள் இலக்கியம் ஆயவேண் டும். புதுமையைப் புறக்கணியாதும் புதுக் கலைநூல்களைப் பெருக்கவேண்டும் என்கிருர்.

முன்னைத் தோன்றிய மக்கள் முதன்முதல் பேசியது தமிழ் என்கிறது தேனருவி. உலகில் எழுதக் கற்றுக்

கொண்டபோது முதல் இலக்கியம் தமிழிலும் முளைத்தது. மற்ற உலக நாடுகளில் முதல் இலக்கியம் தோன்றிய காலத்தே தமிழிலும் இலக்கியம் தோன்றியது.

சிறந்த புலவர்சீர் செல்லாத இடமேயில்லை இவர்தம் கவிதையுள். முழுமையான தமிழறிவுடையோர் அறியும் புலவர் பேரும் பெருமையும் இவர் பாடலுள் பயின்று வருகின்றன. தனியிடம் வகுத்துத் தமிழ்ப்புலவர் பலரின் தனிச்சீரைப் பேசுகிருர். வெள்ளி வீதிபோல, அன்றும் பரணன் பாடினன், விளங்கு புகழ்க் கபிலன்; தேவர் குறளும், கம்பன் பிறந்த தமிழ்நாடு இவையெல்லாம் தமிழ்ப் புலவோர் காலந்தோறும் பிற புலவரைப் பழியாது, பொருமை கொள்ளாது போற்றிப் புகழ்ந்த இடங்கள். மறைமலையடிகள் 'தேனருவி'யில் முதலில் நிற்கிருர்; ஆழ்கடல் முத்தெடுப்பானைப்போல் அகன்ற உலக இலக்கியங்களில் ஆழ்ந்து உண்மை விளக்கியவர். 'மறையெனப்படுவது தமிழ் மறையே மற்ற மறைநூல் குறைநூல்' என முடிவு காட்டி நாட்டியவர்.

தேனருவியாம் திரு. வி. க. செந்தமிழ்ப் பேச்சும் எழுத்தும். தமிழ்மணம் காணுத நாளில் சோலையாகக் காத்தார்.

**'நமையும் உண்ணீர்என நல்கும் தமிழ்நடை**
**அமிழ்தன்று கனிபிழி ஆறன்று முத்தமிழ்த் தேனருவி'**

**' பலர்க்குப் புரியப் பாடுங்கள் என்ருல்**
**நொண்டி நடக்கும் பண்டிதர் நடைதான்**
**நூலுக்கு வேண்டும் என்ருர்கள் அந்தப்**
**பகைநடுங்கச் செய்த பாரதி'**

பாரதிபற்றி முன்பே பார்த்தோம்.

**வீட்டுக்கு வீடு விளக்கேற்றிஞன் எங்கும்**
**விடுதலை உணர்ச்சி உண்டாக்கிஞன்**

சிதம்பரன். துப்பாக்கி வேட்டுக்கும் வெஞ்சிறை வீட்டுக்கும் அஞ்சாமல், தண்டா விளைச்சலும்; தங்கச் சுரங்கங்கள் அண்டும் பெருநாடே எமதென்று தண்டோராப் போட்ட தமிழன் அவன். சிதம்பரனார் பற்றிய பாரதிப் பாடல்களை யும் ஒத்துப் பார்க்கவேண்டும்.

**இந்த நூற்றாண்டில் இருவர் பார்ப்பனர்**
**செந்தமிழ்ப் பற்றுடை யார்கள்.**

பாரதியும் பரிதிமாற்கலைஞனும் (சூரியநாராயண சாத்திரி) ஆவர் அவர். பரிதி நாடகத்துக் குயிர் நிறுத்தியவன்.

மனோன்மணீயம் சுந்தரம்பிள்ளை ஒன்று சொன்னாராம், அது 'ஆரியம் செத்தமொழி' என. ஜெஸ்பெர்சன் முதலாம் மொழிநூலறிஞரும் லத்தீன் வடமொழி இரண்டும் செத்த மொழியேயென இயம்புகின்றனர். ஆனால் தமிழர் கூறினால் வடவர்க்கு ஆத்திரம் வருகிறது. மொழி பாஷை எனில் பேசுதல் எனப்படும். எனவே பேசாதது மொழியாகாது. பேச முடிவதன்று மொழி, பேசப்படுவதே மொழி. பேச முடிவதாயிற்றே அதை யெப்படிச் செத்ததெனலாமெனச் சீறுகின்றனர். இந்தியாவில் 2000 பேரால் பேச முடிவது; 20 கோடிப் பேரால் பேசப்படாதது வடமொழி. வீண் சண்டையை விட்டு நம் காரியத்தில் நாட்டங் கொள்ள வேண்டும், இச்சண்டையை இனிவிட்டுவிடலாம்.

மதித்திடும் வண்ணம் தமிழ்த்தொண்டு செய்தோன் ஆர். கே. சண்முகம். வையக் கணக்கர்பால் தம் கணக் (Economics) குரைப்பான் கையொலி (கைத்தட்டல்) செய் வர் வையக் கணக்கர்.

வரைவியல்துறையில் (Engineer) அலுவல் வல்லான் மாணிக்க நாயக்கர்! ஒலிவடிவினுக்கும் வரிவடிவினுக்கும் ஓம் எனும் தமிழ் எழுத்தே முதல்என முடிவு காட்டியவன். வள்ளுவன் நிகர்த்த கல்வி வல்லானும். புலவர் வகுப்பு

மூன்று படைத்து மீண்டும் மதுரையில் தமிழ்ச்சங்கம் நாட்டினன் பாண்டித்துரை.

**வான விரிவைக் காணும்போ தெல்லாம்உமா**
**மகேச்சுரன் புகழேஎன நினைவில் வரும்.**

நீலமணிமிடற் றொருவனென மன்னுகவென அதியமானை வாழ்த்தினர் ஔவை. செவ்வானையும் பிறையையும் காண்கையில் கவிஞர்க்கு செஞ்சடைச்சிவன் நினைவு வரவில்லை; ஆனால் தமிழ்க்கல்லூரி தெரிந்த உமா-மகேசுவரன் நினைவே வருகிறதாம். அவன் தமிழ் முனிவனும். கொடுப்போரேத்தலும் கொடாஅர்ப் பழித்தலும் வேண்டுவனவே என்பது தொல்காப்பியர் கருத்து; சங்கப் புலவரும் இதனைச் செய்தனர். இகழ்ந்த அரசரை எள்ளிப் பழித்தனர், ஆனால் அறிதற்கரிய முறையில்.

நேரே கசியும்படிக் கழறுவது இடைக்காலப் புலவரிடை இருந்த வழக்கு. ‘எட்டேகால் லட்சணமே’ என ஔவை கம்பரைப் பழித்ததாகத் தனிப்பாடலுள் உள்ளது. ஔவை, கம்பர் இருவர் இலக்கியத்தும் இப்பாடல்கள் இடம்பெறவில்லை. இந்நெறியை மக்கள் ஏற்கவில்லை ஆதலாலேயே தனிப்பாடலாக்கி மறைந்துவிடவிட்டனர்; தோண்டியெடுக்க வேண்டியதாயிற்று.

கொடுப்போ ரேத்தியதுபோல நாட்டுக்குத் தமிழுக்கு நலம் செய்தோ ரேத்திச்செய்யார்ப் பழிக்கலாம் என இக் கவிஞர் எடுத்துக்கொண்டார். முன் செய்தோரேத்தினர். தமிழியக்கத்தில் பழிக்கிறார். ஆனால் இப் பழிப்பாடல்கள் காலங்கடந்த கலைத்திறனை அடைந்து நிறுத்தவில்லை. இப் பழிப்பு, பாடலில் செதுக்காமல் இருத்தல் இனியதே. பிற்காலத்தே வாழ்க்கைக் குறிப்பு, வரலாற்றாராய்ச்சிக்கே இது உதவும்.

கம்பர் பாடலுள் முக்காற்பங்கையும் கழித்துப் பதித்த டி. கே. சி.யை, மேவாதசெயல் செய்த இந்தக் கொம்பன் யார் என்கிருர். வையாபுரிப் பிள்ளேயும் இச்செயலே வெறுத்தார். இங்கு எதிர்ப்பில் அதிகக் குறையில்லே. ஆனல் வாட்டடங்கண் என்பதை 'வாள்த்தடங்கண்' எனப் புணர்ச்சி சேர்ப்பதனேப் பழிக்கிருர். பண்டையோர் நெறிக்கு இது புறம்பாயினும் இப்புணர்ச்சியில் பாதியைப் புதியன புகுதலாக ஒப்பலாம். கல்த்தரை என்கையில் அதிகப் பிழையில்லே, விளங்குகிறது. ஆனல் கல்த்தாரை, (கற்ருரை) என்பது விளங்கவேயில்லே. இயல்பும் மிகுதியும் உறழ்ச்சியுமாகும் என இலக்கணமே வழுவழாச் செய்யும் இடம் பல. ஏதோ தன் பேரைப் பரப்பும் ஆசையால் டி. கே. சி. இங்கே புதியது கண்டதாகப் பேசித் திரிந்தார். ஆனல் அதனேப் புதிதாகப் புரட்சியாக நம்பியதே நம் குறை.

சிலேடை நயத்துடன் பண்டிதமணியைத் தாக்குவதே பரிதவிக்கத்தக்கதாகிறது. பகையைப் பாட்டில் நிலேக்க வைக்கலாகாது. இப்படி எழுதும் டி. கே. சி.களுக்கு 'மணிப்பண்டிதர்கள்'.

**'சாட்டை கொடுத் தறிக்கை இடத்**
**தாள் ஒன்றும் அற்றதுவோ'**

என அவரை, அங்கவீனத்தைச் சுட்டிக்காட்டி அவமானப் படுத்துகிறது பாடல். பின்பும்,

**'கற்போரின் பகுத்தறிவைக் கவிழ்க்கின்ற ஒழுக்கமிலார்**
**கதையைத் தாங்கி**
**நிற்பாரும் நிற்பாரோ நின்ருலும் வீழாரோ**
**நெடுங்கா லின்றி'**

என்ருேர் அடி வருகிறது. உள்ளத்தே துயரத்தை வரிக் கிறது இவ்வரி. வடமொழி பெயர்ப்புபற்றி மற்ருேரிடத்தே இவரைக் குறிப்பாக எழுதிக் கேலி செய்கிருர்.

பொதுவாகக் குறைகளைக் கூறி மனதிற் படும்படிச் செய்யலாம். ஆனால் பேர் பொறித்துக் கூறுவது 'அவ்வளவு இனிமை தராது. அதனாற்றான் அகப்பொருளில் தலைவன் பேரைக் குறிக்கலாகாதென்கின்றனர்' தமிழ்-அறிஞர்.

மற்றபடித் தமிழியக்கம் ஓர் ஒப்புயர்வற்ற இலக்கிய மாகும். வெறும் உரைநடைக்கும் இதன் பொருள்கள் ஏலாதனவாகத் தோன்றும். ஆனால் கவியில் எழுதியதாற் றான் இந்நூல் கவின்பெற்றது. சீர்திருத்தச் செம்மல் இந் நூல் எனலாம். பழம்புலவரின் பாடல் நடை (Classical Style) பாண்டியன் பரிசின் நல்ல நடை, இக் கவிகளில் ஏற்றம் பெறுகின்றது. தமிழ்த்தொண்டர், தொடர்புடை யோர் அனைவரையும் திருத்துகின்றார் கவிஞர்; அவர்க்கு அதில் உரிமையுண்டு. ஆயிரமாயிரம் ஆண்டுகளாக அழிக் கப்படாமல் மாற்றப்படாமல் தமிழை நிறுத்தியவர் மக்கள் மட்டுமன்று; அது அவர்தம் இயல்பால் நின்றது என வேண்டில் இயம்பலாம்; ஆனால் புலவர்களின் இலக்கியத் தால் இயக்கத்தாலேயே நின்றது தமிழ். இப் பாடல்கள் மிகமிக வன்மையுள்ளவை; ஆணித்தரமானவை; செறி வுள்ளவை. இத்தனை வலிமை மற்ற கவிதைகளில் எங்கு மில்லை.

'நெஞ்சு பொறுக்குதில்லையே' என்றார் பாரதி. நெஞ்சு பதைக்கும் சொல்ல வாய் பதைக்கும் என்கிறார் புரட்சிக் கவிஞர். கரும்பு தந்த தீஞ்சாறே எனத் தொடங்குகையில் தமிழினிமையைக் 'கட்டி இரும்புதந்த நெஞ்சுடையார் துறை தோறும் நின்னெழிலை ஈடழித்து வரும் புதுமை நினைக்கை யிலே' தமிழர் நெஞ்சமெல்லாம் பதைக்கவே செய்யும்.

**' உடலியக்கும் நல்லுயிரே உயிரியக்கும் நுண்கலையே**
**மக்கள் வாழ்வாம்**
**கடலியக்கும் சுவைப்பாட்டே கண்ணான செந்தமிழே**
**அன்பே'**

என்கையில் தமிழ் உயிர், உயிரில் உறையும் கடவுள்நிலை யெய்தியிருக்கிறது.

**'கெடல் இயக்கும் நெஞ்சுடையார் துறைதோறும்**
**நின்னெழிலைக் கெடுக்கப் பாடு**
**படல் தன்னை நினைக்கையிலே நெஞ்சுபதைக்கும்**
**பகர வாய்பதைக்கும்'**

என இவ்வாறு ஒவ்வொரு பாட்டாய்ப் படித்துச் செல்கையில் நெஞ்செல்லாம் நெகிழ்ந்து உருகி உருவற்றே தமிழில் ஒன்ருய்விடுகிறது.

'இருப்பதைவிட இறப்பதே நன்று' என்பதில் தமிழைக் குலைப்போர் பேரையெல்லாம் வரிசையாகத் தருகிருர். 'பெருவாழ்விற்கோர் ஏணி பெற்றும் ஏருத தமிழர் உயிர் வாழ்வதினும் இறத்தல் நன்றே, புகழ்ச்சியினைப் போக் கடித்து வாழ்வதிலும், ஏற்றமுற எண்ணுது, எல்லையறிந்தும் திருந்தாத், தமிழர் உயிர் வாழ்வதினும் இறத்தல் நன்றே'.

கட்டியாய்க் கிடப்பதைக் கொல்லனும் குயவனும் முதலில் நல்லுருவமாக்குதற்காக தீயிலிட்டும் நீரிலிட்டும் நெகிழச் செய்துகொள்ளுகின்றனர்–களியையும் இரும்பையும். அதுபோன்று புலவர் இப்பாடல்களால் தீயெனக் காய்ந்துரைத்தும் நீரென நெகிழ மொழிந்தும் மக்களைப் பக்குவம் செய்துகொள்கிருர்.

**உணர்ந்திடுக தமிழ்த்தாய்க்கு வருந்தீமை**
**உனக்கு வரும் தீமை யன்ருே**
**பிணிநீக்கி எழுந்திருநீ இளந்தமிழா வரிப்புலியே!**

என்கிருர். இங்ஙனம் இளைஞர், பெண்கள், எல்லோரையும் தட்டியெழுப்புகிருர். 'ஒரு வானில் பன்னிலவாய் உயர் தமிழ்ப் பெண்களெல்லாம் எழுக' ஆருயிரில் வாரியிட்டுப்

பிசைந்ததான உரம்பெய்த செந்தமிழுக் கொன்றிங்கு நேர்ந்த தென உரைக்கக் கேட்டால்

**நரம்பெல்லாம் இரும்பாக்கி நனவெல்லாம் உணர்வாக்கி!**
**நண்ணிடரோ**
**'மணக்கவரும் தென்றலிலே குளிரா யில்லை**
**தோப்பில் நிழலா இல்லை**
**தணிப்பரிதாம் துன்பமிது தமிழ்த்தெருவில்**
**தமிழ்தான் இல்லை**

எனத் தவிக்கிறார். உணவுவிடுதிக்கு 'கிளப்', பட்டுத் துணிக் கடைக்கு 'சில்கு ஷாப்' எனப் பலகை தொங்குகிறதாம். பிராமணர்கள் உண்ணும் இடம், இப்பேச்சில் 'உவப் புண்டோ தமிழ்மானம் ஒழிந்திடுதே ஐயகோ உணர்வீர் நன்றே' என்கையில் 'பரந்து கெடுக உலகியற்றியான், இனிததூஉம் ஈதல் இயையாக்கடை' என்ற விடங்களில் வள்ளுவரின் உருக்கமும் ஆத்திரமும் உருவெடுத்து வருகின்றன.

அரசியலாரே, 'தூய்தமிழுக்கு வல்லூறாய் வாய்த் தீரோ வளம்செய்யும் எண்ணமெனில் நீர் பிறந்த நல்லூரின் நன்மொழியால் அல்லாது (அரசியல்) நடந்திடுமோ நவில்வீர்'. நரிப் பிணத்தை நரியுந் தின்னாது ஆனால் தமிழ்மானத்தைத் தமிழனே அழிக்கிறான் என்கிறார். நல்ல உவமை.

**'பொதுமையிலே கிடைத்திட்ட செல்வாக்கை**
**இனநலத்துக் காக்கு வோரை**
**இதுவரைக்கும் மன்னித்த எழில்தமிழர்**
**இனிப்பொறுப்பர் என்ப தில்லை.'**

குதிகாலும் (நடக்கையில்) மேற்செல்லும் அடுத்தபடி கீழே தான் வந்துசேரும் என்ற உவமை இனிக்கிறது. கீழே சேருவது ஓட்டுக் கேட்கவா!

**' அருவருக்கும் நெஞ்சுடையார் அருவருக்கும் செயலுடை [யார்**
**அன்றோ இந்தக்**
**கருவருக்கும் வினைசெய்வார் கலப்பாலில் துளிநஞ்சும்**
**கலத்தல் வேண்டாம்**
**' தமிழ்ப்பகைவன் முதலமைச்சாய்த் தமிழ்நாட்டில் வாராது**
**தடுத்தல் வேண்டும்.'**

*ஆட்சிக் கழகங்கள் எவற்றினுமே புக நினைப்போர் (தமிழ்) 'தகுபுலமை குறிக்கின்ற சான்று தரவேண்டும்' எனத் திட்டம் செய்யவேண்டுமாம். இது இனி நிறைவேறியாக வேண்டும். தமிழ் இன்று ஆட்சிமொழியானது; தமிழன் முதலமைச்சானன்.*

**' மாங்காட்டுச் செவிடனெதிர் வடிகட்டி ஊமையரை**
**வைத்த தைப்போல்**
**தீங்கற்ற தமிழறியான் செந்தமிழ்நாட் டலுவலின்மேற்**
**செல்ல லாமோ '**

*என உவமை காட்டி இடிக்கிறார்.*

*'தமிழ்ப்புலவர் ஒன்றுபடும் நன்னாளே தமிழர்க்குப் பொன்னாள்'. சமயமெனும் களர்நிலத்தில் இட்ட தமிழ்நூல்கள் இதுவரை என்ன பயன் தந்தன? பெரும்பான்மைத் தமிழர் தமிழை இதனாற்றான் வெறுத்தாராம். இங்குக் கருத்து வேறுபாடுள்ளது. இப்போது வேண்டின் 'சமயம்' களராகக் காணப்படலாம். இன்றுங்கூடச் சமயத்தமிழ், வரலாற்று நோக்குப்படியும் தமிழுக்கும் வாழ்வுக்கும் திறனளிப்பதேயாகும்.*

*சோற்றுக்கும், செல்வப் பேற்றிக்கும், பழமையை விடாமைக்கும், புலவர் தமிழ்எதிர்ப்போர் குழுவில் தங்குகிறாராம். 'காற்றிற்போம் பதராகக் காட்சியளிக்கின்றார்கள் புலவர் சில்லோர்', உண்மை !*

*கோயிலில் வடமொழியில் வழிபாடு மந்த்ரம் :*

**'படிகட்டித் தமிழரெனப் (கோயில்) படிக்கட்டின்**
**கீழ்நின்று தமிழ்மா னத்தை**
**வடிகட்டி அவன்வடசொல் மண்ணுங்கட் டிக்குவப்பீர்**
**மந்த்ரம் என்றே'**

*இங்குதான் வலிமையுள்ள வரிகள் வருகின்றன. பாடலைப் பலகாலும் படிக்கவேண்டுமென்னும் ஓசையும் சுவையு முள்ளன. இது சாக்கிய நாயனாரின் கல்லடி. தமிழ்ச் சிவனார்க்கு இனியதேயாகவேண்டும்.*

*அறத்தலைவர், கோயில் தலைவர், மடத் தலைவரைக் கேட்கிறார். செந்தமிழில் புதுப்புது நூல் விளைப்பதற்குச் செல்வத்தைச் செலவுசெய்தால் நந்தமிழ் நாடுயராதோ ?*

*'பொருளை அள்ளித் தந்தாரே முன்னாளில் தமிழ்நாட்டார் உம்மிடத்தில், தலைமையேற்று வந்தீரே அரசியல் சீர் வாய்ந்தாரை வசப்படுத்தி வாழ்வதற்கோ? இப்படியெல்லாம் இடித்த பிறகே இன்று தமிழகம் ஓரளவு மாறி வருகிறது.*

*நாட்டின் அறநிலையம் ஒவ்வொன்றுக்கும் செயல்திட்டம் தருகிறார். ஒரு தமிழ்க் கல்லூரி வீட்டிலுறு கழகம் நாலைந்து, புலவர் நூல் வெளியீட்டு நிலையம் ஒன்று இவற்றை நடத்த வேண்டுமாம். ஏதோ நூலை வெளியிடுகின்றன சில அறநிலையங்கள். அடக்க விலையென விற்கின்றன.*

**' மணமெல்லாம் வடசொல்லாலே**
**ஆனவையா சொல்லிடுவீர்**
**அந்நாளில் தமிழர்மணம் தமிழ்ச்சொல் லாலே**
**ஆனதென அறியீரோ!'**

*கணக்காயராக,*

**'நற்றமிழில் தமிழகத்தில் நல்லெண்ணம் இல்லாத**
**நரிக்கூட்டத்தைக்**

**கற்றுவைக்க அமைப்பதினும் கடிநாயை அமைத்திடலாம்!**
**தோயுந்தேன் நிகர்தமிழாற் பாடாமே தெலுங்கிசையைச்**
**சொல்லிப் பிச்சை**
**ஈயுங்கள் என்பீரோ,—எனத் தமிழிசை முழக்குகிருர்.**
**புளியென்ருல் புலியென்றே உச்சரிக்கும் புலியீரே**
**புளுக வேண்டாம்**
**துளியறிவும் தமிழ்மொழியில் உள்ளதுவோ பாடகர்க்குச்**
**சொல்வீர் மெய்யே**

*தமிழிசைப்புலவர் பட்டம் பெறுவோர் குறைந்தது இரண்டாண்டு (பிரிலிமினரி) தமிழ் அறிவாவது பெறவேண்டுமென்ருக்கவேண்டும். வேதநாயகன் பாடலை ‘இனிதான பாடல்’ எனப் புகழ்கிருர். சொற்பொழிவாளர்: ‘மொழியழிப்பான் தனைப்பற்றி ஒருமொழியும் மொழிவதில்லை, மொழிந்தால் கேட்போர் (சமயப்பற்றர்) விழிநோகும் என நடுங்கி, வெண்ணீற்றுப் பதிகத்தை விரித்துச் சொல்லிப்’ போவாராம். நகைச்சுவையும் ஓசைநயமும் உண்மையும் உள்ள பாடல்.*

*மதிப்புரை எழுதுவோர், யாவும் அறிந்தோம் என்பார், பெரும்பாலும் பிழையின்றி எழுதல் இல்லார் என்கிருர். மதிப்பு உரையில் அவர்கள் மதி-புரையோடிப் போனது எனத் தானே தெரிகின்றது. நூலாசிரியன் மதிப்பை உரையிட்டுப் பார்க்க உரமில்லை. இப்போது எவ்வளவோ திருந்தி வருகிறதெனலாம். நல்லோர் பலர் பெரிதும் நன்ருக எழுதுகிருர்!*

*இலக்கண இலக்கியம் தெரியாதான் ஏடெழுதல் கேடு நல்கும், ‘தலைக்கணையில் நெருப்பிட்டுத் தலைவைத்துத் துயில்வதுபோலாகும்’ என்கிருர். ஹட்சன் என்ற திறனய்வு நூலறிஞர் கவிஞனுக்கு மொழிப்புலமை நிறைந்தாலன்றி*

அவன் இலக்கியம் எடுபடாது, உண்மையாகாதெனு விரிவாக ஆராய்கிறார்.

**கடவுள் வெறி சமய வெறி**
**கன்னல் நிகர் தமிழுக்கு**
**நோய் நோய் நோயே.**

வெறி எதுவாயினும் நோயே. இப்போதே சொல்லுகின்றனர்; இனி எதிர்காலத்தில் தமிழ்வெறியும் நோயென்பர் தக்கோர்.

## காவியம்

### சஞ்சீவிச் சாரல்

கவித்துளிகளைக் கவிதையென்றும் தொடர்நிலைக் கவிதைகளைக் காவியமென்றும் கொண்டு இங்கு ஆராய்கிறோம். புலவரின் காவியங்களுள் முதலானது சஞ்சீவி பர்வதத்தின் சாரலேயாகும். இது கவிஞர் உள்ளத்தையும் கற்றோர் உள்ளத்தையும் கவர்ந்தேயுள்ளது. இக்காவியத்தின் வழியே தான் கவி முதலில் தமிழகத்தே அறிமுக மானாரெனலாம்.

'மாமல்லபுர யாத்திரை'யில் கவிஞர் ஓடத்தில் பக்கிங்ஹாம் கால்வாயைக் கடக்கிறார். பொழுதுபோக்கிற்காகப் படிக்கும் தோழர் 'சஞ்சீவிபர்வதச் சாரல் என்று சாற்றுஞ் சுவடி திறந்து சஞ்சாரவானிலும் செவியிலும் நற்றமிழ் ஏற்றி அஞ்சாறு பக்கம் முடித்தார்' என்கிறார்.

புரட்சிக்கவி, வீரத்தாய் என்பனவும் இவர்தம் காவியங்களே. எதிர்பாரா முத்தம், பாண்டியன் பரிசு, தமிழச்சியின் கத்தி, காதலா கடமையா, கடற் குமிழிகள் முதலியவெல்லாம் இவர் அளித்த சிறந்த சீர்செறிந்த காவியங்களாம். இவர் எண்ணத்தையெல்லாம் இவற்றுள் கொட்டி

யுள்ளார். முக்காலத்தையும் அளந்துள்ளார். காவிய நல னெல்லாம் இவற்றுள் கெழுமியுள்ளன.

காதல், தமிழ், வீரம், திருத்தம் இவற்றின் உட் பொருள்கள். பாரதி காவியம் பாஞ்சாலி சபதம் ஒன்றே யென்னவேண்டும். இவர் பல செய்வதற்கு நாட்டிலும் தனி வாழ்விலும் ஓரளவு அமைதியிருந்தது நற்பேறுதான்.

நாட்டு நிலையும் தமிழ்ப் பண்புமே காவியத் தூண்டு தல்கள். கம்பனைப் பின்பற்றிய சார்பு நூலெனலாம் சஞ் சீவிச் சாரலை. கம்பன் வான்மீகியைக் கதைக்குத் தழுவியது போலவே பில்கணீயத்தை இவர் 'புரட்சிக் கவிக்கு'த் தழுவி யுள்ளார். ஜீவகன், தாயை உள்ளத்துட் கொண்டு 'வீரத்தாய்' வரையப்பட்டிருக்கலாம்.

வடநாட்டையும் தென்னுட்டையும் தொட்டவகையில் இராமாயணத்தைக் கதையமைப்பில் தழுவியதே தமிழச்சி யின் கத்தியும் எதிர்பாரா முத்தமும்.

உரிமையுணர்ச்சியை சாதியொழிப்பை அடியாக் கொண்டன காதலா கடமையா?வும் மடற்குமிழியும். கதைத் தளத்தில் (Plot) (பெருங்காவியம் நாலேந்தில்) அடிக்கடி கிளைப்பகுதிகள் ஒன்ருகவே அமைவதாகக் காண்கிறோம். பிறன் மனைவியை அரசன் பற்ற விழைவதாகவே தமிழச்சி யின் கத்தி, காதலா கடமையா இரண்டிலும் கதை நாடி ஓடுகிறது.

இன்றைய நாட்டின் சமூக அரசியல் நிலைகளின் கண் ணுடியாக அமைகிறது கடற்குமிழி. தமிழுணர்ச்சி எதிர்பாரா முத்தத்திலும் அரசியல் கட்சிக் கிளர்ச்சி கடற்குமிழியிலும் கிளர்ந்து எழுகின்றன. எல்லாவற்றிலும் தமிழ்ப்பண்பு, பாடலழகு, ஓசைநயம் உயர்ந்து நிற்கின்றன. 5—6 ஜில்லாக் களில் கலந்தோடும் காவிரி வெள்ளம் போன்றுள்ளது பொதுவான காவியச் சுவை.

இனி சஞ்சீவிச்சாரல்: 'அன்பின் வழியதுயிர்நிலே' என இவர் குடும்ப விளக்கில் முடிவு காட்டுவதுபோல எக்காவியத்துள்ளும் அன்பே (காதல்) அகமுருவி யோடுகிறது. அன்பே இவர் காவிய-சீவன்.

இயற்கைச் சூழல், குப்பன் காதலியிடம் செல்கிருன், முன்ஞள் சொன்ன சஞ்சீவி மூலிகை இரண்டையும் கொண்டு தரக் கேட்கிருள். பர்வதச்சாரலேப் போயடைகின்றனர். மூலிகைகளேப் பறிக்கின்றனர். இன்று பிறர் பேசுவதைக் கேட்கச் செய்யும், மற்ருென்று ஓரிடத்தில் நடப்பதைப் பார்க்கச் செய்யும்.

முதல் மூலிகையால் இத்தாலியரும் அமெரிக்கரும் ஆங்கிலேயரும் என்ன பேசிக்கொள்கிருர் எனக் கேட்டனர். மற்ருென்ருல் பாகவதர் இராமாயண காலக்ஷேபத்தைக் கண்டனர்.-இராம கதைபற்றிய கவிஞர் கருத்து இங்குப் புலஞகும்.

சஞ்சீவிச் சாரல் சுருங்க வர்ணிக்கப்படுகிறது; குற்ருலமலேயின் வளத்தைக் குறவஞ்சியில் கண்டு கூட்டி நினேக்க! அங்கு 'பூக்கள்தோறும் சென்று தேனீக்கள் இருந்தபடி இன்னிசை பாடிக் களிக்கும்'; 'இருந்தபடி' என்ற சொல் மோனேக்காகுமா? எழுந்து பறக்கையில் தான் தேனீ பாடும். நெப்போலியன் குதிரைமேலிருந்தே உறங்கிக்கொள்ளு மாதிரியா? ஆடி அதட்டும் சேஷ்டையுடைய சங்கீத வித்வாஞகாமல் அமைதியாக சீவக சிந்தாமணியில் காணும் இசைப்புலவனே இங்குத் தேனீ 'இருந்து' இசை பாடுதற்கு! தானும் களிக்கிறதாம். காசுக்குப் பாடும்வானுக்குப் பரத்தைக்குப் போலத்-தனக்குப் பரவசமுண்டாகாது. அந்த கலேக்கும் தன் பண்புக்கும் குருதிக்கும் ஒரு தொடர்பிருந்தால்தான் பாடிப் பிறரைக் களிக்கச் செய்வதுடன் தானும் களிக்கும் நிலே வரும். தியாகராஜ கிருதி பாடு

வோர்க்கெல்லாம் அவரது அனுபவமும் உடன் உண்டாகா தல்லவா?

கானவர்கள் விழியெறிந்து வானவரை யழைப்பார் குற்றால மலையில். இங்குக் காட்டு மறவர்களும் காதல் மணம் செய்வதுண்டாம்.

இங்குத் தலைவன் குப்பன். தலைவி வஞ்சி. சுரக்கின்ற காதலொடு சென்றான் வஞ்சியை வாரி அணைக்க. காதல் சுரக்குமா? கன்று நெருங்கத்தான் பசு சுரக்கிறது. எனவே காதல் சுரக்குந்தான் போலும்!

மூலிகைக்கு மலையிடம் போனால் பாழ்விலங்கால் அந்தோ படுமோசம் நேரும் என்றான். அகநானூற்றுப் பாலைநிலங்களைப் படித்தால் விலங்குகளின் மோசம் விளங்கும்.

மூலிகையில் ஒன்று உலகினர் பேசுவதையும் மற்றது உலகில் நிகழ்வதையும் தெரிவிக்கும். இவையெல்லாம் கற்பனை தாமே. இத்தகு கற்பனையாற்றான் காவியம் சுவைக்கிறது. இக்கற்பனை அளவுகடந்து இன்று பொய்யாய்விட்டதெனப் படுகிறது. புராணங்களில் வாழ்க்கையும் உள்ளமும் அடியில் இருப்பன; கற்பனை ஒரு பங்கு. இப்போது இக் காவியக் கற்பனைகளை விட்டுக் கவிஞர் சொல்லும் கருத்துக்களைமட்டும் கொள்ளுதல்போல, காவியமெதிலும் கற்பனைகளைப் புரிந்து விட்டுவிட்டால் குறையே இல்லை.

'பெண்ணடிமை தீருமட்டும் பேசும் திருநாட்டு மண்ணடிமை தீர்ந்து வருதல் முயற்கொம்பே' என்கிறாள் வஞ்சி. இன்று மண்ணடிமை தீர்ந்தது; பெண்ணடிமை இன்னும் முழுதும் தீரவேண்டும். இது இந்திய விடுதலைக்கு முன் பாடியது. சமூகப் புரட்சிக்குப் பின்பே உரிமைக்குப் புரட்சி என்பது கவிஞர் கட்சியின் கொள்கை. ஆனால் மண்ணடி

மைக்குப் பின்பே பெண்ணடிமை போம் என்ற கட்சியே இன்று வென்றதாகக் காண்கிறோம்!

முன்னே இலை கொடுத்தால் முத்தம் எத்தனை ஈவாய் என்றான். நோகாமல் முத்தங்கள் நூறென்றாள். ஆசையால் ஓர் முத்தம் அச்சாரம் போடென்றான். இந்த முத்தம் இவர் காவியத்தில் மெத்த வழங்குகிறது. காதலர் காட்சியிலெல்லாம் முத்தம்படா நேரமேயில்லை. இவர் காதல் காட்சிக்கெல்லாம் இது ஒரு குஞ்சமாக அணி செய்கிறது. அடிக்கடிக் காதலர் 'இச்' என்று முத்துதிர்ப்பார். இவர் பிரஞ்சுத் தமிழர். பிரெஞ்சு நாட்டில், ஆங்கிலப் படங்களில் அனைவரும் பார்க்க முத்திடுதலுண்டு. ஆனால் தமிழ் அகவொழுக்கத்திற்கு அது சிறிது புறம் எனக் கண்டனர். சங்கக் காட்சியில் தொடுவான் வருடுவான் நெருடுவான் தலைவன், ஆனால் முத்திடல் வெளிப்படையில்லை. வளையுடைக் கையள் எம் அணங்கியோளே என்பதால் தலைவன் 'தழுவியுள்ளான்' என்ற குறிப்பை உணர்கிறார் பண்டைப் புலவர். ஆனால் அரிதாக ஓரிரிடமுள்ளன. கலித்தொகைக் குறிஞ்சியில் (54) ஓர் காட்சி,

**'நருஅவவிழ்ந் தன்ன வென்மெல் விரற்போது கொண்டு**
**செருஅச் செங்கண் புதைய வைத்து**
**பருஅக் குருகின் உயிர்த்தலும் உயிர்த்தனன்**
**தொய்யில் இளமுலை இனிய தைவந்து**
**தொய்யலந் தடக்கையின் வீழ் பிடியளிக்கும்**
**மையல் யானையின் மருட்டலும் மருட்டினன்'**

இது தலைவி கூறுவது.

**'புல்லினி தாகலிற் புல்லினேன்**
**சொல்லலோம் பென்றமை யன்றி அவனைநீ**
**புல்லலோம் பென்ற துடையரோ'**

இவ்விரு காட்சியிலும் காதலர் தழுவலை நேரில் காண்பிக்காமல் தழுவலைப்பற்றியே பேசுகின்றனர். நேரில் முத்திடும்

தமிழ்ப்படங்கள் இன்னும் வரவுமில்லை; நாம் அதனை ஒத்துக் கொள்ளவுமில்லை.

காதலியர்

**‘கண்ணில் கடைப் பார்வை காட்டிவிட்டால்**
**மண்ணில் குமரருக்கு மாமலையும் ஓர்கடுகாம்.**
**காதற் பெண்கள் கடைக்கண் பணியிஞல்**
**காற்றி லேறியவ் விண்ணையும் சாடுவோம்.**

என்பார் பாரதி. ‘பேதம் கொண்டோர்க்குப் பிரஞ்சில் இடமில்லை’ என்கிருன் பிரஞ்சுக்காரன் இத்தாலியனிடம். பிரஞ்சுப் புரட்சி பாரறிந்தது. அரசர் செல்வர் என்ற பேரையே அறவொழித்தது அப்புரட்சி. வால்டேர், ரூசோ நூல்களைப் படிக்கவேண்டும். அன்றே அமெரிக்கன் கவிஞரிடம் நல்ல பேர் எடுத்துள்ளான். ‘நல்லவனும் நானிருக்க நாளும் விளம்பிடுவேன்’ என்றதாம் அவன் பேச்சு. அடிமை நாடுகட்குத் துணையாகி இவன் மேன்மையடைக என மனமார வாழ்த்துகிருர்.

ஆங்கிலேயன் இந்தியரிடம் காணும் ‘சாக்குருவி வேதாந்தம்’ சிறந்த கற்பனை, புராணம், புரோகிதர், பூசுரர், சிந்தனை, நம்பிக்கை, பகுத்தறிவு இவை இன்மை; கல் கடவுள், நிலையாமை, சாதி சமயப் பிரிவு இவையே இந்தியரைக் கொத்தடிமையில் கூட்டியவையாம். இராமாயண காலக்ஷேபம் உணர்ச்சி தூண்ட உரைக்கப்படுகிறது. இவ்விடத்தில் கவி பேசவில்லை. நாடகமே கண்முன் நிற்கிறது. இவர்கள் இருப்பது சஞ்சீவிச் சாரல். காலக்ஷேபத்தில் அனுமான் சஞ்சீவியைத் தூக்கும் கட்டம். அதில் அனுமார் மலையைத் தூக்குகிருர் எனப் பாகவதர் கூறுகையில் குப்பன் கலங்குகிருன். கீழே வைக்கிருர் என்ருல் மகிழ்கிருன். கடைசியில் அத்தனையும் கதையென்றறிந்து நகைக்கிருன். அத்தனை சுவைப்பட வருணிக்கப்படுகிறது.

*கதையில் மலை தூக்கப்பட்டுக் கீழே வைக்கப்பட்டதில் அதிர்ச்சியில்லை அசைவில்லை. அது கண்ணாடிப் பாத்திரத்தைக் கல்லின்மேல் வைத்ததுபோ லிருந்ததாம். — உவமை புதிது.*

*சொன்ன 'ஐயையோ தொடங்கி இதுவரை' ஏமாந்தார் காசுக்கெசமானனை பாகவதன் சொன்னான் பல பேரைக் கூட்டியே' எனக் கவிஞர் சொல்கையில் நகைச் சுவைதான் மேலோங்கி நிற்கிறது.*

**'ராமா யணமென்ற நலிவு தருங்கதை**
**பூமியி லிருப்பதைஇப் போதே அறிகின்றேன்**
**நம்பத் தகாத வெலாம் நம்பவைக்கும்'**

*சரித்திரக்காரரால் நாடு நலிகுவதை நான் இன்று கண்டுணர்ந்தேன்'— இது கவிஞர் கோட்பாடு.*

*இராவணன் இணையற்ற வீரத் தமிழன்; விபீஷணன் ஒரு வஞ்சகன். காட்டிக்கொடுத்தான்; கம்பன் ஆரிய நாகரிகத்திற்கு ராமகதை பாடி ஆதரவளித்தவன் என்பது இவர் கொள்கை. கம்பனைப்பற்றி இவர் கருத்தை முன்பும் கண்டோம். இராவணன் என்றதொரு உரை நூலே எழுதியுள்ளார். இலக்கியத்தையும் வரலாற்றையுங் கொண்டு எண்ணினாலும் இக்கொள்கைகட்கு உறுதி கிடைக்கவில்லை. கா. சு. பிள்ளை தம் இலக்கிய வரலாற்றில் இராவணன் நாகர் இனத்தான் ஆகலாம் என்பது நம்பற்குரித்தாகிறது.*

*அரக்கர், வானரர் என்போரெல்லாம் நாகரிகமின்றி மலையிலும் காட்டு மரங்களிலும் வசித்தோர். இன்றும் இந்திய, ஆப்பிரிக்க, ஆஸ்டிரேலிய, அமெரிக்கப் பழங்குடிகளை, மலைவாசிகளை இதற்கடையாளமாகப் பார்க்கிறோம். இவரெல்லாம் ஓரினம். அங்கங்கிருக்கும் மற்ற இனத்துடன் இவர் ஒன்றுகார்; மொழியுடன் (பிரசேதத்தில் இருப்பதால்)*

ஓரளவு உறவுடையரா யிருப்பர். இராமன் மத்திய இந்தியா, பம்பாய்ப் பிரதேசங்களில் இருந்த போதே இவர்களைக் கண்டிருக்கிறான். வான்மீகிப்படி தண்டகாரண்யத்தைத் தாண்டிய பின்னரே கோதாவரி வருகிறது. பஞ்சவடி கோதாவரிப் பகுதியே. இங்குத்தான் சூர்ப்பனகை இருந்துள்ளாள். கிஷ்கிந்தை மேற்கிந்திய பம்பாய்ப் பகுதி. சுக்ரீவன் தெற்கே தனியே தமிழகம் (கேரள, சோழ பாண்டியர்) இருப்பதைக் கூறிப் படையை அனுப்புகிறான்.

எனவே, வடவேங்கடந் தாண்டி நிலைத்து வாழாத, அரக்கரும் வானரரும் தமிழர் அல்லர்; அவர் நாகரே. அன்று இலங்கையில் சூர்ப்பனகை அண்ணன் இருந்தான். சிங்களத்தில் நக்க சாரணர் 'நாகர் வாழ்ந்தமை மணிமேகலையால் தெரிகிறது. அவர்கள் மொழி வேறு. அதனைச் சாதுவன் என்ற தமிழ் வணிகன் அறிந்திருந்ததால்-அவர்களிடம் அகப்பட்டபோது - தப்பித்தான். பெண்டிரும் கள்ளும் பேரின்பம் என்பவர் அவர். எண்கும் பிணையும் (கரடி) இருப்பது போன்ற தோற்றமுடையவர். இவர்களின் முன்னோனே இராவணன் ஆகவேண்டும். அசோக வனத்தில் சீதை நிலையைக் கூறும் கம்பன் அரக்கரை அப்பட்டமாக வருணிக்கிறான். அத்தகைய கொடிய கோர உருவங்கள் வரலாற்றில் என்றும் தமிழர்க் கிருந்ததில்லை.

நீலகிரித் தொதவரைத் தமிழர் என்பதில்லை. அவரிடம் ஒரு பெண் பல ஆடவரை மணப்பது (கால்டுவெல் கூற்று) தமிழ்ப் பண்பென ஒப்பமாட்டோம். உலக முழுவதுமுள்ள இவர் எல்லாம் ஒரு தனி இனம்.

பிறன்மனை நயத்தல் என்பது என்றும் தமிழனிடம் இருந்ததில்லை. வள்ளுவர் வெறுக்கும் முதல் தீமை அது. 'தமிழச்சியின் கத்தி' பிறன்மனை நயந்தவனைக் குத்திக் கொல்லுகிறது. எனவே பிறன்மனை நயந்த இராவணனைத் தமிழன் என்பது எவ்வகையிலும் தக்கதன்று.

அரசியலில் அண்ணன் தம்பியேனும் எதிரியாவது இன்றும் என்றும் இயல்பு; அறமல்லாததைச் செய்தவனைக் கொல்லத் திட்டமிடுதல் தம்பிக்கேனும் தக்கதுதானே. மகனை முறைசெய்த சோழனை மாண்புடையவன் என்று தானே மொழிகிறோம். பாண்டியன் பரிசிலில், தன் அண்ணனே தன் கணவன் நாட்டைக் கொள்ள வருகிறான். அண்ணனைத் தங்கை அங்குக் கொல்ல வாளுடன் விரைகிறாள், இறுதியில் அவள் மகளால் அவன் கொல்லப்படுகிறான். அது கொடுமையாகுமா அறத்தின்படி! அரக்கர்க்குப் பொது அரசை இராவணன் ஒழுக்கக்கேட்டால் ஒழிக்கப் போகிறான். அவனை அழித்து வீடணன் அரசைக் காத்தான் எனில் அறமல்லதாகுமா அது!

காலநிலையைக் கவிஞன் கடக்க முடியாது. திறனாயும் ஹட்சன் இதனைத் தெளிவுபடுத்துகிறான். கம்பன் காலம் பெரியாழ்வார் குலசேகராழ்வாருக்குப் பிற்பட்டது. அவர்கள் இராமனைத் தெய்வமாகப் பாடியவர்கள். நாடு முழுவதும் இராம பக்தி பரவிய காலம். இதனைப் பயன்படுத்திக் கொண்டு தன் உள்ளத்தையெல்லாம், தமிழையெல்லாம் அள்ளித் தந்தான் ஆயிரமாயிரம் பாட்டில் கம்பன். வால்மீகியோடு ஒப்பிட்டால் ஒரு நூறு இடங்களில் கம்பன் கதையைத் திருத்தியிருக்கிறான் (இது பற்றிக் கம்பன் கவித்திறம் எழுதவிருக்கிறேன்). ஆரிய நெஞ்சத்தையும் பண்பையும் அங்கு அடித்து அழித்துத் திருத்தியே இருக்கிறான். வந்தது வெள்ளம், அது நாட்டை அழிக்காமல் அணையிட்டு அளவாகப் பாய்ச்சிப் பயன் படுத்தினான். அதனால் பண்படுத்தினானன்றி பாழ்படுத்த வில்லை. இது கருத்து வேற்றுமை முற்றிலும் உள்ள இடம். வருங்காலம் ஆய்ந்து ஒப்புக்கொள்ளட்டும்.

**புரட்சிக் கவி :**

இக்காவியத்தின் பெயரும் கருத்துமே கவிஞர்க்குப் 'புரட்சிக் கவி' என்ற பேரைப் பரப்பியிருக்கவேண்டும்.

பில்கணீயத்தைத் தழுவிய கதை இது. கவிஞர்க்குப் புதுப் படைப்பைவிட முன்புள்ள கதைகளையே காவியமாக நாடகமாக ஆக்குதல் எளிதாகவோ இஷ்டமாகவோ இருந்திருக்கிறது. கதை முன்பே மக்கட்குப் புரிந்திருந்தால், தான் கூறும் புதுக் கருத்தைப் புரிவித்தலும் பதிவித்தலும் கருத்தில் முழுக்கவனம் செலுத்துமாறு செய்தலும் எளிது. இன்றேல் புதிய கதையிலேயே கருத்தைப் பதித்துக் கவிஞன் அதன்வழி பதிக்கும் கோட்பாடுகளில் கவலையற்றுப் போகலாமோ! இந்நோக்குடனேயே கம்பன் இராமாயணத்தைத் தழுவினன். ஷேக்ஸ்பியரும் முன்பு பரவியிருந்த வரலாறு, கதைகளையே தன் நாடகங்கட்கு அடியாக்கிக்கொண்டார். லத்தீன் கிரேக்கப் புலவர்களைப் பற்றியும் இவ்வாறு எண்ணுகின்றனர்.

காவியப் பண்பும் உறுப்பினரும் தமிழே உருவானவர். அரசன், மகள் அமுதவல்லிக்கு 'யாப்பருங்கலம்' கற்பிக்கப் புலவரைத் தேடுகிறன். இக்காலத்தே பிறர் செய்த பாடல்களில் பிறரமைத்த பண்களுடன் பாடக் கற்றுக்கொடுக்கப் பாடகரைத் தேடுகிறர் பெருஞ்செல்வர். ஆனல் இவ்வரசன் புதுவது புனையவே புலவரைக் கற்பிக்கச் செய்கிறன்.

இலக்கண இலக்கியம், பிறமொழி, ஒழுக்கநூல், நீதிநூல் இவையே ஆணும் பெண்ணும் இளமையில் கற்றறிய வேண்டிய இன்றியமையாதனவாகக் காட்டுகிறர் கவிஞர்.

ஆசிரியப் புலவன் பெயர் உதாரன். அவர் இளைஞர் ஆதலாலே பெண்ணும் இளசு ஆதலாலே குறைவந்து சேரக்கூடுமென இருவர்க்குமிடையே திரையிட்டுக் கற்க விடுகின்றனர். இருவர் அவாவையும் அழிக்க, ஆசிரியன் குருடென்றும், மாணவி பெருநோயாளி யென்றும் பேர்ப்படுத்தி விடுகின்றனர். அவரவர்க்குரிய அடைமொழிகள் இங்குத்தேர்ந்தன. ஞானமுறும் உதாரன்: அறிவுமட்டும்

போதாது; அறிவின் ஆழத்தே அனுபவத்தால் தெளிந்த 'ஞானம்' வேண்டுமாம். பேச்சுவல்ல அமைச்சர்: வள்ளுவர் கூட அவையறிந்து சொல்லுந் திறனை அமைச்சர்க்கே ஆக்கினர். இன்று வெறும்பேச்சு வல்ல அமைச்சர் பெருகுகின்றனர்.

பூஞ்சோலை நடுவே பொன்மேடையில் பாவிலக்கணம் பயிலுகிருள் பருவமங்கை. யாப்பு, அணி, யாப்புக்குரிய அனுபவம் அறிவித்து ஆசு, மதுர, சித்திர, வித்தாரகவி நான்கும் செப்பும் வகை சொல்கிருன் ஆசிரியன்.

ஒருநாள் மேடையருகே சோலையில் நின்று மங்கை அழகை நெஞ்சால் முகந்து மகிழ்கிருன். அங்கே அவனுக்குத் தோன்றும் கற்பனைகள் கவின் மிக்கன. இயற்கைச் சூழலை அழகைக் காண்பதே கவியுணர்ச்சி தூண்டும் ஊற்ருகின்றது. காலை வந்த செம்பரிதி கடலில் மூழ்கிக் கனல்மாறிக் குளிரடைந்த ஒளிப்பிழம்போ என்கிருன் கன்னியுருவை. நாளும் கதிரவன் கடலில் மூழ்கித்தான் தோன்றுகிருன். ஆனல் குளிர்ந்து வரவில்லை. ஆனல் கவிஞன் கற்பனை கதிரவனைக் குளிரச் செய்து விடுகிறது. கலித்தொகையில் 'நீருட் குவளை வெந்தற்று திங்களுள் தீத்தூரீ இயற்று' என்ற கற்பனைகள் வருகின்றன. அங்குத் திங்களில் தீ உண்டாகிறது.

உள்ள உணர்ச்சிகளைப் பண்படுத்துவது கலை, கவி. வெளியே நிகழ்வதற்கும் உள்ளத்தே அது தாக்குவதற்கும் ஒரே தொடர்பிருப்பதில்லை. காதலர் தழுவும் காட்சி குமரனுக்குக் களிப்பையும் கிழத் துறவிக்கு வெறுப்பையும் தரலாம். காதலாயிற்றே களிப்பைத்தானே எவர்க்கும் தர வேண்டுமென்பதில்லை. எனவே உணர்ச்சி உள்ளத்திற்கே சொந்தமானது. அவ்வுணர்ச்சியே மனிதனை மாற்றுகிறது, பண்படுத்துகிறது. அச்சத்தால் கோபத்தால் கவலையினல்

நாடியெலாம் நரம்பெல்லாம் அவிந்து போகும் வெந்து போகும் என்கிறார் பாரதி. அச்சம் கவலை முதலியவே கலையுணர்ச்சி என்பன. அவ்வுணர்ச்சி வெளி நிகழ்ச்சிக்கு வேறாகவும் மனதில் உண்டாகுமானால் அதனால் நன்மை காணுமிடத்துக் கலைஞன் அவ்வாறு படைக்கிறான் உள்ளத்தைப் பண்படுத்த. முன்பு 'காதல்' இருவரிடம் ஏற்படுத்திய உணர்ச்சியில் கிழவரிடம் வேறான உணர்ச்சியையும் கண்டோம். எனவே இங்குக் காயும் கதிர்வெப்பம் காதலர்க்கு விருப்பமில்லை; அவனால் இங்கு நலனுமில்லை. எனவே அதன் வெம்மையைக் குளிரச் செய்கிறான் கவிஞன். இதுவே கலையின் உள்திறம் (இரகசியம்).

இரண்டையும் கவி ஏன் இணைத்தான்? மதிகாதலரை உடலில் குளிர்வித்து உள்ளத்தைச் சுடுவது. பரிதி உடலைச் சுட்டு உள்ளத்தைத் தொடுவதில்லை. இங்குக் காதலனுக்குக் காட்சி 'எரிவில்லை குளிர்கின்றேன் புறமும் உள்ளும்' என்னும்படி உள்ளது. எனவே புறத்தே சுடும் பரிதையைக் குளிர்விக்க வேண்டியதாயிற்று; அகத்தே அஃது இயல்பாய் குளிர்ச்சி தரலால்.

இத்தகைய தற்குறிப்பேற்ற அணிகள் கவிஞர்க்குப் பெருமதிப்பளிப்பன. கண்ணன் பாரதிக்குக் காதலன் காதலி ஆனதுபோலத் தமிழே கவிஞர்க்குக் காதலி காதலன் ஆயிற்று. சீரழகே தீந்தமிழே என்கிறார் இங்குக் காதலியை.

**' முல்லையினைக் கத்தரித்தல் இன்றிக்**
**கரந்தழுவும் மாமரம்**
**உணர்வுதனை உண்டாக்கவில்லையோ உன்பால் '**

என்கிறாள் காதலி. முல்லையும் மாமரமும் தழுவின கற்பனை நன்று. தமிழ்க்காதல் கடிமணத்தில் முடியவேண்டும். 'கல்யாணம்' வேண்டாம். கட்டித் தழுவி முத்திடும் இடைக்

காலக் காதல் மேனாட்டுக் காதல் வேண்டாம் என்பதுபோல கற்புக்குரிய முல்லை தழுவுகிறது மா—மரத்தை. மா—என் பது உயர்வு. தலைவன் ஒப்புயர்வற்ற தலைமையுடையன் ஆக வேண்டும் தமிழ் மணத்தில்.

இருவருடைய உரையாடலில் எளியநடைச் செய்யுள் இனிக்கிறது.

**'ரத்தவெறி கொண்டலையும் ராசன்மனம் ஏனிரங்கும்**
**அத்தருணம் அந்த அமுதவல்லி ஏதுசொல்வாள்'**

நல்லதங்காள் கதை, கூளப்ப நாயக்கன் காதல் நடை! இத்தகைய எளிய நடையே எளிய தமிழ்மக்களை எண் ணற்ற காலமாகக் கவர்ந்து வந்துள்ளது.

கொஞ்ச வரும் கோதையரைப் பிணமாக்கித் தாம் பிழைக்க நினைவரோ நல்லார், நாட்டின் இளவரசி நான், என்னைக் கொல்ல அவற்குச் சட்டமில்லை, எனவே இருவர் காதலும் இடையூறின்றி வளரலாம் என்கிறாள் மாணவி. கல்லூரிகளிலும் உயர்பள்ளிகளிலும் ஆசிரிய—மாணவி. மணங்கள் அநேகம் நிகழ்கின்றன. அதன் இயல்பும், காரணமும் இங்குப் புலனாகின்றன. காதலின்பக் கடலில் குளித்தாராம் இருவரும்.

அரசன் அதட்டுகிறான், வாள்பிடித்தாலும் அரசெல்லாம் என் தாள்பிடித்தே கிடக்கும்

**'ஆள் பிடித்தால் பிடிஒன்றிருப் பாய்என்ன**
**ஆணவமோ உனக்கு?'**

நாட்டில் வழங்கும் சொல் நடைமட்டுமல்ல, பேசும் 'தொடர்களை' அப்படியே எடுத்து அமைத்தால் கவி நன்றாக இனிக்கும். 'ஆள் பிடித்தால்' என்ற தொடர் அப்படியே.

**அரசனின் புதல்வி அவள்—எனில்**
**அயலவ னிடம்மனம் அடைத லுண்டோ.**

*இன்றும் இந்நிலை மாறவில்லை. ஆங்கில இளவரசி 'மார்கரெட்டை கேப்டன் டவுன்சன்டு மணப்பதை இப்படித்தானே தடுத்துவிட்டனர்! யான் விரும்பினேன் எனவே அவன்மேற் பிழையில்லை. எனை வருத்த உனக்கதிகாரமில்லை; ஊர் மக்களிடம் அதை உணர்த்தல் கடன். குடியரசு தழைத்தோங்குகிறது குமரிப் பேச்சில்!*

*'நாயை இழுத்துப் புறம் விடுப்பீர்' என்று தொடர்வதனைப் பாஞ்சாலி சபதத்தில் பாண்டவர் வஞ்சினம் பேசுமிடத்துடன் ஒப்பிட்டின்புறவேண்டும்.*

**இருவருமே சாதல் வேண்டும் தவிர்வதெனில்**
**இருவருமே தவிர்தல் வேண்டும்**

*என்கிறார்.*

*அவையினிலே அசைவில்லை பேச்சுமில்லை-அச்சடித்த பதுமையைப்போல் இருந்தார் யாரும்' பாஞ்சாலி அவையில் புலம்பும் கூட்டத்தை நினைவுகொண் டெழுதப்பட்டிருக்கலாம் இப்பகுதி.*

*யான் தமிழறிந்தவன், அவள் தமிழறிய வந்தவள். எனவே இணைந்தது தமிழ்; ஏற்றத்தாழ்வுள்ள வருணங்களல்ல. தமிழ் என் ஆவி. அஃதழிந்தால் தமிழ் அழிந்தது. தாய்மொழிக்குப் பழி வந்தால் சகிப்பதுண்டோ, மாசற்ற உயர்தமிழை உயிர் என்று போற்றுமின்கள். (எனவே இங்கு உங்கள் ஒவ்வொருவர் உயிரும் போகிறது என நினையுங்கள்).*

*கூனி, வாலி, பாஞ்சாலி இவர் பேசும் வழக்குத் திறனை இங்குக் காண்கிறோம். வழக்கில் தமிழ் உயிர் ஆய்விடுகிறது; ஒப்பற்ற கட்டம்*

**'கக்கும்விஷப் பாம்பினுக்கும் பிலத்தி னுக்கும்**
**கடும்பசிக்கும் இடையரு நோய்க ளுக்கும்'**

பலியாகிக் கால்கைகள் உடல்கள் சிந்தும் பச்சைரத்தம் பரிமாறி இந்த நாட்டைச் சலியாத வருவாயும் உடையதாகத் தந்ததெவர்? தொழிலாளர் நலனுக்கு இதனை விடத் தூது பேச யாரால் இயலும்? எவரின் மூச்சு, புதுக்கியவர் யார், எவரின் தோள் என்ற கற்பனை பாரதியைப் பின்பற்றியது. 'முன்னை இலங்கை அரக்கர் அழிய முடித்தவில் யாருடை வில்' என்ற வரிசையை இணைத்து நோக்குக.

**பொதுமக்கட்குப் புல்லளவு மதிப்பேனும் தருகின்றாே**
**ஒருமனிதன் தேவைக்கே இந்தத் தேசம்**
**உண்டென்றால் இத்தேசம் ஒழிதல் நன்றாம்.**

பலர்க்குமேல் பதவி; பொறுப்பில் இருப்போர்க்கெல்லாம் இது பொருந்தும்.

ஆசிரியனைக் கொல்ல ஆணையிட்டான் அரசன். ஞானத் தலைவன் தலை வணங்குகிறான். இதுகண்ட தேச மக்கள்

**கொடிதென்றார் கொடுவாளைப் பறித்தார் அந்தக்**
**கொலையாளர் உயிர்தப்பி ஓட லானார்**

புலவன் கற்பனையில். அமெரிக்காவில் ஆசிரிய விஞ் ஞானிகள் அநேகர் அணுவுண்மையைத் தெரிவித்துவிட்டா ரென-அடாத்தனமாய்த் தூக்கிலிடப்பட்டனர், அண்மை யிற்றான். இத்தகு காவியங்கள் இதனால் இன்னும் எத்தனையோ நூற்றாண்டுகட்குத் தேவைப்படலாம்.

புவியாட்சி அரசற்கில்லை யென்றனர். அச்செய்தி போகாமுன்பே அவன் செவியில் ஏறிற்றுப்போனான் வேந்தன் என்கிறார். இந்திய சுதேசமன்னரெல்லாம் எங்கே? கவிக் கனவு இன்று நனவாகும் காலம்.

**'செல்வமெலாம் உரிமையெலாம் நாட்டுக்கே'**

*என்பதற்குச் சட்டம் செய்தானும். சென்னை விவசாயச் சட்டம் செல்வத்தை நாட்டார்க்காக்குகிறது, பாரதி, தாசன் இருவரின் இலக்கியப் புரட்சி இன்று பயன் காண்கிறது.*

## வீரத்தாய்:

*ஒரு மகன் அல்லது இல்லோள் செருமுகம் நோக்கிச் செல்கென விட்டாள், அவள் புறநானூறு காட்டும் வீரத் தமிழ்த்தாய்-தமிழ்ப்பெண்கள் வீராங்கனைகளாகவும் வீரப் புதல்வரைப் புரந்ததாயும் நினைவூட்டுவது தலைப்பு.*

*ஜீவகன் தாய் அனுதையாய் இடுகாட்டில் மயிற் பொறியில் இறங்குகிருள்; தவக்கோலம் பூண்டு மறைந்து வசிக்கிருள்; மகன் முனிவர் ஒருவரிடம் மாமன்னர்க்காம் கலை பயில்கிருன்; அவனே பின்னர் ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்றைப் பெறும் சிந்தாமணியாகிருன்.*

*கரிகாலன் பிறப்பில் அனுதை. அவனை மாமனுன இரும்பிடர்த்தலை 'ஏந்தலாக' மாற்றினுன். இங்குத்தாயே மகனை வீரனுக்குகிருள்; அல்லி பிறந்த நாட்டாள் அவள்.*

*அடிமை மகளிர் நிலையை அப்பட்டமாக வரைகிருர்:*

**'ஆடை அணிகலன் ஆசைக்கு வாசமலர்**
**தேடுவதும் ஆடவர்க்குச் சேவித் திருப்பதுவும்**
**அஞ்சுவதும் நாணுவதும் ஆமையைப்போல் வாழுவதும்**
**கெஞ்சுவது மாகக் கிடக்கும் மகளிர்குலம்.'**

**'மானுஷிகம் மேல்என்பார் வன்மை உடையதென்பார்'**

*என்பது அமைச்சர் அறிவிப்பது. அரிதரிது மானிடராதலரிது. எனவேதான் செயற்கு 'அரிது' செய்வோரையே 'மனிதன்' என்கின்றனர்.*

மணிபுரி, மன்னன் இல்லாமல் பாழாய்க் கிடக்கும் நிலையை மந்திரி வருணிக்கிருன்-புறநானூற்றை மனதிற் கொண்டு பொறிக்கப்பட்டது.

'மக்கள்பால் மகிழ்ச்சி யில்லை;
அரிவையர் அணிகலன் பூண்டிலர்
பாடகர் பாடிலர்;
ஆடகர் முகங்கள் அழகு குன்றின.
முரசு எங்கும் முழங்குதல் இல்லை.'

போர்க்குப் பின் பாழ்பட்ட நாட்டு நிலை இவ்வாறு புறநானூற்றில் பேசப்படும்.

கோவூர்க்கிழார் புறம் 44-ல் 'களிறு பிடித் தொழுதியுடன் பெருங்கயம் படியா, பாலில் குழவி அலறவும், மகளிர் பூவில் வறுந்தலை முடிப்பவும், நீரில் வினைபுனை நல்லில் இனைகூவுக் கேட்பவும்' எனப் புலம்புதலை ஒப்பிடவும்.

தாய், கிழவனை அரசாங்கத்தில் வேலையில் அமர்கிருள்.

' அறிவுபெற்ற படியாலே எல்லாம் பெற்றீர்
தக்கநல் லறிஞரின்றித் தரணியும் நடவாதன்ரே'

என இரண்டிடங்களில் இவள் அறிவு ஏத்தப்படுகிறது.

உண்மையான ஆசிரியன், தமிழ் ஆசிரியன் யார்? குறளுக்குப் பொருள் கூறி சேனவரையத்தை விளக்குபவன் மட்டும் அல்லன்.

'என்நாட்டை நான் ஆள ஏற்ற கலையுதவும்
தென்னட்டுத் தீரர் செழுந்தமிழர் ஆசிரியர்.'

பெண்கட்கு வீரம் எப்படி உண்டாகும் எனக் கேள்வி, பதில் புதிதாகப் புதுமை பயப்பதாக வருகிறது. பெண்களை மட்டும் பெற்றெடுத்தால் அவர்க்கு வீரமிராது என எதிர் கொள்கைக்கு இடங்கொடுத்துவிடலாம். ஆனல் ஆண்மை

யுள்ளதாகக் கூறி இறுமாக்கும் ஆடவரைப் பெற்றெடுத்த தாய்க்குலமாயிற்றே அது வீரமற்றதெனில் பிறந்த ஆண் குலமுமன்றோ பீடழியும் எனக் குறிப்பிடுகிறார். முருங்கை மரத்தில் கிளைமட்டும் தேக்காகுமா? கடைசியில் புரட்சிக் கவியில் போலவே குடியரசோங்குகிறது. வீர மகன் அரசியல் பிரகடனம் அறைகின்றான்.

சுதந்திரர்கள் எல்லோரும் மணிபுரியை 'ஓதும் குடியரசுக் குட்படுத்த வேண்டுகிறேன் எல்லார்க்கும் தேசம் எல்லார்க்கும் உடைமையெல்லாம்.' 'எல்லோரும் இந்நாட்டு மன்னர். ஆம், 'எல்லோரும் இந்நாட்டு மன்னர்' என இருமுறை நெஞ்சத்திறுத்திக் கூவினான் பாரதி.

## எதிர்பாராத முத்தம்:

சிலப்பதிகாரக் கதைச் சார்புடையது காவியம். மாநாய்கன் மாசாத்துவன் குடிகள்: வடநாட்டு யாத்திரை; பகைமை, தமிழ் வெற்றியெல்லாம் கதை யடிப்படை. பூங்கோதை பூங்குளத்திற்குச் செல்கிறாள். பொன்முடி காண்கிறான் எனில் காதலித்தான்! இருவரும் மணக்கும் உறவினர். பெண்ணின் தந்தையிடம் பையன் அடிபடுகிறான். பண்டாரம் 'பாங்கனைகத்' தலைவன் களவுப் புணர்ச்சியிற் கூடுகிறான். பொன்முடி தகப்பன் முத்து வாணிகன். வடநாட்டில் வாணிகத்திற்குப் பையனை அனுப்புகிறான். பிரிவாற்றாத பேதை பின்தொடர்கிறாள். வாணிகச்சாத்துக்கும் வடமுனிவர்க்கும் உட்பகை. சாத்து திரும்புகையில் பொன்முடி எதிரே தேடிவந்த பூங்கோதையைக் கண்டு குலாவுகிறான். பின்னிருந்து குத்தப்படுகிறார்கள் காதலர்.

தென்னாட்டுச் சைவசன்னிதானங்களிடம் சாத்தர் முறையீடு; சைவத்தை வடக்கே பரப்பி அவரை வழிப்படுத்தத் திட்டம் குமரகுருபரர் வாழ்க்கை, அவர் வடக்கு யாத்திரை;

செங்குட்டுவன் சென்றது அரசியல் யாத்திரை. இங்குச் சமயத் தமிழ் யாத்திரை. செங்குட்டுவன் வெற்றி மறைந்தது. ஆனல் இந்த பண்பாட்டுத் தூது இன்னும் காசியில் பிறங்கி நிற்கிறது.

நீராடும் காட்சியை வெளிப்படையாய்க் காட்டுவது பரிபாடல் முதலாம் பிற்கால இலக்கியங்கள். சங்க இலக்கியங்களில் அதுபற்றிய குறிப்பீடே இருக்கும். இங்குப் பூங்கோதை நீராடல், வெள்ள மேலெலாம் முகங்கள். கச்சித முகங்களென்னும் கறையிலா நிலாக்கூட்டத்தை அச்சமயம் கிழக்குச் சூரியன் கண்டு நாணி

**'உச்சி ஏருது நின்றே ஒளிகின்ருன் நொச்சிக்குப் பின்'**

சூரிய சந்திர தோற்ற மறைவுக்கு இலக்கியங்களில் எண்ணற்ற கற்பனைகள். இக்கற்பனையும் எழில் மிக்கதே. இயற்கைச் சந்திரன் மாசுள்ளதால் கதிரவன் அதற்கு நாணுதலில்லை. பெண்முகச் சந்திரன் மாசற்றது எனவே தனக்கு ஒப்பாய்விட்டதால் நாணுகின்ருன். இப்போது மதியின் குளிர்ச்சிக்கு மேன்மையும் வந்துவிட்டது.

கம்பர் பாலகாண்டத்தில் பூக்கொய் படலம், நீர் விளையாட்டுப் படலம், பரிபாடல் இவற்றுடன் இப்பகுதியை இணைத்துப் படிக்கவேண்டும்.

ஈர உடையுடன் இளநங்கையர் திரும்புகிருர். அவர் பொன்மணி இழைகள் வெய்யிலை எதிர்க்க இருவர் மூவராகக் கைவீசி மீளலுற்ருராம். முன்பே சூரியற்கும் இவர்க்கும் பகை வந்தது. இப்போது இழைகள் வெய்யிலை எதிர்க்கின்றனவாம்.

அன்னேன் வெடுக்கென்று தான் அணைத்தான் விடா தீர் என்ருள், கையிரண்டும் மெய்யிறுக இதழ் நிலத்தில்,

கன உதட்டை ஊன்றினுன் விதைத்தான் முத்தம். அகத்தைப் புறத்தே அம்பலப்படுத்துகிறது இவ்வத்தியாயம்.

**'உடலிரண்டின் அணுவனைத்தும் இன்பம் ஏறக்**
**கைச் சரக்கால் காணவொண்ணுப் பெரும் பதத்தில்**
**கடையுகமட் டும்பொருந்திக் கிடப்ப தென்று'**

நிச்சயித்த இன்பம். இவர் காட்டும் தாமரைக் கண்ணன் உலகு இது! கற்பனை வள்ளுவரை ஒத்து நிற்கிறது.

பண்டாரத் தூது நாடகமாகப் படம் பிடிக்கப்படுகிறது காவியத்தில். தென்னம்பாளை பிளந்து சிந்திடும் சிரிப்புக் காரி. இது இவர் கண்ட புது உவகை. எயிறு ஊறிய நீர் பாலும் தேனும் என்கிருர் வள்ளுவர். பல் முத்தெனில் அதில் தேனில்லை. பாளையில் பாலும் தேனும் (கள்-) உண்டே! இவ்வுவமையே எல்லா உவமைகளையும் வென்று விட்டது.

இருளில் வழிதடவிச் செல்கிருன் இளைஞன், ஓடைக்குள் காலால் வழிதடவும் கஷ்டம் போலவாம். புன்னை அடிமரத்தில் போட்டிறுகக் கட்டினர் பொன்முடியை—நீட்டு மிலாரெடுத்து வீசுகிருன் மறைநாய்கன், இவர்கள் களவைக் கண்டதால்.

இது உலகியல்பேனும் பண்டை இலக்கிய வழக்கிற்கும் புறம்பானது. களவு பிடிக்காவிடில் 'வேற்று வரைவு, அல்லது புணர்ந்துடன் போவாரைப் பிரித்து அழைத்துவருதல்' இரண்டே அன்று அகநெறியாகக்கொண்டனர். காதலரை அடிப்பது இலக்கியத்தில் 'பெருந்திணை'. அடித்து இல்லத்தே மாநாய்கன் ஏச, இவன் செயலை வல்லிருளும் கண்டு சிரித்ததுபோல் காலை அரும்பிற்ரும். கற்பனை நயமுடையதே.

பண்டாரம் கடிதத்தைக் கொண்டு தூது நடக்கிறான். சகுந்தலை, மலரில் காதற்கடிதம், மாதவி கோவலர்க்குக் கடிதம் அனுப்பும் கட்டங்களை இங்கு ஒட்டிப் பார்க்க வேண்டும். காதல் கனற்ற உட்கார்ந்திருந்தவன் கடிதத்தைக் கண்டதும் தணலிலே நின்றிருந்தோர் தண்ணீரில் தாவுதல் போல் வாங்கி 'இதயத்தால்' வாசிக்கின்றான். 'நெஞ்சத்தார் காதல்' எனவே வள்ளுவர் நவில்கிறார் எனவே நெஞ்சால் படிக்கிறான். பண்டாரம், முக்காடு போட்டு மார்பில் சிவ லிங்கம் ஊசலாட முகத்தில் தாடி வாய்ப்பினைக் கவனித்தீரா என்கிறார் கவிஞர். இது பூங்கோதையிடம் தூது. பரவை யாரிடம் பரமன் தூது போகுமிடங்கூட இத்தனை இனிதா யிராது போலும்!

பண்டாரம் பையனிடம் கோதை கூறியதைக் கொட்டிக் கொட்டி அளக்கிறான். குண்டானிற் கவிழ்ந்த நீர் போல் கொட்டாதீர் என்கிறான் இளைஞன். உவமை இக்கால வழக்குச்சொல் உடையது; புதிது.

கன்னத்தில் முத்தம் : தாமரை போய்ச் சந்தனத்தில் புதைந்ததுபோல, இவ்வுவமையைப் பாருங்கள். ஏணியாலும் எட்டமுடியாத இனிமையுடையது. பையனின் பெற்றோர் அடிப்பதுபற்றிக் கேட்டு அலறுகிறார்.

'வெள்ளை யுடுத்தி வெளியிலொருவன் சென்றால்
கொள்ளிக்கண் பாய்ச்சும் கொடிய உலகம்'

கண்ணேறு பாய்ந்துவிட்டதாம். நாட்டில் பேசிக்கொள் வதை நேரில் கேட்டதுபோலவே இருக்கிறது கவி.

பிரிவெண்ணி நைவதைச் சங்க இலக்கியம் பேசியது சில பலஅல்ல. எனினும் இதோ இது போன்று எழுதினரா?

**'தாய்வயிற்றி னின்றுவந்த மானின் கன்று**
**தள்ளாடும் விழும்எழும்பின் னிற்கும் சாயும்'**

உவமை பாரதிதாசனுக்கெனத் தனியுகம் படைத்துக் கொண்டது. பிரிவுக்கண்ணீர் கள்ளீயும் பாலேயாம்.

புன்னைமரத்தில் கட்டிவைத் தடித்தான் தந்தை, காதலனை. அப்புன்னை அவளுக்கு உறவாகிவிடுகிறது. நற்றிணையில் தலைவிக்குப் புன்னையுறவு ஒன்று பேசப்படு கிறது. அந்நினைவுகொண்டு இக்கட்டம் அமைந்ததோ! நற்றிணைத் தலைவி, ஒரு புன்னை வைத்து வளர்த்தாள். வளர்ந்ததும் அதனடியில் தலைவனைக் கூடி இயற்கைப் புணர்ச்சி கண்டாள். அவன் பிரிந்ததும், அது அவட்கு நாண முண்டாக்குகிறது. அது அவள் தங்கையாம், இனி மரத் தடியில் கூடினால் அக்காள் காதலைத் தங்கை அறிந்தது போலாகுமாம். இங்குக் காதலனுக் களித்த துன்பம் இருவர்க்கும் உறவை உண்டாக்குகிறது. அதனைத் தழுவி அழுதுகிடந்தாளாம். அவளைப் பெற்றோர் பிரித்தெடுத்தது பெருமரப் பட்டையைப் பிரித்தது போலிருந்ததாம்–'ஒட்டி யுறுவார் உறவு' என்று ஔவையார் இதனையே சொன்னாரா?

வண்டியில் வடநாடு போகிறான் பொன்முடி. அவள் நினைவு அவற்கும் நீங்காப் பிணியாயிற்றேனும் அந்தப் பெருவழிக் கதுதான் வண்டி, என்றார். பிரிவுத்துன்ப மாயினும் அதுவே காதலர்க்கு இரவைக் கடக்க உதவு கிறது. அதுபோல நினைவே இங்குத் தூரத்தையும் கடக்கிறது.

வடநாட்டு முனிவர் தென்னாட்டு வணிகரை யாகத் திற்குப் பொருள் கேட்கிறார். 'போதமார் முனிவரேனும் பொன்னின்றி இந்நிலத்தில் யாதொன்றும் முடிவதில்லை' துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி தானே மற்றையவர் தவம்

மறந்தது! தென்னாட்டுத் தமிழர் சைவர். சீவனை வதைக்கும் இன்னல்சேர் யாகந்தன்னை யாம் ஒப்பமாட்டோம், எனவே அதற்குப் பொன் கொடுத்து ஆக்கந் தாரோம் என்றனர் வணிகர். ஒன்றன் உயிர்செகுத் துண்ணாமை அவிசொரிந் தாயிரம் வேட்டலின் நன்று என்ற பரம்பரை. இந்துமதத் துடன் புத்த ஜைனக் கொல்லாமைக் கோட்பாடு தமிழகத்தே பரவியபின்பே இந்நிலையுற் றிருக்க வேண்டும். வடநாட்டில் புத்தம் வைதிகத்தை வெல்லவில்லை, தமிழகத்தே வென்றது; மணிமேகலையில் காணலாம். எனவேதான் வடநாட்டில் சைவம் மிகவும் பரவவில்லை. பரவினும் கொல்லாமையே சைவமெனும் ஒழுக்கம் அங்கில்லை. சைவமே செல்வாக்கினால் முதலில் கொல்லா மையைத் தன்னதாக்கிக்கொண்டதால் 'கொல்லாமையே சைவம் என வழங்கிற்றாகலாம்.

வைதிகம் பழித்த மாபாவி (தமிழன்) தப்பினனென வடவர் சாத்தரைக் கொல்ல முயல்கின்றனர். மணிமேகலை யில் வைதிகம் பழிக்கப்படுகிறது, வெல்லவும்படுகிறது. புத்தம் பரவி சிறைக்கோட்டமெல்லாம் அறக்கோட்டங்கள் ஆகின்றன.

வடவர்மேல் செங்குட்டுவன் வஞ்சினம் வாடாது தொடர்ந்து இக்காலத்திலும் உயிர்த்துவிடுகிறது. பொன் முடி திரும்புகையில் பூங்கொடியை எதிரிற் கண்டு அதிசயிக் கிறான். இருவரும் ஒட்டி ஆரத்தழுவி முத்தமிடுகின்றனர். எதிர்பாராத முத்தம் அதுவே. அவன் வெட்டுண்டு வீழ் கிறான்; அவளும் செத்தாள்.

**தீந்தமிழர் உயர்வினுக்குச் செத்தான், அன்பன்**
**செத்ததற்குச் செத்தாள் அத் தென்னாட் டன்னம்;**

பாண்டியதேவி போல. இயல்பாகச் சாவுகையில் இவளுக் காக அவன் சாகவில்லை! இது தமிழர் உள்ளம்.

**வினைதான், ஆடவர்க்குயிர், மனையுறை**
**மகளிர்க்கு ஆடவர் உயிர்.**

இது குறுந்தொகை, இங்கு மெய்யாகிறது.

வணிகர் தருமபுரம் சென்று முறையிடுகின்றனர்,

**'அழிவாம் குறிநெறியாரேனும் பழிக்குப்**
**பழிவாங்குதல் சைவ பாங்குக் கிழிவாம்!**

சைவத்தைப் பரப்பி அவர்களைச் செம்மைப்படுத்துவோம் திருத்துவோம் எனச் செப்புகிறார் அடிகள். மறுத் தின்னா செய்யாமையே தமிழர் மாண்பு.

தென்னாட்டுச் சைவமும் வைணவமும் வடநாட்டை அசைத்துள்ளனவெனவே அறைவர் வரலாற்றார். பக்திச் சமயம் (நாயன்மார், ஆழ்வாரது) தென்னாட்டிற்கேயுரியதாம்.

குமரகுருபரர் கதை: ஊமைப்பிள்ளை முருகனருளால் பேசுகிறது; இது கைம்மையால் வாழ்வாள் நல்ல கணவனைப் பெற்றது போலவாம். கைம்பெண்மை இங்குக் கைதூக்கி விடப்படுகிறது உவமையாக.

வடநாட்டுப் பண்பையும் (யாகம்) தென்னாட்டுப் பண்பையும் (கொல்லாமை) வேறுபடுத்த, வடவர் வெறுப்புக் கடையாளமாயும் வடமுனிவர் கதையில் வருவிக்கப்பட்டு அவராலேயே கொல்லப்படுகிறான் வணிகன். வடநாடு செல்வோர் பலர் திரும்பாமல் வழியில் கொல்லப்படுகின்றனர் என்பதைப் பொன்முடியைக் கொண்டு புலப்படுத்துகிறார். தமிழ்நாட்டுப் பாலையிலும் கொலைஞர் வணிகச் சாத்தை வீழ்த்துவர் என்பது சங்க இலக்கியச் சான்று.

எனினும் வீழ்ந்த தமிழனுக்கு ஒரு வெற்றி காட்ட வேண்டுமே வஞ்சந் தீர்க்கவேண்டுமே என்பதற்காகக் குமர குருபரர் கதையுள் கொண்டுவரப்படுகிறார். குருபரர் தொண்டினையும் அவர் பாடற் சுவையினையும் கவிஞர் மிகவும் பாராட்டுகிறார் என்பது அப்பகுதியில் அறிய வருகின்றது.

## பாண்டியன் பரிசு

பழங்கதைகளின் பாணியைத் தழுவிய கதை. கதைத் தளத்தை (Plot) விட இக்காலத்தின் கவிநயமும் ஓசையும் தமிழ்ச் சுவையுமே சிறந்தன. கவிஞர் காவியங்களுள் இதுவே சிறந்த காவிய அமைப்பும் பழமையையொட்டிய பாணியும் உடையது. பலவிடங்களில் இளங்கோ, கம்பன் இவர்களின் விருத்தக் கவிகளின் ஓசை நயமும் யாப்பமைதியும் நிறைந்துள்ளன.

கதை: தலைவன் வேலன், திருடர் தலைவன் வீரப்பனின் மகன். தலைவி, அன்னம் கதிர்நாட்டு அரசகுமாரி. கதிர் நாட்டை வேரநாட்டரசன் விழுங்கப் படையெடுக்கிறான். அப் படைத்தலைவன் நரிக்கண்ணன் கதிர்நாட்டரசியின் அண்ணன்: அன்னத்தின் தாய்மாமன். மைத்துனன் நாட்டின்மேல் படையெடுக்கிறான். வேழ மன்னனையும், அரசியையும் (தன் தங்கை) கொன்றான் நரிக்கண்ணன். பின்னர் இவன் அன்னத்தால் கொல்லப்படுகிறான். பாண்டியன் பரிசு என்ற பெட்டி களவு போகிறது. அது வேலன் தந்தையிடம் சிக்குகிறது, இதன்வழி வேலன் அன்னம் காதல். பாண்டியன் பரிசைக் கொண்டு வருவோர் அன்னத்தை மணக்கலாம் எனப் பறையறையப்படுகிறது. அம்முயற்சியில்

அனைவரிடையேயும் பல நிகழ்ச்சிகள், போர்கள், வீரச் செயல்கள், சூழ்ச்சிகள்.

கடைசியில் வேலன் பரிசுடன் அன்னத்தை அடைகிறான். அவள் போரில் கொல்லப்பட்டு புதைக்கப்படுகிறாள். போனவன் பிணத்தைத் தோண்டி எதிரில் வைத்துப் புலம்புகிறான், முன்னால் அன்னம் நின்று பேசுகிறாள்; அவள் கொல்லப்படவில்லை. முடிசூடலும், திருமணமும்:

முல்லைத் திணையில் தமிழகத்தே ஏறு தழுவியவனையே தலைவி மணக்கிறாள். அவ்வீரச் செயலுக்குப் பரிசு பெண், இது கலித்தொகை கூறுவது. வில்லை யொடித்தால் சீதை, ராமாயணத்தில்.குறியை யெய்தால் பாஞ்சாலி, பாரதத்தில்; இங்குப் பாண்டியன் பரிசைக் கொண்டுவந்தால் அன்னம் கிடைப்பாள். ஆனால் இதனைப் பறைசாற்று முன்னேயே இருவர்க்கும் காதல் ஏற்பட்டு வருகிறது. கன்னிமாடத்திலிருந்து கண்ட அவனே வில்லை முறித்திருப்பானா—என வில் முறிந்ததுபற்றிக் கேட்டதும் சீதை எதிர்பார்த் தேங்குவது போல, இங்கும் காதலித்தவனே பரிசைக் கொண்டுவர வேண்டுமென விழைகிறாள் அன்னம். இரண்டிடத்திலும் அன்புக்குப் பரிசு கிடைக்கிறது.

இதனையும் காதலா—மணமா, காவியத்தையும் இவரின் நகைச்சுவைக் (Comedy) காவியங்களாகக் கொள்ளலாம். புரட்சிக் கவியையும் இதனுள் சேர்க்கலாம். எதிர்பாரா முத்தம் தமிழச்சியின் கத்தி இரண்டையும் துன்பியலாகக் (Tragedy) கொள்ளலாம், இவர் காவியங்களின் நாடுகட்கும் பாத்திரங்கட்கும் நல்ல தமிழ்ப் பெயர்களை இடுகிறார்.

வேழப்படை வருகிறது. ஆயுதங்கள் விழியதிர மின்னினவாம்; படை நடத்தும் தலைவர் கழறுமொழி ஒவ்வொன்றும் அதிர்வேட்டேயாம். படையிலும், போரிலும், இலக்கியத்தும் புதிதாக முதலில் 'அதிர்வேட்டுப்' புகுகிறது.

**' தமக்காக அன்றித் தம்கணவர் மக்கள்**
**தமையெண்ணி மகளிரெலாம் நடுங்கி ஞர்கள்.'**

*கதிரை அரசன் மனைவியிடம் 'உன் அண்ணனே' நம்மீது படையெடுக்கிறான் பார்த்தாயா! என்கிறான்.*

**' மக்கள்மேல் எனக்குள்ள அன்பின் ஆணை**
**விட்டேனு அன்னவனை அண்ணன் அல்லன்**
**விரைவினிலே போர்க்களத்தை அடைவேன்'**

*அன்னேனை மாய்த்திடுவேன் அல்லது நான் அவனால் மாய் வேன் என்கிறாள் கதிரை அரசி, விபீடணை சரணுகதியை யும் இவ்விடத்தையும் இணைத்துப் பார்க்க வேண்டும்.*

*போர் நடக்கிறது. போர் பற்றிய, படை பற்றிய வருணனைகளைக் கம்பராமாயணம், அல்லது பாரதத்தில் ஒரு போருடன் ஒப்பிட்டுப் படிக்கவேண்டும்;*

**' சாவு' கொற்றவர்கள் இருவர்பால் மாறி மாறி**
**நொடிக்கு நொடி நெருங்கிற்று வெற்றிமங்கை**
**நூறுமுறை ஏமாந்தாள் ஆளைத் தேடி**

*இவ்விடம் கற்பனை மிகப் புதிது. சிறந்தது.*

*மூவரையும் (கதிரரசன், அரசி, அன்னம்) முடித்துவிடத் திட்டமிடுகிறான். அன்னம் நீங்க மற்றோர் அழிக்கப்படு கின்றனர்.*

*வேழப்படை வாயில்தோறும வர்nநீர்போய் மடை தோறும் பாய்வதைப்போல் புகுந்ததாம். நரிக்கண்ணன் பாண்டியன் பரிசாகிய பெட்டியை அரண்மனைக்குட் புகுந் தெடுத்து ஒரு ஆளிடம் கொடுத்துத் தேரோட்டியிடம் கொடுக்கச் சொல்லுகிறான்.( இந்த ஆள் வீரப்பன், எடுத்துக் கம்பி நீட்டுகிறான், பெட்டி சொன்னவிடத்தே சேரவில்லை.)*

தான் நினைத்த சூழ்ச்சிதன்னை அப்போதே தொடங்கினான் 'பொய்ப்பால் வாழ்வான்' அரசிக்குத் தன்னை நல்லவனாய்க் காட்ட. சிலம்பு திருடி நல்லவனாய் அரசிடம் நடித்த பொற்கொல்லன் நிலை கூறும் சிலப்பதிகாரத்துடன் சேர்த்துப் பார்க்க! பாண்டியன் முன் பொற்கொல்லன் பாசாங்கு இங்கு நரிக்கண்ணனிடம் எள்ளளவும் குறையவில்லை; கூனியின் தந்திரப் பேச்சும் வஞ்சகப் பேச்சும் இங்கு உள்ளத்தே வருகின்றன.

**'மைத்துனனை நானிழந்தேன் தங்கையே, நீ**
**செத்தானை இனிக்காண முடிவ துண்டோ**
**திருநாட்டை நீ இழந்து துணை இழந்து**
**கைத்தூண்டிற் சிறுமீனாய்க் கலங்கு கின்ற**
**காட்சியினை நான்காண நேர்ந்த தேயே.'**

என்கிறான் நரிக்கண்ணன்.

**'வீழ்ந்தது நின்னலம் திருவும் வீந்தது'**
**நின்மகன் அவந்தனாய் வெறுநிலத் திருக்க லானபோது**
**சீதையும் கரிய செம்மலும் நிவந்த ஆசனத் திருப்பர்'**
**இறந்திலன் இருந்தனன் எய்செய் தாற்றுவான்**
**பிறந்திலன் பரதன்நீ பெற்றதா லென்றாள்.**

என்று மந்தரை கைகேயிக்குக் கூறும் வஞ்சகவுரையுடன் ஒப்பிடுக. இரண்டிடமும் சிறக்கவே செய்கின்றன!

நரிக்கண்ணன் வஞ்சகத்தை வெளிப்படுத்துகிறான் ஆள் ஒருவன். அதற்குள் நரியன் உடன்பிறப்பைக் குத்திக் கொல்கிறான். கொலைக்களத்தில் பொற்கொல்லன், கள்வர் வஞ்சத்தைக் கற்பனையுடன் சொன்னவுடன், கோவலன் கொலைஞனொருவனால் திடீரென்று வெட்டப்பட்டதை இங்கு எண்ணவேண்டும்.

நரைத்த தாடி இளைத்த உடல் களைத்த விழிக் கிழவனொருவன் கவிஞர் காவியங்களில் அடிக்கடி வருகிறான். வீரத்

தாயிலும் வந்தான். இங்கும் வருகிருன். காவியத்திற்கு இத்தகைய பாத்திரங்கள் இடைவெளியை நிரப்ப இன்றியமையாதன போலும்!

நரிக்கண்ணன் இக்காவிய வில்லன் (Villain) வில்லாதி வில்லனுகவே படைக்கப்பட்டிருக்கிருன்.

நரிக்கண்ணன் வேழமன்னனிடம் தன் நேர்மையையும் தொண்டுக்குப் பரிசும் நினைக்கிருன். அது அவன் செத்த பின் அடையும் வாளுட்டில்.

நானூறு சிற்றூர் அடங்கிய பேரூரில் சோலை சூழ்ந்த அரண்மனையில் பால் நேரில் காய்ச்சி அதில் சீனி இட்டுப் பத்துவகை உணவுடன், ஒருபெண்ணும் ஊனின்பம் நுகர இருந்தால், அதுவே எனக்கு வேண்டும் என்கிருன். கவிஞர் விரும்பும் குறிக்கோள் வாழ்வா இது! காணி நிலம் வேண்டும் என்ற பாரதி குடும்பக் குறிக்கோளை இத்துடன் இணைத்துப் பார்க்க.

**ஒருகுலையில் ஒருகாயில் தீமை காணில்**
**உயர்காய்கள் அத்தனையும் வெறுப்ப துண்டோ'**

உன் தங்கை தீயவளாளுல் உன்னை வெறுப்பேனே, எனக் கூறிக் கடைசியில் கதிரை நாட்டாட்சியை அவனுக்கே அளிக்கிருன்.

ஆத்தாவின் மகன் வேலன். அவள் அரண்மனையில் அன்னத்தைக் காப்பவள், அரசியின் தோழி. வீரப்பன் திருடன் அவள் கணவன். திருட்டு வேலையை விடச் சொன்னுளாம். இவன் அதை விடாமல் அவளைவிடத் துணிந்தான். அவள் இவனை அகன்று வேலைசெய்து பிழைக்கிருள், மகனை வளர்க்கிருள். இங்கு ஒரு நீலகண்டம் நிற்கிறது. திருடுவதைவிடு இன்றேல் என்னைத் தீண்டுவதை விடு என்ருளாம் ஆத்தா. ஈன்ருள் முகத்தும் களி இன்னுது,

களவும் அப்படித்தானே. மனைவிமுன் சொல்லவேண்டுமா? குறள்வாழ்வு இங்குக் குறிக்கப்படுகிறது. தேனடையும் ஈயும்போல் மகனும் தாயும் வறுமையிலும் செம்மை காண்கின்றனராம்.

திருடரின் தேற்றமான வாழ்வு இங்குத் தெளிவடைகிறது. நரிக்கண்ணன் பெட்டியைக் கொண்டுபோ எனக் கொடுத்தானும்; வீரப்பன் வாங்கி வந்தவனும். அவனைத் திருடன் என்பதில்லை உலகம். வீரப்பனைத்தான் திருடனென்கிறதாம்.

**பொருளாளி திருடர்களை விளைவிக் கின்றான்**
**பொதுவுடமை யோன்திருட்டைக் களைவிக் கின்றான்,**

திருடரைப் பொருளை யெடுத்துப்போகச் சொல்வதும் சிறையிலடைப்பதும் திருடனென்று மக்களிடம் தூற்றுவதும்

**மன்னர் பழம்புலவர் வணிகர்க் கெல்லாம்**
**வரும்பெயரை நமக்காக்கும் முயற்சி.**

இது திருடர்கள் பேசிக்கொள்வது. அடிப்படையில் உண்மை கொண்ட அழகான நகைப்புக் கட்டம்! வேதநாயகம் பிள்ளை நீதிநூலில் திருடர் பட்டியலின் விரிவு தெரிவிக்கப்படும்.

தமிழ் ஆசிரியர்க்கு இவர் காவியங்களில் தனிப் பெருமை. வீரத் தாயிலும் இங்கும் உண்மையை நினைவூட்டி மக்களை உரிமைக்குரிமையாக்குபவர் இவரே. இவர் பெயர் சீனி. வேலன் முதலோர்க்கு அரசியல் உள்ளந்தரங்களை உரைக்கிறார்.

பாடல்கள் அதிக அழகும் யாப்பமைதியும் முற்றெதுகை முதலிய தொடையணிகளுங் கொண்டவையென முன்பே கூறினோம். 19-ம், இயல் ஒரு சான்று.

**பொறுத்திருப்பார் வாழ்ந்திருப்பார் இந்த நாளில்**
**புகுந்திருப்பார் இங்கிருப்பார் தம்மை யெல்லாம்**

என்த் தொட்ங்கி நிறுத்திருப்பார் குறித்திருப்பார் குளிர்ந் திருப்பார் மறந்திருப்பார் மறைந்திருப்பார் என எதுகை மோனைத் தொடைகளுடன் பாடல்கள் இங்குகின்றன. ஓசை நயம் ஓங்கிய பாடல்கள். படிக்கப்படிக்க இன்பம் பயப்பன. பொருளழகு மட்டுமின்றி இத்தகு சொல்லழகு கவிக்கு உயிர் போன்றது.

ஆத்தா அரசன் அரசி மறைவுக்கு ஆற்ருளாகி அழு கிருள். அவலம் கலை நிறைவுடைத்தாகிறது. அரசி தன் அன்னம் தன் அன்பனை மணந்து, சேற்றில் எருமையெனக் கிடந் தின்பம் நுகருகின்ற எழில்நாளை எதிர்பார்த்தாளாம், இறந்தாளாம். அன்றில், யானை, மாசுணம் அனைய புணர்ச்சியின்பமெனவே இதுவரை இருவர் நுகரும் காத லின்பத்தை வருணித்தார் புலவர்.

இவர் எருமையின்பத்தை எடுத்தார். இது தரம் குறைந்தது. இதற்காகத்தான் உவமை, பொருளைவிட, உயர்ந்ததாக வேண்டுமென்றனர் உயர்ந்தோர். மனிதனுக்கு எருமையை உவமை எடுப்பது தரமில்லை!

'அழுவேனு நான்' என ஆத்தாள் அழுவதனேடு கம்ப ராமாயணத்தில் இராமனை எண்ணிய சீதை புலம்பி அநும னிடம் உரைப்பதனை ஒத்திடலாம். அவலம் உள்ளத்தை உருக்குதல் உண்மை.

'பட்டயமும் உடைவாளும் உடையது அப்பெட்டி'— (பரிசு), என, ஆத்தாள் அழுகையில் அறிய வருகின்றது.

உடன்பிறந்தானையே வெட்டினுனென மனம் உலைகிருள் அன்னம். உடன்பிறப்பு என்னும் உரிமைக்குத் தவம் செய்ய வேண்டிய இவ்வுலகில் கேடிழைக்கும் உறவெனும் சொல் கேட்பதேயோ, எனக் கதறுகிருள். பகைக்கு இருப்பிடமே பெரும்பான்மையோர் அண்ணன் தம்பிகளாகத் தோன்று கின்றனர்! மாமன் மருகன், மாமி மருகி! எனவே அண்ணன்

தம்பி என்ற பெயரையே அழித்து விட்டால் குறையில்லைபோல விருக்கிறது!

**'யாருமில்லை யான்பெற்ற பேறு பெற்றார்**
**இற்றைக்கே என்போலக் கெட்டா ரில்லை'**

என்கிறாள் அன்னம்.

**அற்றைத் திங்கள் அவ்வெண் ணிலவின்**
**எந்தையு முளமே எங்குன்றும் பிறர்கொளார்**
**இற்றைத் திங்கள் நிலவில் யாம் எந்தையும் இலமே**

என நாட்டையும் பாரியையும் இழந்த பாரிமகளிர் தம் ஏக்கத்தை இங்கு ஒப்பிடவேண்டும்.

வேலன் பகைவருடன் போர் நடத்துகிறான். ஆத்தாவும் அன்னமும் மாறுவேடத்தில் தப்புகிறார்கள். மகன் கதி! என்கின்றனள் அன்னம். 'ஊர்மீட்கச் சாகட்டும்' என்றாள் ஆத்தா. ஒரு மகன் அல்லது இல்லாதவள் அவனையும் செருமுகம் நோக்கிச் செல்கென விட்டாளே அவள் பரம்பரை!

**'முன்னின்று காத்தாளை ஆத்தா என்னும்**
**முதியாளை தீர்த்திடம் குதியா நின்றான்.'**

இத்தகைய இடங்களில் ஓசையும் தொடையமைப்பின் எதுகை நயமும் இன்பத்தேன் சொட்டுகின்றன. எண்ணற்ற இடங்கள் இப்படி!

கதிர்நாட்டை நரிக்கண்ணனை ஆள விடுவது சீறுகின்ற பாம்புக்குத் தவளையூரில் திருமுடி சூட்டுவதாகுமாம். 'நாய் தரக் கொள்ளும் சீயம் நல்லரசென்கிறான்' அங்கதன் இராவணனிடம். கிஷ்கிந்தை ஆட்சியை உனக்குத் தருகிறேன் என இராவணன் கூறுகையில், அந்த ஆத்திர உணர்ச்சியும் நிகழ்ச்சியும் இங்கு உண்டாகின்றன.

38-ஆம் இயலில் மண்காண எனத் தொடங்கும் பாடல்யாப்பமைதியால் இனிக்கிறது, மிகவும் இனிக்கிறது. படித்து இனிப்புறவேண்டும்.

அன்னத்தை நரிக்கண்ணன் தன் மகனுக்கு மணஞ் செய்ய நினைக்கிறான். அவள் வேலனைக் காதலிக்கிறாள். கதை வளருகிறது. எண்ணிலாக் கதைகளிலும் இதே கட்டம்! பாண்டியன் பரிசைக்கொண்டு வருவோனையே மணப்பேன் என்கிறாள்.

**'கூழையேனும் கொண்டு காட்டு மேட்டுக்**
**கொல்லையேனும் சுற்றித் திரியு மந்த**
**ஏழையேனும் கண்ணுக் கினியான் இன்றேல்**
**இம்மியேனும் வாழ்வை இனிநான் வேண்டேன்'**

என்கிறாள் அன்னம் வேலனை எண்ணி. இவ்வுலகில் எல்லாரும் நிகரே என நரிக்கண்ணனிடம் சொல்கிறாள், அவன் வேலன் இகழ்சாதியாச்சே என்றதற்கு. 'அச்சுவை பெறினும் வேண்டேன்' என்கிறார் ஆழ்வார்! புரட்சிக்கவி. கடற்மேற் குமிழ் இப் பாண்டியன் பரிசு எல்லாவற்றிலும் சாதியொழிப்புப் புரட்சி தாண்டவமாடுகிறது. சாதியொழிப்பு பாதி தமிழ் பாதி செய்யவேண்டிய தொண்டில், என்று தானே பாரதி சொன்னாராம்! இவர் காவியமெல்லாம் இவையிரண்டுமே குவைகுவையாய்க் கிடப்பன.

அன்னத்திடம் அவள் மாமன் மகன் பொன்னப்பன் தன்னை அறிமுகப்படுத்திக்கொள்கிறான். தானே வந்து அறிமுகப்படுத்திக்கொள்வார் தன்னலத்தார், அத் தாழ் நிலை இது.

அவன் பெயர் பொன்னப்பனாம், பொன்னப்பன்மேல் போட்டிருக்கும் பொன்னுடை பார் நகை பார் என்கிறான். பேருக்கேற்ப ஆடையும் பொன்னும். சிரிப்பு வருகிறது. பார் நகை பார் என்கையில் அவன் அணிந்த நகையைப் பார்க்க

மனமின்றி நகைப்புக்கிடம் பார் என அவள் கூறுவது போன்றிருக்கிறது. இப்படிப்பட்ட அத்தான்களையே இன்று அம்மாஞ்சி என்கின்றனர்.

தாலி கட்டவில்லை, அதற்குள் குடும்பம் மக்கள் மனைவிக்கு அறிவுரை பற்றியெல்லாம் அம்மாஞ்சி அடுக்குவது தொல்காப்பியரின் புதுமை, இளிவு உணர்ச்சியை உண்டாக்குகிறது. சரியான மட்டிச் சாம்பிராணி, மனங் கொள்ளச் சிரிப்பு வருகிறது. அத்தை மகன் என்ற உரிமையில் சுற்றிச் சுற்றிப் பேசுகிறான். இதுபோல் விளை வெண்ணுது எதிர் உணர்ச்சி நோக்காது பேசுவோர் உலகில் பலர், அவருருவம் இங்கு அப்படியே தெரிகிறது.

உழவர்

**'களிவிளைக்கும் தமிழாலே பண்டி தர்க்கு**
**களைவிளக்கும் எளியநடைப் பாட்டுப்'**

பாடுகிறார்களாம். உழவுப்பாட்டு, பள்ளுப்பாட்டு, ஏற்றப் பாட்டு இவற்றின் இனிமை யாரும் அறிந்ததே. 'மூங்கிலிலை மேலே' என முடிக்க நீர் இறைப்பதை நிறுத்தினன் ஏற்றம் இறைப்போன். பன்னீராயிரம் பாடிய பாவலன் கம்பன் அதனை முடித்து மற்ற பாதியைப் பாட அரும்பாடு பட்டானும். 'தூங்கும் பனி நீரே' என அவர்கள் மீண்டுப் பாடிய பின்பே அது கம்பனுக்குத் தெரிந்ததாம். எளிமையும் களியும் கலையும் இங்குத் தெளிகின்றவல்லவா?

அன்னமும் நீலமும் படகில் உலாவுகிறார்கள்! மேற்றிசை வானத்தை அன்னம் நீலிக்குக் காட்டிக் கற்பனை செய்கிறாள். பாஞ்சாலி சபதத்தில் அர்ச்சுனன் பாஞ்சாலிக்கு இதே மாலைப் பரிதியைக் கட்டி மகிழ்கிறான். பாரடியோ வானத்தின் புதுமை வெள்ளம் என்கிறாள். 'பாரடி நீ மேற்றிசை வானத்தை, அங்குத் தேங்கும் பொன்னுற்றில் மாணிக்கச் செம்பரிதிப் படகோடும்' எனப் பகர்கிறாள், அன்னம். அன்

னும் நீலியும் படகில் போகிறார்கள். புயல், மழை, இருள் எல்லாம் எதிர்ந்தனவாம். இவற்றைப்பற்றிய பழைய இலக்கியக் கற்பனைகள் எண்ணில; கம்பன் 'நாட்டு வளத்தை' நினைத்தாலே போதும். திருக்கோவையிலும் இதுபற்றிய கற்பனை கவினுற்றது.

கேள்வியிலார் நெஞ்சம்போல் இருண்டு நீளும் வழக்குடைய செல்வம்போல் மின்னி வண்பொருளை இழந்தான் போல் அதிர்ந்து பின்னர் மழைக்கண்ணீர் உகுத்தது வான்.

பழக்குலையில் எறிந்த குறுந்தடியே போலப் படகின் மேல் புயல் பாய்ந்ததாம். இங்குப் படகு பழக்குலையா, பெண்களா?

நல்ல கட்டம் அமைத்துக் காதலர்களை இவ்விடத்தே சந்திக்க வைக்கிறார் கவிஞர். புனல்தரு புணர்ச்சி வகையைச் சேர்ந்தது இவ்விடம் அகவிலக்கணத்தில். முன்பு மாற்றார் சிறைபிடிக்க வருகையில் அவர்களை மறித்து அன்னத்தைக் காத்திருக்கிறான் வேலன். அதுமுதல் இயற்கைப் புணர்ச்சி நிகழுவது என்னலாம்.

பயனற்ற மனிதப் பாழ்உடம்பை ஆண்டவனிடம் அறநெறியிடம் ஒப்படைப்பர் அடியார். இங்குக் கவிஞர் அழகான துறவு பேசி அதனை அரசன் பெண்ணரசுக்கு ஆட்படுத்துகிறார்.

**ஒருசற்றும் பயனில்லா உடம்பை வாழ்வோ**
**உண்டில்லை என்னுமொரு மின்னைத் தின்ன**
**நரிசற்றும் விலகாத கூட்டைச் சான்றோர்**
**நகைப்புக்கே இலக்கான குமிழி தன்னை**

மன்னர் முடிசாய்க்க நெடிதாண்ட மன்னரின் பெண் அரசுக்கோ ஆளாக்கா திருக்கவேண்டும் என அழகாகப் பெண்கட்கு அடியார் கூட்டத்தைத் திரட்டுகிறார் கவிஞர்.

*சிவனைப் 'பேசாத நாளெல்லாம் பிறவா நாளே' என்பார் அப்பர் அடிகள். விழுப்புண்படாத வழுநாளாக்குவான் வீரன். இங்கும் 'எனை ஈன்ற பெற்றோர் இனம் ஈன்ற தமிழ் நாடு தனக்கு' என்றால்*

**தினையளவு நலமேனும் கிடைக்கு மென்றால்**
**செத்தொழியும் நாளெனக்குத் திருநா ளாகும்.**

*என்கிறான் வேலன் (வேலையுடையவன்—வீரன்!)*

*வீரப்பன் (வேலன் தந்தை) சொல்லுகிறான். ஆட்சிக்குப் புறம்பாய் (திருட்டுத் தொழில் தனி இடம்) நான் இருக்கையிலேயே என் கால் போயிற்று. முன்பு அரண்மனைப் போரில் ஆத்தாளே அடையாளம் தெரியாமல் வீரப்பன் காலை வெட்டிவிடுகிறாள். அவன் அவள் கையை வெட்டுகிறான்; அதனை இங்குக் குறிக்கிறார். ஆட்சி பெற்றால் உயிரே போம்போலும் என்கிறான். இங்குத்தான், இக் கவிஞனின் 'இருட்டறையில் உள்ளதடா உலகம்' என்ற இனிய நாடறிந்த வரி நடைகொண்டு வருகிறது.*

*இங்குப் பேசப்படும் அரசியல் தத்துவங்கள் ஆன்றமைந்த பீடும் பெருமையுமுடையன.*

**எல்லார்க்கும் எல்லாம்என் றிருப்ப தான**
**இடம்நோக்கி நடக்கின்ற திந்த வையம்**
**கல்லாரைக் காணுங்கால் கல்வி நல்காக்**
**கசடர்க்குத் தூக்குமரம் அங்கே உண்டாம்.**
**நல்லோரே எல்லாரும் அவ்வை யத்தில்**
**நமக்கென்ன கிழியட்டும் பழம்பஞ் சாங்கம்.**

*முதல் இரண்டு வரிகள் இன்றுலக முழுதும் உண்மையாதலைக் கண்டு வருகிறோம். தேடும் கல்வியில்லாதோர் ஊரைத் தீக்கிரையாக்குகிறார் பாரதி. இவர் அதற்குத் தூக்குமரம் தேடுகிறார். எல்லோரும் நல்லோர், உலகம் கம்பனும் காளிதாசனும் கண்டது, 'நமக்கென்ன கிழியட்டும் பழம்*

பஞ்சாங்கமே' என்கையில் சாக்குருவி வேதாந்தம் என்ற இவரது முன்னொரு வரியும், பாரதியின் பேயரசு செய்தால் பிணந்தின்னும் சாத்திரங்கள் என்ற தொடர்களும் எண்ணத்தில் உறுகின்றன. ஆற்றலுள்ள வரிகள், இவை. கவிஞனைக் கவிஞனாக்குவது இத்தகைய தொடர்களே. இவற்றால் பதிக்கப்படும் கருத்து உள்ளத்தினின்று கிழியாதல்லவா? என்றும் கிழியா தென் பாட்டெனப் பழம்புலவர் ஔவை பாடினாரே!

நீலன் நீலியைக் காண்கிறான்;

**மாந்தளிரால் மெல்லுடலும் மணக்கும் செந்தா**
**மரையிதழால் வாயிதழும் உடையாய் கேட்பாய்**

என்கிறான்

இங்கு மாந்தளிர், தாமரையிதழ்க் கற்பனைகள் சங்க காலத்திருந்து வருவனவே, மிகப் பழமையனவே. அப்படியே போற்றிக்கொள்கிறார் கவிஞர். சுவை சிறிதும் கெட்டு விட்டதா, பலாச்சுளையும் பாதாம் அல்வாவும் என்றேனும் பழமை அடைவதுண்டா சுவையற்றுப் போவதுண்டா? கலையும் அப்படித்தான்! இக்கற்பனைகளில் 'கலைத்தன்மை' சேர்ந்துவிட்டதால் என்றும் இத்தகைய வரிகட்கு பழையன என்ற இழுக்கில்லை.

பூதம் (பிசாசு பற்றிய)

**சிறுசெய்தி நம்புகின்றீர் உம்மைக் கண்டால்**
**தேருக்குச் செப்பனிட்ட முட்டுக் கட்டை**
**சிரிக்குமெனில் நான் சிரித்தல் வீணே.**

இது கவிஞருடைய கருத்தே. இங்குப் பூதங்கள் வந்து ஊரைப் பயமுறுத்துவதுபற்றிக் கதை வருகிறது.

நரிக்கண்ணன் பேழையையும் இராமன் சீதையையும் இழந்தவுடன் தேடும் நிலைகளை ஒப்பிடவேண்டும். உயர்ந்

தை இழந்த உள்ளம் படும்பாடு தெளிவாகக் கற்பனை செய்யப்படுகிறது.

அன்னம் பேழையைத் தேடி ஒரு சோலையை யடைகிறாள். இயற்கை இசையரங்கு; அகநானூற்றிலும் வருகிறது; மணிமேகலையிலும் வருகிறது.

**'புன்னைவர வேற்பளிக்கத் தென்றல் வீச**
**துகிர் உடலில் மணந்தடவ இசை யரங்கு**
**தும்பியார் துவக்கினார் அமர்ந்தாள் அன்னம்'**

மணிமேகலையில் அரச அன்னம் தனியே அமர்கிறது. மணிமேகலை தனிநின்று காண்கிறாள் கலையைச் சுவைக்க. இங்கும் அவ்வன்னமும் பெண் அன்னமும் ஒன்றேயானது. மணிமேகலையைவிட உயர்ந்த கற்பனை.

அன்னம் வேலனைப்பற்றி அகக்கண்ணாற் காண, அவன் வீரன், உயர்ந்தவன்; எனக்கு எத்தனையோ உதவினான்; ஓடத்திருந்து காப்பாற்றினான், 'இறக்கினான் தொட்ட இடம் மறக்கவில்லை' என்று கூறும் காதல் உணர்ச்சியையும் உள்ளத்தையும் நன்கு புலப்படுத்துகிறார் இங்கு.

ஆனால் அவனுக்கு என்னிடம் காதல் இருப்பதாய்த் தோன்றவில்லை. இது மலரில் தேன் இல்லாத நிலை.

**என் உயிர் வண்டுக்கு அல்கிடமுண்டோஎன ஏங்குகிறாள்**
**எழில்மலரில் தேன் இலை என் உயிர் வண்டுக்கே,**

என ஏழுபாடல்களும் எட்டஎட்ட இனித்தே செல்கின்றன! அப்படியே உறங்கிவிட்டாளாம் அன்னம். 'கைவல்லான் வைத்த யாழ்போற் கிடந்தாளாம்.' இவ்யாழை இதுவரை மீட்டியது வேலன் கையோ! யாழ்பற்றிய கற்பனை இவர் கவிகளில் இருநூறிடங்களில் காணும்போலும்! தமிழைப் பாடுகிறாரெனில் தமிழ்க்குரியனவற்றையெல்லாம் பாட வேண்டுமல்லவா? யாழும் குழலும் தமிழர்க் குரியன. யாழ்

நூலே ஏற்பட்டது அது தமிழ்க்கேயுரிய தமிழிசைக் கருவி யாதலாற்றானே!

அன்னமும் வேலனும் அரண்மனையில் நுழைகிறார்கள். அவள் விரும்பிய அன்புபற்றிய பேச்சும் நிகழ்ச்சியும்: பிள்ளை நிலை என்ற கனிச்சாறும் பேரிளமை என்னும் கருப்பஞ் சாறும் (இங்குப் பெருமையுடைய இளமை: பேரிளம்பெண் ணின் இளமையன்று!) கொள்ளை படப் பெய்துவைத்த கொப்பரையாம் "இளமை" அதனை நாள் என்னும் பூனை நக்க உயிர் என்பார் பார்த்திருக்கலாமா என்கிறாள். நாளது சின்மையும் இளமையதருமையும் நவில்கிறாள் அன்னம், தொல்காப்பியம் உணர்த்துகின்றாள்!

**அள்ளையிலே காதல்...அதை அருந்தல் இன்பம்**
**அகமொன்றி மேல்நடத்தல் அறமாம் என்றாள்,**

அவன் களவு—கற்புக்கிலக்கணம் இரண்டே வரிகளில்! ஈதல் அறம் 'காத லிருவர் கருத்தொருமித்து ஆதரவு பட் டதே இன்பம்' என்ற ஔவைக் கற்பனை இங்குக் கொண்டு அகமகிழத் தக்கது.

வைகல் எண் தேர் செய்யும் தச்சன் திங்கள் வலித்த காலன்னோன் புறநானூற்று இளைஞன், மறவன். இங்கு வேலனும் ஒரு தேர் போன்றவனாம்.

**'அடிபிடித்த வேர்கல்லி நூல் பிடித்து**
**வாள்பிடித் தறுத்தெடுத்த செம்மரத்தில்**
**வாள்பிடிக்கச் செப்பனிட்ட தேர்'**

போன்றான். அவனை அவளுக்குப் பிடிக்குமா என்கிறார். நீலன் நீலியை, தோழியல்லவா,

**அவளுக் கன்னோன் தோள் பிடிக்கும்**
**சுவையெல்லாம் பிடித்தெடுத்த தூயதமிழ்**
**[நடைபிடிக்கும்**

என்றுள் நீலி. அவனது ஏறுபோற் பீடுநடை, கம்பன் காட்டும் களிற்று நடையை இவர் தமிழ்நடை என்கிருர், அத் தமிழ்நடை இவர் கவிகளிலும் இன்பங் காட்டி நடக்கக் காணலாம். முன்பும் சுட்டிேறும், இவ்விடத்துப் பாடலும் அவ்வெழில் நடைகொண்டதே!

அன்னம் நரிக்கண்ணனைக் கொல்லுகிருன். அங்குத் தமிழச்சி தானே 'எதிரியைக் கொல்கிருள். பெண்கள் வீரர்கள். அவர்கள் விமானம் ஓட்டுவதுமுதல் போரிடல் எல்லாம் செய்யவேண்டுமென்ற இவர் கருத்தை இவ் விடங்களிலெல்லாம் எடுத்துக் காட்டுகிருர்.

அன்பின் அடையாளங்கள் பதினெண்கீழ்க்கணக்கில் பகரப்படுகின்றன. சாவிற் சாதல் நோவின் நோதல், நன்பொருள் கொடுத்தல் முதலிய வகை. 'மகிழ்ச்சிக்கு மகிழ்ந்து நான் நைந்தால் நையும்' அன்னம் என்கிருன் வேலன் இங்கு.

உவமையை ஒரே மாதிரியாக எல்லாவிடங்களிலும் இயம்பிஞல் சுவைக்காது. சோற்றைத்தான் உண்டாஞல், சோறும் குழம்பும் ஒருநாள், புளிச்சோருகச் செய்து ஒருநாள், பொங்கலாக ஒருநாள் உண்டால் பிடிக்கும், இனிக்கும். கொடிபோன்ற இடை என்பது உவமை, இது இயல்புவகை. இடைபோன்ற கொடி என்பதொன்று.

இங்குக் கொடியென்ருல் மின் வருந்தும், விழியை அம்பென்ருல் மீன் வருந்தும் தன்னை உவமையாக்க வில்லையேயென, இவ்வாறுரைக்கையில் சாதாரணமாகத் தள்ளும் உவமையில் சிறிது தங்கி நோக்குகிறேம், நினைக் கிறேம். இன்னும் கலித்தொகையில்

**'மைதீர்ந் தன்று மதியுமன்று, வேயுமன்றன்று**
**மலையுமன்று, பூவு மன்றன்று சுனையுமன்று**

என்கையில் உவமை இன்ஞெரு வகையில் இனிக்கிறது.

மூங்கிலைப்போலும் தோள் என்பதை மூங்கில் என்ருல் அது வளரும் மலையை அங்குக் காணேமே என ஐயுறுகிருன் தலைவன். கண்ணைத் தாமரையென்ருல் அங்குச் சுனையைக் காணேமே என்கிருன்.

இரவில் பேழை வருவதைப் பிடிக்க நீலன் ஆட்கள் தேடுவது நன்ருக இருக்கிறது, நகைச்சுவையுமுண்டு. நில வில் ஆலின் நிழலில் நின்ற கழுதையை ஆளாக நினைத்து நெருங்கி உதைபடுகிருன் ஒருவன்; கற்றூணைக் கள்வனுகக் கருதி மற்போருக் கழைக்கிருன் மற்ெருருவன். வேலமரத் தடியை நெருங்கி வெடுக்கென்று முள்தைக்க நடுங்குகிருன் இன்ெனுருவன். அனுமான் இலங்கையில் சீதையைத் தேடும் கட்டத்தை இணைத்துப் படிக்க வேண்டும்.

பேழையைக் கொண்டுவந்து பார்க்கிருன் வேலன். ஆத் தாளுடன் படுத்திருந்த அன்னத்தைக் காணேம், குருதி பரவிக் கிடக்கிறது.

**'கண்ணே உன்றன் கலக்கத்தைத் தீர்க்குமோர் இலக்கி [யத்தைப்**
**பொய்யாத பாண்டியனுர் பரிசைக்'**

கொணர்ந்தேன். உனக்காகவே, நீ யில்லையாளுல் எனக் கெதற்கென்கிருன்.

பரிமேலழகர் பொருள் கொள்ளும் சிறந்த நெறியை இங்குப் பற்றலாம்.

**சமன்செய்து சீர் தூக்கும் கோல்போல் அமைந்தொருபாற்**
**கோடாமை சான்ருேர்க் கணி**

என்ற குறளில் துலாக்கோலின் சமன்செய்து சீர்தூக்கும் என்ற அடையைச் சான்ருேர்க்கும் அவரது அமைந்தொரு பாற் கோடாமை என்ற அடையைத் துலாத்திற்கும் ஆக்கு கிருர். இங்குக் கலக்கத்தை தீர்க்குமோர் (ஓர்—ஒப்பற்ற) என்றதைப் பரிசுக்கும் பொய்யாத என்ற பரிசில் அடையை

இலக்கியத்திற்கும் ஆக்கிச் சுவைக்கவேண்டும். இவர் இலக்கியத்தைப்பற்றி 'பெர்னட்ஷாவைப்போல்' இவரே மதித்துவிட்டார். மதித்தது பொருத்தந்தான்!

அன்னம்—பிணத்தை அள்ளியெடுத்து அலறுகிறான். முன்பு 'மலரில் தேனில்லை என்உயிர் வண்டுக்கே' எனத் தொடரால் அழுது நம்மையும் அழவைத்தவள் அன்னம். இங்கு இவன் 'இந்த வையம் சாகவில்லை' எனில் எனக்கிங் கென்ன வேலை' என்ற தொடரால் இக் காவியத்தை வாழ வைக்கிறார். ஒரே தொடரால் பல பாடல்களை இழைத்து இழைத்து இன்பமூட்டி வைக்கிறார்.

அவள் பிணத்தை நிலவிற் கண்டு யாக்கையின் இழி நிலையைக் கண்டு அருவருக்கிறான். நாலடியாரிற் பாடிய முனிவர்க்கும் அருணகிரிக்குங் கூட அகப்படாத கற்பனைகள்.

> 'ஏ;இதற்குத் தானா இவ் அழியுடற்கா
> இருள்கண்டால் விழிமூடும் நோயும் அஞ்சும்
> மாக்கீழ்மை இதற்குத்தா னா இப்பாடு'

இருள் கண்டால் விழி மூடும் நோயுமஞ்சும் என்ற வரி ஏற்ற முள்ள கலைஞர்தம் இதயத்திலன்றி தோன்றாது. உயர்ந்த கற்பனை; புதிது.

பின் அன்னம் பின்புறத்தில் வந்து நின்றாள். காதலர் வியப்பும் விளக்கமும். இருக்கட்டும், 'தென்றல் இருவர்க் கும் நடுச்செல்ல விடாதீர்' என்றாள்.

இது தழுவுமிடம்: வளியிடை போழப்படா முயக் கல்லவா? கதைத்தளத்தில் (Plot) பூதம், கிழவன், எல் லாம் கலைஞன் கற்பனைகள். கதைக்கு வேண்டுமென்ப தில்லை. பூதக்கட்டத்தை 'இயல்மீறியது' (Super natural) என ஷேக்ஸ்பியரிடம் பேசுவார்கள்.

அன்னம் சாவதாகக் காண்பித்துப் பின் பிழைத்திருப்ப தாகக் காட்டுதல் கற்போர்க்குக் கவனம், கவர்ச்சி இவற்றை யுண்டாக்குவதற்கேயாம். மற்றும் அவலத்தில் முடியாது அகமகிழ்வுடன் முடிவதையே மக்கள் விரும்புகின்றனர்.

'அன்பே இறுதியில் வெற்றிபெறும்' என்பதே இது வரை மக்களினம் கண்டது, விரும்புவது. எனவே செத்த நிலைக்குக் கொண்டுபோய் மீண்டும் பிழைக்க வைக்கிருர் இங்குக் கவிஞர். பெரியபுராணக் கதைகளின் இறுதியும் கோட்பாட்டின் அடிப்படையும் இதுவே. நாயன்மார் தாமே கொலைபுரிந்துகொள்வர், துன்பத்தில் வீழ்வர், கடைசியில் (கடவுள் காட்சியால்) பிழைப்பர், மீண்டு இன்புறுவர்; காரணம், அன்பு வெல்லவே உலகம் விரும்பும் என்பதனைக் குறிக்கவேயாம்.

## தமிழச்சியின் கத்தி

வேல் கைக்கொடுத்து வெளிது விரித்துடீஇயபோது அது தமிழச்சியின் வேல். இது தமிழச்சி கத்தி. மற்ற வனைக் கனவிலும் நினையாத கற்புடையவர்கள் வாழ்ந்த நாடு. பிறன்மனை நோக்காத பேராண்மையை வடநாட்டார்க்கும் உணர்த்த வேண்டித் தானும் உயிர் விடுகிருள் தமிழச்சி.

கற்புடையவட்கு இழுக்கிழைப்பினும், கணவனைக் கொண்டே அதனைத் துடைத்துக்கொள்வது வடநாட்டு இலக்கியப் பண்பு; இராமாயணம். இராமனின் வில்லுக்கு அது மாசென விடுத்தேன் இன்றேல் இவ்விலங்கையை எரித்திருப்பேன் என்கிருள் சீதை. ஆனல் கண்ணகி ஆடவரைக் கொண்டு அநீதியை மாற்ருமல் தானே வாதிட்டுத் தீயிட்டு வெல்கிருள். இங்குத் தமிழச்சியும் தானே போரிட்டுப் பெருமையைக் காக்கிருள். இது அவலச் (Tragedy) சுவைக் காவியமெனலாம். பெண்களை சுற்றித் திரியும் காமுகன் பேச்சு செயல் இங்கு அழகு ஆகியவை பெறக் கற்பனை செய்யப்படுகின்றன. ஏழை கிராமப் பெண்ணின் மனம், மணவாழ்வு, மனஅமைதி, ஆகியவை இங்குத் தெளிவாய் எடுத்துக் காட்டப்படுவன.

செஞ்சியை தேசிங்கு ஆள்கிற காலம். அவன் சிப்பாய்கள் இருவர் புதுவை சென்று திரும்புகையில் வளவனூர் தோப்பில் தங்குகின்றனர். திம்மன் என்ற ஏழை அவர்க்கிளநீர் தந்து இளைப்பாற்றி வீட்டிற் கழைத்துப்போய் விருந்தும் நடத்தி அனுப்புகிறான். விருந்துண்ட கயவர் திம்மன் மனைவியையும் சுவைக்க ஆசைப்படுகின்றனர். திம்மனுக்குச் செஞ்சியில் சிப்பாய் வேலை வாங்கித் தருவதாகச் சூழ்ச்சி காட்டி அவன் குடும்பத்தை அங்கு அழைத்தேகுகின்றனர். திம்மனுக்கு வேலை கிடைக்கின்றது. அவனைக் கோட்டையில் தனியே இருக்க ஏற்பாடு செய்துவிட்டு, சுப்பம்மாவை மயக்கிக் கற்பழிக்கிறான் சிப்பாய் சுதர்சன். காலையில் தெளிந்தெழுந்த சுப்பம்மா இதுகண்டு திகைத்து ஓடி சுதர்சன் வீட்டுக் கதவைத் தட்டி அவனைக் கொல்கிறாள். தேசிங்கு சுதர்சன் கொலைக்குப் பரிந்து வருகிறான்; திம்மன் படுகிறான். சுப்பம்மாவைச் சித்ரவதையிட்டுக் கொல்ல ஆணையிடுகிறான். கற்பரசி இதற்குத் தாழாமல் மூச்சை அடக்கி அப்படியே உணர்விழிந்து உயிர் நீக்கிறாள்.

சுதர்சன் வீட்டுக்குச் சுப்பம்மா ஓட ஊர் ஓடுவதும் கதவைத் தட்டுவதும் அவனைக் கொல்வதும் கண்ணகி வழக்குரை காதையை நினைவுற்று எழுதப்பட்டது போலுள்ளது.

மாய மானைக் காட்டி இராமனைத் தனிக்கச் செய்யும் இராமாயணப் பகுதியும் சிப்பாய் வேலையைக் காட்டித் திம்மனைத் தனிக்க வைப்பதும் ஒரே அடிப்படையுடையன. தனித்த சீதைக்கு அரக்கியர் கற்பை விலைபேச இருந்தனர்; இங்கு இரண்டு தோழிகள் சுப்பம்மாவுக்கு.

கவிஞர் தனது ஊரை (புதுவை) இங்கும் குடும்ப விளக்கிலும் தொடர்புறுத்திக்கொள்கிறார். வடநாட்டார் வெறுப்பு

இங்கு எடுப்படைகின்றது. ஏழைப் பெண்களின் கற்பைத் தமிழ்நாட்டின் செல்வர், மிராசுதார், ஜமீன்தார் பிள்ளைகள் அழித்து அவர் குடியையும் கலைப்பதுண்டு. எனவே இது பதவி, பொருள், அதிகாரம் மேம்பட்டோரிடம் காணும் ஒரு அநீதியென்ற அளவில் எடுத்து ஆராயலாம். தேசிங்கைப் பற்றிப் பெருமாமாட்டுக்காரன் பாட்டே நாடு முழுவதும் நிலவுவது. சிறந்த நட்புக்கிடமாய் இருந்தான் என்பது. இது அதற்கு எதிரானது, (இரண்டாவது கதை.)

பாண்டியன்பரிசில் போல உயர்ந்த தமிழ்க்கவியோவியங்கள் இதனில் மிகுதியில்லை. ஆனால் கதைக்கேற்ப எளிய பாடல்கள்; தெம்மாங்குகள் (தென்-பாங்காம் இது) விருத்தங்கள். கவியுணர்ச்சி இதில் ஏற்றம் கண்டுள்ளன.

சுப்பம்மா பிள்ளையில்லாதவள். ஆதலால் எம் மனிதனையும் ஈன்ற பிள்ளையாய்க் கருதுவாளாம். கணவனை இழந்தோரும் அக் காதலை அன்பாக உலக மக்கட்கெல்லாம் உதவலாம். மணிமேகலை வாழ்க்கை காட்டுவததுவே. கணவனை இழந்தோர் விருப்பமிருந்தால் மறுமணம் புரிந்து கொள்ளலாம். குழந்தை பெற்றோர்க்குப் பெரிதும் மறுமண ஆசை வருதலில்லை. அவர்கள் உலகப் பணி செய்யலாம். விதவை பற்றிய இவர் கருத்தைப் பின்பு ஆராய்கிறோம்.

தனித்திருந்த சுப்பம்மாவை சுதர்சன் நெருங்கியது முதிரும்வரைக் காத்திருந்து பழமுதிர்ந்ததும் அதனை நெருங்கியது போன்றதாம். கானத்தில் (சகுந்தலை போல்) ஏன் கடுந்துன்பம் அடைகிறாய் என்றாளும்.

**நம் குடிக்கு நாம்தலைமை கொள்வோம்—கெட்ட**
**நாய்ப் பிழைப்பில் ஆயிரம் வந்தாலும்**
**பங்கமென்று நாமும் அறி வோமே.**

சிப்பாய் வேலை வேண்டாம் பிறரைச் சுற்றித் திரிவது, இருக்கும் எளிய பிழைப்பே போதும் என்கிறாள் பெண்.

தொழுதுண்டு பின் செல்லும் வாழ்வை வெறுத்தது தமிழகம்! இப்போது அரசியல் பதவிகட்குச் சண்டைபோட வேண்டிய நிலை முன்னைய கொள்கையால் வந்தகேடோ காரணமோ, ஆராயவேண்டும்.

திம்மன் விருந்துக்குச் சமைக்கச் சொல்லும் கறி வகைகள் பெண்கட்குத் தெரியாதுபோலும்! ஆண்களும் நன்கு அட்டில் தொழில் பழகவேண்டும் என வற்புறுத்துகிறார் வேறிடங்களில்.

இக் காவியத்திற்கே சுதர்சன் சில பேச்சே ஓர் தனிக் கலை. அரசாங்க சேவகத்தில் ஆயிரம் பல சேர்த்தேன். எனக்குப் பிள்ளை இல்லை, யாரோ எடுத்துப் போகப் போவதை நீங்கள் எடுத்துக்கொள்ளுங்கள். இப்போ தில்லா விடினும் இனி உங்கட்குப் பிள்ளை பிறக்கலாம் என் பிள்ளை வேறு உங்கள் பிள்ளை வேறா? எப்படிப் பேச்சுத் திறமை!

தனித்த பெண்ணிடம் காமுகன் ஒருவன் எப்படிக் கதை வளர்ப்பான் என்பதை இதனினும் எப்படித்தான் வர்ணிப்பது! "கன்றுக்கு வைக்கோல் கொணர்ந்தாள் சுப்பம்மா, இப்பக்கம் நஞ்சை விலை என்ன என்றானும். அப்பக்கம் எப்படியோ அப்படித்தான், அவள் பதில். இன்று என்ன கறி? பேச்சில்லை. நீ சாது செய்கின்றாய் வேலையெல்லாம் என்றான். பசுவைக் கற பார்ப்போம் என்றான், முறத்தில் அரிசி எடுத்தாள், அரிசி பெரிசுதான் என்றான். பற்குச்சி பல்குத்தக் கேட்டான், கொடுத்தாள். இதை மச்சு வீடாய் ஏன் மாற்றவில்லை சீ சீ இது போதுமா என்றானும்." பொதுவாகவும், அவனது இழிந்த நிலையிலும் சிரிப்புத்தான் வருகிறது.

திம்மன் சிப்பாய்களுடன் செஞ்சி போக முடிவு செய்தது பொம்மை வரும் என்றதும் குழந்தைகள் பூரித்துப் போவது போல! உவமை வெகு நயமுடைத்து, முற்றுவமை. திம்மன்

*அப்பாவி குழந்தை. வரப்போகிற நன்மையோ பொம்மை தான்!*

**வீட்டை விட்டுத் திம்மன் வெளியே செல்வது காதலிக்கு
கூட்டை விட்டுஉயிர் வேறுகூடு செல்வதா கும்குடம்பை
தனித்தொழியப் புட் பறந்தன்றே போன்றதோ!**

*தெம்மாங்கு, சிந்துப்பாடல்கள் இக்காவியத்தே சிறக்கின்றன. கதை ஏழைவாழ்வு பற்றியதாலே பாடலும் எளியோர்க் குரியதானது. கவிதை பொருட்கேற்பவே கவிக் குரிய நடையும் அமைவதுண்மை. அசோகவனத்தில் இராவணன் சீதையை அணுகிக் கெஞ்சிப் பின் அச்சுறுத்திச் செல்வதும் ஈங்குச் சுதர்சன்*

**செங்கையால் தொடு மறுத்தால்
செத்துப்போ வதுமேல் என்றான்**

*என்பதும் ஒரே கதையமைப்புக்கள். பக்கத்திருந்த தோழிப் பெண்களிடம் 'கண்ணகியென்னும் தமிழ்நாட்டுக் கண்ணே போன்ற பெண் கதை கேட்டிருப்பீர், அப் பண்பின்றி இவனுக்குப் பெண்களைக் கூட்டிவிடும் பண்பு ஏன் பிறந்தது என இடிக்கிறாள்.*

*கோடையிலே தனித்த திம்மன் தன் காதலியை நினைத்துக் கலங்குகிறான்.*

**'தோட்டமுண்டு வயலுமுண்டு போக வேண்டாம்
தொல்லைஎன்று சொன்னாளே கேட்டேனா நான்'**

*சில சமயங்களில் செயல்களில் பெண்களின் கருத்து, பின்னால் இவ்வாறிரங்கும் நிலைக்கு ஏற்பச் சிறந்ததாகிறது. பெண் வழிச் சேராவிடினும் 'அவர்களைக் காரியங்களில் கலந்து செய்தல் நலமே.'*

*கையைத் தொடாதேயடா, முத்தமிழ் நாட்டுக்கு 'மானம் பெரிதன்றி வானம் பெரிதில்லைகாண்' என்கிறாள். மானம்*

என்ற சொற்பொருள் பிறமொழியில் எச்சொல்லுக்கும் இல்லையாம். மானம் என்ற தலைப்பு குறளில் மேம்படத் திகழ்கிறது. நாய் குலைக்க நத்தம் பாழாமோ, நாட்டுப்புற உவமை பாட்டுப் புறத்தே பெருமையடைகின்றது. கயவன் காமப்பேச்சால் கற்புப் போய்விடுமா என்கிறான்.

'குத்திச் சாய்த்தனள் பெண் இந்நிலத்தில்'—பெண்களும் ஆணுக்குச் சமம் எனில் சண்டை போடுவதிலும் கூடத்தான் என நிலைநாட்டுகிறார்.

அன்று தொடங்கி இந்தத்-தமிழர் அன்புறு நாடு பெற்ற இன்னலெல்லாம், வடக்கர் இழைத்த இன்னல்கள் ஆயிர மாயிரம் ஆண்டாய்; வடவர் பண்பும் இப்போது வடவர் செல்வமும் செல்வாக்கும் தமிழகத்தைக் கெடுப்பதாய்க் கவிஞரின் கிளைத்துச் செழித்த கருத்து.

கடைசியில் கற்பைக் காக்க உயிரை ஊற்றுகிறாள் சுப்பம்மா.

**'நெடுவாழ்வில் பெரும்புகழைச் சாவில்நட் டாளாம்'**

உயிரோடிருக்கையில் ஏதோ சில புகழ் பெறுவர் பலர். அவர் இறந்ததும் அவை நில்லா நிலையா. புலவர்க்கு உயிர்க் காலத்தே புகழ் பரவாது இறந்தபின் என்றுமுள்ள புகழ் இருக்கும். நிலைக்கும் புகழ் இறந்தபிறகே ஏற்பட வேண்டும். இது அத்தகையது; சாவில் நட்டது அல்லது செத்துப் படைத்த புகழ்.

## காதலா கடமையா?

இது நல்ல காவியம். அமைப்புடையது. கதை காதலை உட்பொருளாக் கொண்டதே. பாண்டியன் பரிசில்போலக் கடைசியில் காதல் வென்று இன்பியலாக (Comedy) முடிகிறது.

ஆண் மகன் காதலைவிடக் கடமையே பெரிதாகக் கருதுகிறான். வினையே ஆடவர்க்குயிரே என்று குறுந் தொகை வரி இன்றளவும் உண்மைதான் போலும்! நெடு நல்வாடையிலும் தலைவன் பிரிந்து பாசறையிலுள்ளான். கூதிர் தலைவியை நலிவிக்கிறது. தலைவனும் நலிகிறான். எனினும் கடமையை விட்டு வரமுடியவில்லை. பாசறையில் தங்கியிருப்பதையே தலைமையறமாகக் கொள்கிறான்.

கொன்றைநாட்டை மாழைநாட்டரசன் அடக்கி ஆள் கிறான். மக்கள் மகிணன் தலைமையில் உரிமைக்காகத் துடிக்கின்றனர். ஓர்நாள் குறிப்பிட்டு அன்று உரிமை தருவதாக மாழை மன்னன் கொன்றைக்கு வருகிறான். கோழிநாட்டான் பகையை அடக்கத் தனக்கு உதவினால் உரிமையென உறுதி கூறுகிறான். அன்றிரவு கிள்ளையைக் (முன் அரசன் பேத்தி) காண்கிறான்; அவளை அடையச் செய்தாலே அரசுரிமையெனப் பிடிவாதம் செய்கிறான். மகிணன் அவள் காதலன்.

அவள் அண்ணன் வாட்பொறையும் தங்கவேலனும் (முன் அமைச்சன் பேரன்) மகிணனைக் கிள்ளையை மறக்கச் சொல்லி நாட்டு உரிமையை மீட்க வேண்டுகின்றனர். அன்பு அப்படி அடகுப்பொருளாகத் தெரியவில்லை. மாழை அரசன் இயல்புப்படி கொடுமை பல புரிகிறான்; பலர்க்கும் சிறை. கடைசியில் மகிணன் கிள்ளையைக் கொன்று நாட் டுரிமையை மீட்கத் திட்டமிட்டு அவளை வெட்ட இரகசிய மாய் வாள் ஓங்குகிறான், தேங்குகிறான். இதனை மாழை அரசன் பார்த்து மனமிரங்கி அவர்கள் காதலுக்கும் நாட்டுக்கும் விடுதலையளிக்கிறான்.

புரட்சிக் கவியும் அரசன் மகளை மணந்து நாட்டையும் பெறுகிறான். சாதி செத்துக் காதல்மணம் உயர்கிறது. இக் கதையின் முடிவெல்லாம் பழம் பாணியைத் தழுவியே நிற் கின்றன. ஆண்மகனின் உரிமையெல்லையை கதை முடிவு

நிகழ்ச்சி கொண்டு ஆராய வேண்டுகிறது. மேற்பொறுப்பில் இருப்போர் கீழிருப்போரிடம் எதிர்பார்க்கும் ஏமாளித்தனமும் கீழவர் அடையும் கெடுதல்களும் நன்கு எடுத்துக் காட்டப்படுகின்றன.

பல்சான்றீரே என அழைத்துப் பேசும் புறநானூறு. இங்குத் தோழமை உள்ளீர் என அழைத்து உரிமையின் இயல்பைக் கூறுகிறான் மகிணன்.

**'தருவதோர் பொருளோ உரிமை, அது**
**வெற்றி நிலத்தில் விளைவதாகும்.'**

நாட்டுக்கும் சமூகத்திற்கும் பொருளாதாரத்திற்கும் உரிமை வந்தாலும் 'தனி மனிதன் ஒவ்வொரு நாளும் தன்மேல் தலைவனிடம் உரிமையுடன் வாழமுடியும் என்பதில்லை. அவன் தன் சொந்தத் திறமையினாற்றான் உரிமையைக் காத்துக்கொள்ள முடியும். சுவை ஒவ்வொருவன் நாக்கும் நன்றாயிருப்பதைப் பொறுத்தது. விருந்தில் பலர்க்கும், பக்கத்திருப்பவனுக்குச் சுவைப்பது இவனுக்குச் சுவைக்காமல் இருக்கலாம். போரின் மூலம் உரிமை வேண்டுவோர்க்கு அதனை வைத்துக் காக்கத் திறமையிருக்கிறதா என அறிந்து வருகிறது போலும்!

விடுதலை வழங்குவதாக வள்ளுவன் முரசறைகிறான். அம்மகிழ்ச்சியை வருணிக்கிறார்: மரத்தில் ஏறிக் குதித்தானும் ஒருவன், கால்வலி தெரியாமல் சிரித்தானும். பல்லிலாக் கிழவி உரலில் பாக்கிடிக்கிறாள், விடுதலைக் குரல் கேட்டதும் விறுவிறு என்று இடிபடுகிறதாம் உரல். எல்லாம் முடிந்து எனக்கென்ன எப்படிப்போனால் என்னும், கிழவிக்கும் உரிமை உணர்ச்சியையும் நன்மையையும் தரவேண்டுமாம். உரிமை உயர்ந்தோர், மாளிகை ஆகிய விடங்களிலேயே ஒடுங்கிக் கிடக்காமல் சிற்றூரில் சிறு மூலையில் கிடக்கும் கிழவி வரைச் செல்லவேண்டும் என்பதாம். சூதில் வெற்றி

கண்டதும் பாஞ்சாலி சபதத்தில் சகுனியைத் துரியோத ஞதியர் தூக்கிக் கொண்டாடுமிடத்தை இணைத்துப் பார்க்க லாம். உரிமை ஒரு பணத்துக் கொருகலம் அரிசி தரவேண்டு மாம். ஒரு நூற்ருண்டிற்குப் பின்னும் இதனை எண்ண முடியுமா? ஒரு பத்து ருபாய்க்குக் கலம் கிடைக்கும் காலம் வந்தாற்போதும் என்கின்றனர்.

தலைவன் (மகிணன்) இயற்கைப் புணர்ச்சியில் வந்து செல்வது கடைசியில் மணத்தில் முடியுமா என்ற ஐயம் தோழிக்குண்டாகிறது.

**மோப்பதும் பார்ப்பதும் முடுகலும் குட்டியைப் பூனை,**
**காப்பதற்கே யல்லவா,**

என்கிருள் தலைவி. சங்கநூல் தரமுடைய உவமை; உயர்ந்தது.

**இந்நாட்டில் பிறரால் இறக்கு மதிபெற்ற**
**சாதி நினைப்பிலும் தங்கா தகன்றது**

கி. பி. 3-ம் நூற்ருண்டு வரைப்பட்ட நற்றிணை, குறுந் தொகை, அகப் புற நானூறுகளில் சாதிப் பிரிவில்லை. ஐந் திணைப் பாடல்களில் தலைவன் தலைவியிடம் சாதிக்கு ஆதா ரமேயில்லை. ஐந்திணை மக்கட்பிரிவு; ஐந்து சாதிதாம் இருந்தன. தேவாரத்தில் சாதிக்குறிப்பு வருகிறது. எனவே கி. பி. 4—6 நூற்ருண்டுகளில் களப்பிரர் காலத்தே சாதி பரவியிருக்கவேண்டும். இலக்கியத்தில் அகத்தியர் இப் போது காண்கிருர். வேதக் கோட்பாடு இப்போது நன்கு விரிவடைந்திருக்கவேண்டும்.

கிள்ளை நீராடுகிருள். மாடிமீதிருந்து மாழை மன்னன் அவளை நோக்கினுன். உவமை வருகிறது; கொடுத்ததை வாங்காக் கொடையாளர் போல. செய்யாமற் செய்த, பயன் தூக்கார் செய்த, காலத்தாற் செய்த கொடைகளெல்லாம் தமிழில்தானே கருதப்படுகின்றன.

பல்லார் கூடியே ஆளவேண்டுமென்ற எண்ணம் எப்போது தோன்றிற்று? ஓர் உளம் சீருளந்தான் எனினும் தீயுளம் ஆகும் என மக்கள் ஐயப்பட்டாரே, அன்றுதானும். தீமையை நினையாது நல்லதை நெகிழ்க்காது எங்கள் ஏழை உழவு வாழ்க்கை என்கிறான் மகிணன்.

சூல் கண்டாலும் கதிரில் பால் காணுதை காலேஅரைக் கால் காணியில் வித்தி அறுத்து எளியார்க் கீந்து எஞ்சிய நெல்லை தான், தளர்மனைவி, யான் ஆய எல்லோரையும் காக்குமவன் என் தந்தை. என் மனம் கிள்ளையிடம் போயிற் றென்றான்.

புறநானூற்றில் ஒரு புலவரைப் பகைவர்க்கொற்றர் என அரசன் ஐயப்படுகிறான். அப்போது புலவர் வாழ்வு இன்னதெனப் புகலுகிறார் அவர். 'கொடிய வழிகளையெலாம் கடந்து செம்மைநாளவை அண்ணாந்து சென்று பரிசிற்கு வருந்தும் இவ்வாழ்க்கை தாங்காதுண்டு ஓம்பாது வீசிச் செல்லலன்றி பிறர்க்குத் தீதறிந்தன்றோ இன்றே' என்கிறார், ஒப்பிடலாம்.

**'முன் ஒருவன்பால் முழுதும் சென்று,**
**பின் ஒருவன்பால் பெயர்வ தென்பதை**
**ஒப்பார் தமிழர்.'**

மகிணனிடம் சென்ற மனம் மன்னனிடம் மாறுதாம். ஆனால் கவிஞர் வேறோரிடத்தில் (குடும்ப விளக்கில்) பெண்ணுரிமை: மணந்தபின் அவன் பிடிக்கவில்லையென்றால் மணவிலக்குக்கு இடமிருக்கவேண்டும் எனவும் பிறரைப் பின் மணக்கலாமெனவும் கூறுகிறார். அது பிறரிடம் மனம் சென்றதாகத் தானே ஆகும்? ஆராயவேண்டும்!

மன்னனை மணந்துகொண்டால் மக்கள் விடுதலையடைவார் என்கிறான் தங்கவேல்.

**'தங்கவேல் என்றொரு தமிழனைக் காண்கிலேன்**
**இங்கொரு கோழையை யான்காண் கின்றேன்'**

என்கிறாள்.

*சபையில் பாண்டவர் நிலையைப் பார்த்துப் பாஞ்சாலி தன் பரிதவிக்கும் நிலையை நீக்கா துட்கார்ந்திருக்கும் அவர்கள்*

**'நெட்டை மரங்களென நின்று புலம்பினர்**
**பெட்டைப் புலம்பல் பிறர்க்குத் துணையாமோ'**

*என இவ்வாறு தான் கூறுகிருள். ஒருவற் குரியவளை மற்றவன் விரும்புவதை எதிர்க்காதவர்களை! இது பாரதி பாஞ்சாலி சபதம்.*

**இகழ்ந்திடும் எதிரியும் இருகை ஏந்திப்**
**புகழ்ந்திடப் பெற்ற மகிணன்.**

*இன்னுமையே இன்பம் எனக் கொளின் ஒன்ருரும் விழையுஞ் சிறப்பு ஆகுமென்ருர் வள்ளுவர். அவளுடன் அவன் இளமரத்தில் கொடி பிணைந்தவாறு திகழ்ந்தான்; மாறிப் புக்கிதயமெய்தினரா? இத் தெவிட்டாக் கதையைப் புகழ்ந்தால் புகழே புகழ் பெறுமாம். அழகெனும் அழகு மோர்-சீதையை அடைந்து-அழகு பெற்றதாம்.*

*'ஆம் அவளுயிரே அகற்றத்தக்கது, தீமை போகும் திருநாடு வாழும்' என முடிவுக்கு வருகிருன் மகிணன். புரட்சிக் கவியில் கூறுவதுபோல மடிந்தால் இருவரு மல்லவோ மடியவேண்டும்! அவளை மடிக்க இவனுக்கென்ன உரிமை! கதையமைப்பில் இங்குக் களங்கம் வருகிறது! அவளை மடித்தால் காதலுந்தானே பாழ்படுகிறது! அதுவும் கோழைத்தனமே. காதலுக்கும் வெற்றி, உரிமையும் கிடைத்தது என இரண்டுக்கும் வழிதேடி இக் கட்டத்தை அமைப்பதே சரி. இல்லையாஞல் பாஞ்சாலியை வைத் தாடியதும், சரியேயென்று ஆகிறது.*

*இரண்டிடத்திலும் அன்பு காப்பாற்றப்பட வேண்டும், காப்பாற்றப்படும் என்ற நம்பிக்கை இருக்கிறது. இங்கு*

அரசன் அல்லது அறமே காத்ததாற்முன் ஆயிற்று! அவளை வெட்டியேயிருந்தால்! (கிள்ளைக் கொலையை அரசன் தடுத்து விடுகிருன்).

எனவே மனிதனுல் முடியாமல் மீறி இத்தகைய வாழ்க்கை நிகழ்ச்சிகள் ஏற்படவே செய்கின்றன. அப்போது அறம் அல்லது ஆண்டவனை நம்பிப் போக்குக்கு இடமளித்துவிடுகின்றனர். உலகர் என ஒப்புக்கொள்ள வேண்டுவதே! அறமோ ஆண்டவனே அவ்விடங்களில் கைவிடவில்லை எனக் காட்டவே கவிஞர் இன்றுவரை முயன்று வருகின்றனர் எனவும் தெரிகிறது.

அஞ்சாது அவள் வாளுக்கு வளைந்து காட்டியது தன் னலத்துக்கே எந்நிலைமைகளும், என்னும் இத்தரையைக் காணவும் நாணுவாள்போலக் கண்மூடிக்கொண்டு குனிந் தாளாம். 'நில்லு கண்ணப்பா' என நீலகண்டன் கைகள் பின்புறம் வந்து தடுத்ததுபோல அரசனின் கைகள் வாளைப் பிடித்து விடுக அன்னையே விடுக வாளை என்ருனும். எனவே அறத்தில் அருத பற்றுதலை உண்டாக்குகிறது இக் காவியம். நானில்லை, விடுதலை உள்ளமே விடுதலை அளித்தது என்ருனும் வேந்தன். யார் உயிரையும் விடத் தயாரோ அவர்க்கே விடுதலை உறுதி என்பது கருத்து. முதலிலும் மொழியப்பட்டது இக்கருத்து.

'இல்லை என்பதே இராதினி ஒவ்வொருவர்க்கும், ஒரு வீடு, ஒரு நிலம் ஒரு தொழில் ஓர் ஏர் உழவு மாடுகள்! இது கடைசியில் காவியத்தில் நாட்டப்படும் நாட்டின் அரசமைப்பு.

## கடல்மேற் குமிழி.

முன் காவியமாதிரியே இதுவும். இவர் காவியங்களெல்லாம் சாதியொழிப்பு, பொதுவுடமை, குடியரசு என்னும் குறிக்கோள்களைக் கொண்டனவே. இக்கால அரசியல் தொழிலாளர் நிலைகள் இதனில் நன்கு எடுத்துக் காட்டப்படுகின்றன; தொழிலாளர் கிளர்ச்சி, வேலை நிறுத்தம் முதலியன. அரசன் மகன் ஏழைப்பெண்ணையும் தாழ்ந்த வகுப்பினன் எனப்படுவோன் அரசகுமாரியையும் மணக்கின்றனர்.

திறல்நாட்டரசன் மகன் வையத்திறல் என்பான் பூக்காரி மகளை மணக்க விரும்புகிறான். சொந்த உறவில் மணந்து கொள்ளும்படிப் பெற்றோர் விழைகின்றனர். மற்றும் மன்னன் கொழுந்தி பொன்னியை மன்னன் தம்பியெனப்படும் செம்மறித்திறல் மணக்க விரும்புகிறான். அவன் தம்பியல்லன், தாய் புலைச்சி தந்தை அரசன் ஆகிய பிறவிக் கலப்படம் என அதனையும் மறுக்கிறான் அரசன். கடைசியில் இவ்விரு காதல் மணங்களும் நிறைவேறுகின்றன. இடையில் எத்தனையோ நிகழ்ச்சிகள்.

இக்கால நிலையை எடுத்துக் காட்டுவதில் இஃது ஈடற்ற காவியம். ஆளப் பிறந்தவரும் மேலானவரும் கடல்மேற் குமிழிகளாம். மாளாப் பெருங்கடல் மக்களாம்.

சரிநிகர் மக்கள் யாம் என்ற சிறப்புநிலை வரும்வரைக் கறுப்புடை பூண்கிறான் செம்மறித்திறல். இது திராவிடக் கட்சிக் குறிப்பு.

**தோகையினை மட்டாக நோக்கினால் தான் குனிந்து**
**சாகுமட்டும் நான் மறவாப் புன்னகையைச் சாய்த்திடுவாள்**

அடுங்காலை உள்ளினும் உள்ளஞ்சுடும் அன்பின்மையைக் காட்டுகிறார் வள்ளுவர். இது சாவுவரை இனிக்கும் அன்பு, தானோக்கி மெல்ல நகும் தன்மை இது. இவ்வரி அமரத் தன்மையுடையது. கருத்து பழையதே, ஆனால் சொல்லு முறை புதிது.

அரசன் விருந்திடுகிறான் அனைவரும் வருகின்றனர். ஆளவந்தார் அனைவரும் பத்தாயிரம் பேர் புத்தம்புதுக் கறிகளுடன் மனம் பூரிக்க உண்டனர்.

ஏழைப் பணியாளர் ஒருபுறம் ஏங்கிக் கிடந்தார்கள். கூழைக் கரைத்தவுடன் ஒருபுறம் கூப்பிடப்பட்டார்கள். நெய்ச்சோற்றைப் படைத்துத் தருவோர் தொழிலாளர். ஆனால் செல்வர் அதையுண்ணும் அதே சமயத்தில் அவர்கட்குக் கிடைப்பது கூழ். இவ்விழிநிலை இங்கு அகற்றப் படுகின்றது.

வையத்திறல் மின்னொளியைத் தனியே காண, உடன் இருக்கும் கிழவற்கொரு வேலை வைத்தனுப்புகிறான். பழம் சில பறித்து வருமாறு அனுப்பிவிடுகிறான். தமிழச்சி கத்தியில் சுப்பம்மாவைத் தனிக்கவிடச், சுதர்சன் இதே சூழ்ச்சியைத்தான் செய்கிறான். காதலர் இக்கால முறைப் படி சந்திக்கின்றனர், மின்னொளி வையத்தில் எதிரே வருகிறாள், அமர்க என்கிறான்.

> **'சற்றே விலகித் தரையினிலே கையூன்றி**
> **மற்றுமிரு வாழைத் துடைகள் ஒருக்கணித்து**
> **மின்னொளியும் உட்கார்ந் தாள்'**

பண்டை இலக்கியங்களின் இயற்கைப் புணர்ச்சியில் இக் காட்சி இல்லை.

**' கூழ்குடித்தார் இவ்வூர்க் குடித்தனத்தார் எல்லோரும்**
**வாழ்வுக்கே வந்தவர்கள் வாய்ப்பாய் விழுங்கினரே'**

என்றாளாம் விருந்தைப்பற்றி அவனிடம். 'முகஞ்சுருங்கி இன்னல் உளங் கவர்ந்ததாம்' அவனுக்கு.

அண்மையில் பண்டித நேருவுடன் இந்திரா காந்தி ஓரிடத்தில் மலைவாசிகளுடன் உரையாடிக்கொண்டிருந்தார். மலைக்கிழவி ஒருத்தி, தங்கே! உன் ஆடைகள் உயர்ந்த நயமுடையனவே, எங்கள் உடையை ஏறிட்டுப் பார்த்தாயா என்றாளாம். தலைகுனிந்து கண்ணீர் விட்டாராம் இந்திரா காந்தி; செய்தியில் வந்தது.

திறல்நாட்டு மன்னன், 'பெருந்திருவை' த் தன் மகனுக்கு மணமுடிக்க விரும்புவதுபற்றிப் பெண்ணின் தந்தை பெருந் திறல் பகர்கிறான்.

'விக்குள் எடுக்கையில் தண்ணீர் உன் விண்ணப்பம்' இரு மன்னவர்க்கும் இருக்கும் உள்ளத்து இகல் இதனால் தீருமென எதிர்பார்க்கிறான் அவன். உவமை நயமிக் குடையது. குறுந்தொகையில் அடிக்கடி காணும் இயற்கை வாழ்க்கை யுவமை போன்றதிது. ஏழையர் அத்தனை பேர்க்கும் ஞாலத்தில் எந்நாள் அப்பண்பு கிடைக்கும் என ஏங்குகிறாள் அவள்.

பின் காதலனைப் போய்வரச் சொல்கிறாள்: பாம்பு கிடந்திடும் பாதை நன்று பார்த்துச் செல் என்பது ஆறு பார்த்துற்ற அச்சக்கிளவி அகப்பொருளில். புலித்திறலுக்கும் மக்கட் குரலுக்கும் வாக்குவாதம் நடக்கிறது. அரசன் கேட்பவும் அதற்கு மாறாகக் குரல் எதிர்வருவதும் திருவாசகத்தில் திருச்சாழல் பதிகத்தை நினைவூட்டுகிறது.

**மாந்தரில் நான்கு வகுப்புக்கள் என்பதுமில்லை**
**மன்னவனுகப் பிறந்தவன் என்பதும் இல்லை.**

*எதிர்ப்பு:*

**மாந்தரில் நான்கு வகுப்புக்கள் உண்டெனல் மெய்யே**
**மன்னவனுகப் பிறந்தவன் நானெனல் மெய்யே.**

*இந்நூலில் கவிஞர் பாவினத்தையெல்லாம், திறங்களை யெல்லாம் பிறக்க வெழுதுகிறுர். வெண்பா, கலிவெண்பா, இணைக்குறள் ஆசிரியம் முதலாம் பாக்கள் பண்ணிசைத் தோடுகின்றன.*

**மின்னிடையுந் தானசைய மேலாடை யும்பறக்க**
**அன்ன நடைபோடும் அழகுகண்டும்—**

*இது வெண்பா. பாவின் ஓசைநயம் தட்டுகின்றது. அச்சுப் பிழையோ அறியோம். 'அழகுண்டும்' என்றிருந்திருக்கலாம் மூலபாடம், அப்படியானல் ஓசை உயர்ந்ததாய்விடுகிறது.*

**பெரியநாட்டின் ஆணி வேரினிலே பெருநெற்றி வியர்வை**
**விட்டு வளர்த்திடுகின்ற நாட்டு மக்கள் [நீரை**

*உழுவார் உலத்தார்க்காணி. அங்கு வண்டியின் அச்சாணி. இரண்டும் 'அடிப்படை' என்ற கருத்துடையனவே.*

*மின்னெளியின் அண்ணன் ஏவலாளரை அரசுக்கெதி ராகத் தூண்டுகிறுன். வேலைநிறுத்தம் தொடங்குகிறது. பணிப்பெண்கள் பறந்தனர், காவலர் போயினர், பாவலர் எட்டியும் பாரோம் என்றனர், அடுக்களை ஆக்குநர் இல்லை.*

*பார்ப்பனர், அநீதி அரசுக்காதரவாளர் என அவர்கள் மேல் ஆத்திரத்தைக் கொட்டுகிறுர் கவி. இது கட்சிக் குறிப்பு. புல்லேந்துங் கையில் வாளேந்துவோம் என்றன ராம் பார்ப்பனர் ஓர்முறை. அரசியல் குறிப்பு.*

காதலா மணமா என்ற காவியத்தே காணும் அரசன் கொடுமையெல்லாம் இங்குப் புலித்திறல் செய்யக் காண்கிருேம். அங்குள்ள மக்களைவிட இங்கு மக்கள் பெரிதும் புரட்சி மனம் பெற்றவர்கள். எதிர்த்துக் கிளர்ச்சி செய்கின்றனர். அரசனை எதிர்த்து உங்கள்உறவுதான் ஊராளவேண்டுமா வேந்தன் சேய்தான் வேந்தாகவேண்டுமா என்கிருன், கேளுங்கள் கேளுங்கள் என்றனர் மக்கள். இக்காலக் (Hear Hear) குறிப்பு. கிழவன் 'பார்ப்பன வகுப்பும் பார்ப்பன நூற்களும் பொய்யே'. சாதி இல்லை என்பதுமூலம் கவிஞர் தனது கட்சிக் கொள்கையை இங்குத் தெளிவு படுத்துகிருர்.

குடியாட்சி வருகிறது, ஒவ்வொரு வீட்டுக்கும் அன்று அரச விருந்து. வீடுதோறும் அரிசி பருப்பு கொடுத்து அகமகிழ்ந் துண்ணச்செய்யும் பண்டைய நாட்டுப்புற வழக்கு வெளிப்படுகிறது. ஆளுக்கிரண்டு கத்தரிக்கா, செங்கையளவு சீரகச்சம்பா, பொன்னிறப் பருப்பு, புத்துருக்கு நெய், மிளகின் சாறு, ஆழாக்குத் தயிர், அடைகாய் அனைவரும் அடைகின்றனர். ஆனல் மின்னொளிக்கு ஒன்றதிகம் என்கிருன் வையத்திறல்; அது சின்னதோர் முத்தம். மகிழ்ச்சி நேரும்போதெல்லாம் காதலர் கலந்து மகிழ்வதியல்பு, இங்குக் காண்கிறது.

குடியரசு முழக்கம்: கலப்பு மணம் ஒன்றே நல்வழிக்குக் கைகாட்டி;

**உழையானை நோயாளி ஊர்திருடி என்போம்**
**ஒருகடவுள் உண்டென்போம் உருவணக்கம் ஒப்போம்**
**உள்ளபல சண்டையெல்லாம் ஒழியுமதம் ஒழிந்தால்.**

இங்குக் கவிஞரின் கடவுள் கொள்கை தெற்றெனத் தெரிகிறது. ஒரு கடவுளை அவர் ஒப்புகிருர். சமயத்தையும் உருவ வணக்கத்தையுந்தான் ஒப்பவில்லை. சமயம் என்பது

ஒரு இனத்திற்குரிய பிரிவு. வருங்கால உலகில் சமயப் பிரிவுதான் என்பதில்லை, தமிழினம் வங்காளி இனம் போன்ற மக்கள் பிரிவினரும் நிலைத்தலும் நல்ல பெயர் பெறுதலும் இல்லை.

## நல்லமுத்து கதை

கவிஞன் அனுபவத்திற்கும் வயதிற்கும் ஏற்பக் கவியும் அமைகிறதென்பதுண்மை. இக்கதையில் இவர் கருத்துக்கள் எளிதாக அழுத்தமாக அறிவிக்கப்படுகின்றன; இதற்கு அவரது அனுபவமே காரணம் என்பது நம் கருத்து. கவிஞர்க்கு ஆண்டு அறுபதுக்கு மேலாகிறது. அறிவு கனியத் தொடங்கிய ஆண்டெல்லை இது. இனி வரும் இவர் கவிகளெல்லாம் இன்பம் இன்னும் ஏறியதாக இருக்கும்.

நகைச்சுவை நிறைந்த நாடகமெனலாம் இதனை. இந்நாளில் திருமணம் எம்முறையில் கிராமத்தார் செய்கின்றனர், செய்கையில் என்ன எண்ணுகின்றனர் பேசுகின்றனர் என இணுக்கிணுக்காகச் சொல்லப்படுகின்றன. காதல் மணத்தையே விரும்பும் பையன் விரும்பியவளை மணந்து இந்தி எதிர்ப்பில் சேர்கிறான். கட்சிக் குறிப்பு இங்கு ஆணித்தரமாக இலக்கியத் திடம் பெறுகிறது.

புரோகிதர் சாதகம் பார்க்கும் கட்டமும் பெண்வீட்டார் பேச்சு நடத்து முறையுங் அப்பட்டமாக நேரில் நடப்பதுபோலுள்ளன. நிகழ்ச்சிகள் இயற்கையாக வருணிக்கப்படுகின்றன. கவிஞர் மனவியலும் உலகியலும் நன்குணர்ந்து பாடுபவர் என்பது இங்கு எடுப்படைகின்றது,

### ஏற்றப் பாட்டு

கவிஞன் மக்களெல்லார்க்கும் உரியவன். அவர்கள் வாழ்க்கைத் துறைகளையெல்லாம், வாழ்வில் பழகுவோரை

யெல்லாம் பற்றிப் பாடவேண்டும். கவிக்கு இன்னதுதான் பொருள் என்பதில்லை, உலகில் எதுவும் அவனுக்குப் பொருளே. குடுகுடுப்பாண்டி, இடியப்பக்காரன் எவரும் அவனுக்கு விலக்கில்லை.

ஏற்றப்பாட்டுப் பாடுகிருர் கவிஞர். தமிழ்நாட்டுக்கே ஏற்ற பாட்டு ஏற்றப்பாட்டு. இவர் கவிதைகளுள்ளேயே ஏற்றமுடைய பாட்டு அதுவேயென்பேன். கம்பனையே ஒருகை பார்த்த பாட்டு அப்பாட்டு. நாடகப் புலவனும் இசைப்புலவனும் காலத்தையும் தாளத்தையும் கணக்கிட்டுப் பாடவேண்டுதல்போல ஏற்றக்காரனும் காலத்தில் கண்ணைப் பாடவேண்டும். ஒரு சாலுக்கு ஒரு எண்ணிக்கை உயர்த்தவேண்டும். ஒண்ணேடே ஒன்று என்பது ஒரு சால் ஊற்றும் நேரத்தில் பாடி முடியவேண்டும். அதற்குள் இரண்டு சால் நீர் கவிழும்படியாகக்கூடாது.

இவரது ஏற்றப்பாட்டு கவியுணர்ச்சி மிக்கது. ஏற்றப் பாட்டுக்கு எதிர்ப்பாட்டில்லை என்பார்கள். இவர் பாட்டில் அது உண்மையென்றே உணரவிருக்கின்றது. கவியுடன் கருத்தும் விறுவிறுப்புடையது ஆதலாலே பாடல் பாடும் பெருமையுமுடையதாகிறது. ஏற்றப் பாட்டை நீர் இறைப்போர் விடியுமுன் பாடுகையில் பர்லாங்கு தூரத்தில் இருந்து கொண்டு கேட்கவேண்டும், அது இன்பம்!

**'தோகைமயில் ஆடும்–பூங்-தோட்டங்களில் எல்லாம்**
**வேகவைக்கும்கோடை–அதை-விருந்தளிக்கும் தென்றல்**
**வைச்சபுள்ளி மாருன்–அவன்–மாலைமாற்றப் போவான்**

இவன் சூரியன் - சிலேடை நயமிக்கது.

**கனியத்தமிழ் பாடு–பெண்ணே–கச்சேரிசெய் யாதே**
**சினிமாவினிற் சேர்ந்து–நீ–தீமையடை யாதே.**

என்ன கருத்தைத்தான் இங்கு உரைக்க வியலாது!

**தோளிலே மிடுக்காம்—அவர்**
**தொழுவதோ, வடக் காம்**

*வடநாட்டாரை நம்புகிறவரைப் பார்த்துரைப்பது இது!*

**விரிந்ததடி முல்லை—அடி—வீசியது தென்றல்**
**சரிந்ததடி பெண்ணே-மலர்—தங்கப்பொடி எங்கும்**
**ஆர்க்குதடி வண்டும்-பெண்ணே—அறுபதுடன் வாழி**
**எரிந்ததடிமேனி—பெண்ணே—இனிப்பொறுக்க மாட்டேன்**
**புரிந்தனை இந் நேரம்—அடி—பொல்லாத ஓட்டாரம்.**

*ஒட்டாரம் என்கையில் நாம் கிராமத்திற்கே ஏற்றத்தருகே இழுத்துச் செல்லப்படுகிறோம். ஓசையும் உணர்ச்சியும் பாடலில் பாய்ந்தோடுகின்றன.*

**நோக்கியது வையம்-பெண்ணே** (*கவிஞர்*)
**நூறுடனே வாழி**

*என்று நாமும் அவரை வாழ்த்தவேண்டியுள்ளது.*

## பொதுவுடமை

கவிஞன் காலக் கண்ணாடி. அவன், முன்னோரால் திருத்தப்படுகிறான். அவன் பிறகு நிகழ்காலத்தவரையும் எதிர்காலத்தவரையும் தான் திருத்துகிறான். அவன் கால நிலைமையை அவன் ஒப்புக்கொளினும் கொள்ளாவிடினும் தன் கவிகளில் எதிரொலிக்கச் செய்யவேண்டும். பழையதையே பேசித் திரியும் கவிஞனைப் படிப்பதைவிட அப்பழையது பரவியிருந்த காலநூல்களையே படித்தல் நல்லது. பாரதிதாசன் புதுக்கவி, புரட்சிக்கவி. காவியத்திற்றான் கவிஞன் தன் சொந்த மனக்கோள்களையெல்லாம் விடாமல் தெளிவுபடுத்துகிறான்.

முன்பு காவியங்களை ஆராய்ந்தபோது கவிஞரது பொருட்கொள்கைகள் பல காவியங்களின் முடிவில் முடியாக விளங்கியமை கண்டோம். காவியமுடிவில் ஏற்படும் அரசியல் அமைப்பெல்லாம் பொதுவுடமை அடிப்படையில் அமைகின்றன.

'வீரத்தாய்' நாடகமுடிவில் சுதர்மன் எல்லார்க்கும் உடமையெலாம் எல்லார்க்கும் எல்லா உரிமைகளும் ஆகுகவே' என முழங்குகிறான். புரட்சிக் கவியில் 'செல்வமெலாம் உரிமையெலாம் நாட்டாருக்கே' என்ற செய்தி

எல்லோர் செவியிலும் போயேறுகிறது. பல குறிக்கோள்கள் இருப்பினும் காவியம் ஒவ்வொன்றுக்கும் ஒப்பற்ற குறிக்கோள் ஒன்று இருக்கும். இவர் காவியம் பலவற்றினும் 'பொதுவுடமை' அவ்வொரு குறிக்கோளாக இருக்கிறது. உலகமுழுவதும் இக்கொள்கை பரவியும் மனதுள்ளேனும் போற்றப்பட்டும் வரும் இக்காலத்தே இத்தகைய ஏற்றமுடைய கோட்பாடுகளைக் கவிஞர் எடுத்துப் பேசுவதால், தானும் ஏற்றமுறுகிறார்.

எவ்வுயிரையும் பராபரன்றன் சன்னதியாகக் கண்டோர் நம் சான்றோர்கள். அதுவே இன்று அரசியலில் பொதுவுடமை என்ற பெயரைப் பெற்றுள்ள தெனலாம். தன்னை மறந்து பிறர்க்கென நினைக்கையிலேயே பொதுவுடமை மலருகிறது; பிறர்க்கென முயலுநர் எனப் புறநானூறு பேசுவது இவரையே. எல்லோரும் ஒன்று, யாவரும் சமம் எனக் கண்டுவிட்ட இடமே பொதுவுடமை பிறக்குமிடம். ஒற்றுமையை உணர்த்தாமல் வேற்றுமையை விதைப்பவன் உலகத் தொண்டனாகமாட்டான். 'பீலிபெய் சாகாடும்' என்ற குறளில் வள்ளுவர் ஒற்றுமையின் வலிமையை உணர்த்துகிறார்.

**'தொல்லுலக மக்களெல்லாம் ஒன்றேயென்னும்**
**தூயவுள்ளம் அன்புள்ளம் பெரிய உள்ளம்'**

இலங்கும் உயிர் உடலனைத்தும் ஈசன் கோயிலென்றே நடமாடும் கோயில் நம்பர்களைப் பூசித்தனர் நம்மவர்.

தன் பெண்டு பிள்ளைகளைக் காப்பதுவே கடமையாக் கொண்டோன் கடுகு உள்ளம் படைத்தவன்; ஊர் அளவில் உழைப்பவன் துவரை உள்ளத்தான். தன் நாட்டுரிமையால் பிறரைத் துன்புறுத்துதல் தென்னையுள்ளம் என உள்ளத்தை வகைப்படுத்தி, உலகில் உள்ளதை வகைப்படுத்திக் கடைசியிலேயே மேற்கூறிய தூயவுள்ளத்தைக் காட்டினார்; இது

கவியுள்ளம். எல்லாவுள்ளத்திலும் கவிந்து காணும் உள்ளம் அது.

**'நல்லவர் நாட்டினை வல்லவர் தாழ்த்திடும்**
**நச்சு மனப்பான்மை**
**தொல்புவி மேல்விழும் பேரிடியாம்'**

செல்வங்கள் யார்க்கும் என்றே சொல்லிப் பேரிகை திக்கில் முழக்கிடுவாய். தன் நாட்டில் மட்டுமின்றித் திக்கி லெல்லாம் ஏன் முழக்கவேண்டும். திக்கெல்லாம் திருந்திஞற்ருன் தன் நாடும் திருந்தும். அதஞற்ருன் பாரதி தனி யொருவனுக் குணவில்லையெனில் சகத்தினையே அழிக்கலாம் என்ருர்; அவர் பரம்பரையல்லவா?

'கூடித் தொழில் செய்யும் கொள்கையினுல் (Co-operative Farming & Industries) பீடுற்ருர் மேற்குப் பிறநாட்டார்.

உழைக்காத வஞ்சகர்தம்மையும், அழியாத மூடத் தனத்தை ஏட்டில் அழகாய் வரைந்திடும் பழிகாரர் தம்மையும்

**'முதலெழுத் தோதினும் மதியிருட் டாகும்'**

தீமை செய்வோர் எல்லோர்க்கும் இவ்வரியைச் சொல்ல லாம். இத்தகையவர்களின் முதலெழுத்தோதினும் நாட்டின் மதிவிளக்காகும். கதையொன்றிஞல் கருத்தைப் பதிவிக் கிருர். இறக்குநிலையில் இழுத்துப் பறித்துக்கொண்டிருந்த மனிதன் பெண்டுபிள்ளைகளை நினைத்து உயிர் பிரியாதிருந் தான். என்னென்னவோ சொல்லி அவனைத் தேற்றினர் அருகிலிருந்தோர். அமைதியைக் காணேம். 'மக்கட்குப் புவிப்பொருள்கள் பொதுவென்று சர்க்கார் பதிந்துவிட்டார்' இனிக் கவலை வேண்டாம் என்றனர். எழுந்து உட்கார்ந் தான் இறக்கும் மனிதன். 'இனி யானேதும் இறப்பஞ்சேன், இறப்பெனக்கு இனி இனிக்கும் கற்கண்டு' என்ருனும்.

*புதியதோர் உலகு செய்வோம் அங்குப் பொதுவுடைமைக் கொள்கைகள் எங்கள் உயிரெனக் காப்போம் என்கிறார். 'உணர்வெனும் கனலிடை அயர்வினை எரிக்கிறார்' கவிஞர். மானிடம் போற்ற மறுக்கும் ஒரு மானிடம் தன்னைத் தன் உயிரும் வெறுக்கும். ஏன், இதே உயிர்தானே எதிரிலும் இருப்பது! பெண்டாட்டியை மதிப்பவர் பலர், பிள்ளை பெற்று அவள் தாயாய்விட்டால் மதிப்பதில்லை அதுபோல. அவளேதான் பிள்ளை பெற்றபின் தாய் என்ற வேறுபெயர் பெற்றாள்! மனிதர் நோக மனிதர் பார்க்கும் வழக்கினி வேண்டாமாம்.*

**காப்பார் கடவுள் உமைக் கட்டையில்நீர் போகுமட்டும்**
**வேர்ப்பீர் உழைப்பீர் எனவுரைக்கும் வீணருக்கும்**

**'ஓடப்ப ராயிருக்கும் ஏழை யப்பர்**
**உதையப்ப ராகிவிட்டால் ஓர்நொ டிக்குள்**
**ஓடப்பர் உயரப்பர் எல்லாம் மாறி**
**ஒப்பப்பர் ஆய்விடுவார்'**

*பாரதிதாசனை அறியாதாரும் பாடும் பாடல் இது. ரஷியா, பிரான்சு, இங்கிலாந்து எங்கும் நடந்தவை உதையப்பர் புரட்சியே. ஆனால் உதையப்பர் இல்லாமலே அமைதியாய்ச் சட்ட 'சபையப்பர்' இப்புரட்சியை நடத்துகிறார். இது இந்திய காந்தி கூறிய வள்ளுவர் புரட்சி!*

**ஏறு விடாமல் ஏறு மேன்மேல்**
**பாரடா உன்னுடன் பிறந்தபட் டாளம்**

*அறிவை விரிவுசெய், அகண்டமாக்கு, விசாலப் பார்வையால் விழுங்கு மக்களை!*

**அணைத்துகொள் உன்னைச் சங்கம மாக்கு**
**மானுடச் சமுத்திரம் நானென்று கூவு?**

*பாரதியின் உணர்ச்சிப் பெருக்கும் வரிகளும் அப்படியே இங்கு வருகின்றன. நெல்லையப்பர்க் கெழுதிய பாரதி கடி*

தத்தின் உணர்ச்சி இங்குண்டாகிறது. 'பருகு வன்ன அருகா நோக்கம்' இங்கு அழகு பெறுகிறது.

மார்க்ஸ் வழிவந்த புரட்சி இரத்தப்புரட்சி யாதலாலே அதனை இன்றுவரை உலகில் பெரிதும் தொழிலாளரைக் கொண்டே அடைய முடிந்தது. எனவே இவர் தொழிலா ளரைப்பற்றிப் பெரிதும் இரங்குகிறார். ஆனால் நாம் கண்டது இரத்தப்புரட்சியன்று; எனவேதான் தொழிலாளரை யின்றியே சட்டசபையாலேயே செய்துவிட்டோம்.

பொதுவுடமை யென்பது பொருளைமட்டும் பொது வாக் குவதன்று. இதுவரை நடந்ததுவே. ஆனால் அறிவையும் அனைவர்க்கும் பொதுவாக்குவதே உண்மையான பொது வுடமை; அதுவே மனிதர்க்குரிய மனிதப் பொதுவுடமை. அந்நிலை வரும்போதே பொருள் பொதுவுடமையும் புரியும், நிலைக்கும். பொருளைக் கொடுத்துவிடலாம். அதனைப் பெறு வோரும் அதனை ஏற்கமுடியும், பொறுக்க முடியும் ஆனால் அறிவைப் 'பொது' என்று பறை அறைந்து விடலாம். ஆனால் உடனே அவர்கள் அதனை அடைந்து விட்டார் என்பதில்லை. அடைந்துவிடவு முடியாது, அப்படி எதிர்பார்க்கவு முடியாது.

அனைவரையும் நாட்டில் ஒரே தரமான படிப்பும் அறிவு முடையோராக ஆக்கிவிட முடியுமா? எம். ஏ; கவிஞன்; வழக்கறிஞன்; சட்டசபை யுறுப்பினன்; அமைச்சன் இவர் களின் அறிவை இன்னும் இருபது ஆண்டுகளில் எல்லோர்க் கும் அளித்துவிட்டோம், ஏற்படுத்திவிடுவோம் என யாரா வது சொல்லமுடியுமா, சொன்னாலுந்தான் நடக்குமா! இது தலைமுறை பல, நூற்றாண்டு பல தாண்டினும் ஓரளவே நிறை வேறக்கூடியது. ஆனால் அறிவுப் பொதுவுடமை கண்டா லன்றி மனித இனத்தின் துன்பத்திற்கோர் முடிவில்லை!

இவர் காவியங்களில் உழைப்போர் நிலைபற்றிப் பல விடங்களில் உரைத்ததைக் கண்டோம்

**சிற்சிலர் வாழ்ந்திடப் பற்பலர் உழைத்துத்**
**தீர்களனும் இந்த லோகமே-உரு**
**அற்ருெழிந் தாலும்நன் ருகுமே,**

*என ஆத்திரப்படுகிருர். காண்பதெல்லாம் தொழிலாளி செய்வான், அவன் காணத்தகுந்தது வறுமையாம், அவன் பூணத்தகுந்தது பொறுமையாம் என அங்கலாய்க்கிருர்.*

**'உழைப்போர் உதிர்த்த வியர்வையின்**
**ஒவ்வொரு துளியிலும் கண்டேன்**
**இவ்வுல குழைப்பவர்க் குரியதென் பதையே'**

*இதைவிடக் கருத்தினை இனிமையும் உறுதியுமுற எப்படித் தான் எழுதமுடியும்? 'சொந்த வலிவுடையார் இன்ப வாழ்வுடையார் இந்த வார்த்தைக்கு மோசமில்லை'—இது டார்வின் சித்தாந்தம். வலியது உலகில் வாழத்தக்கது என் பது. இதனில் இன்றளவும் உண்மை இருப்பதாகவே கவி ஞர் எடுத்துக் காட்டுகிருர்.*

*சீர்த்திகொள் போகபூமியின் கீழிருக்கும் கடைகால் சீர்தொழிலாளர் உழைத்த உடம்பிற் சிதைந்த நரம்புகள் தோல். கடைக்காலுக்கு உடைந்த கல்லும் ஓடும்போல நரம்பும் தோலும்!*

# பெண்ணுரிமை

*பெண்களைப்பற்றிப் பாதி பாடியது தமிழகம். இதுவே அகத்தைப்பற்றிய ஆயிரக்கணக்கான பாடல்கள். சிவன் பாதியைப் பெண்ணுக்குக் கொடுத்தான் என்பதன் பொருளும் இதுவும் ஒன்றுதானே! இடப்பக்கத்தை அளித்திருக்கிருன் இறைவன்; அதாவது உயிர்த் துடிப்புள்ள இடம். இதனுல் பெண்கள், உலகில் ஆண்களின் உயிர் எனவும் உள்ளம் (அகம்) எனவும் உணரப்படும்.*

*உடலை மட்டுமின்றி உள்ளத்தையும் சேர்த்தே பெண் குழந்தைகளை உதவுகிருள். எனவே, அவள் உள்ளத்தே உரிமையிருந்தாற்ருனே பிறக்கும் குழந்தைகளின், அதுவழி உலகின் உரிமை உண்மையாகும்.*

**உவந்தொருவன் வாழ்க்கை சரியாய் நடத்த**
**உதவுமவள் பெரும்பாலும் மனைவி ஆவாள்**
**அவளாலே மணவாளன் ஒழுங்கு(சுத்தி)பெற்ருன்.**

*உலக அறிஞன் பெர்ஞர்ட்ஷா கூறுவதாகக் கவிஞர் கூறுவதிது. 'பெண்ணடிமை தீருமட்டும் பேசுந் திருநாட்டு மண்ணடிமை தீரல் முயற்கொம்பு' என்றவர்.*

**வண்மை உயர்வு மனிதர் நலமெல்லாம்**
**பெண்மையினால் உண்டென்று பேசவந்த பெண்ணழகே**
**நாய்என்று பெண்ணை நவில்வார்க்கும் இப்புவிக்குத்**
**தாய்என்று காட்ட தமிழர்க்கு வாய்த்தவளே.**

*இவர் காவியங்களிலெல்லாம் பெண்ணுரிமை பாதியிடத்தை அடைத்துக்கொண்டிருக்கிறது. காதல் மணம், வீரத்தாய், பெண்செய்யும்போர் இவை காவியங்களின் உட்பொருட்கள்.*

*காதல் மணம், இளமை மணம், விதவை மணம், பிறன் மனை விழையாமை இன்னும் மலடு இவைபற்றியெல்லாம் பாடுகிறார் இவர். கைம்மைத் துயரைத் தவிர்க்கக் கங்கணம் கட்டிக்கொண்டவர் கவிஞர். இவற்றுடன் புதுமைக் கருத்துக்களையெல்லாம் புகுத்துகிறார். மணவிலக்குக்கு இடம் தருகிறார். விதவை மணத்திற்கு இவர் விரிக்கும் சிறுகாதைகளும் காவியங்களும் உள்ளத்தைத் தொடுவன.*

## குடும்பக் கட்டுப்பாடு

*கருத்தரித்த பின் சிதைப்பதே பாவம். கரு தோன்றாமலே தடுத்துவிட்டால்! கதையாகக் கூறுகிறார் கவிஞர். நாலு குழந்தைகள் பிறந்தன. நாலையும் நினைத்து உழைத்தேன். அவளும் நாளும் தேய்ந்து உடல் முக்காலும் தேய்ந்தாள். உண்ணுவதை நானுண்ண மனம் வருவதில்லை. உண்மையிலே மனைவி பிள்ளைகளைக் காத்தாள். வரும்படியை நினைக்கையிலே உள்ளமெலாம் நோகும். வாராத நினைவெல்லாம் வந்து வந்து தோன்றும். அரும்பாடுபடினும் அத்தனைக்கும் கூலி தருவார் யார்?*

*இப்படி எண்ணிக்கொண்டே 'தெருத்திண்ணையில் படுத்துக்கொள்ளத் திட்டமிட்டேன்' ஒருநாள் பாயைப் போட்டதும் மெல்ல வந்து மனைவி தெருவில் பனி என்றாளாம். தெரிந்தது அவள் உள்ளம் தேவையில்லை வார்த்தை!*

தினம் படும்பாட்டிற்குச் சீ! காதல் ஒரு கேடா என முடித்து விட மனதில் நினைத்தாராம். வீட்டிற்குள் சென்றாராம். பத்து மாதத்தில் ஒரு கிழவி வந்து, முத்தாலம்மை யருளால் உன் மனைவி பிள்ளை பெற்றாள் என்றாளாம். நல்ல நகைக்குறிப்பு! சாதலுக்கோ, தவிப்பதற்கோ பிள்ளை எனத் தவிக்கிறார். சந்தான முறை நன்று தவிர்க்குமுறை தீதோ என்கிறார். 'காதலுக்கு வழி வைத்து கருப்பாதை சாத்தக் கதவொன்று கண்டறிவோம் இதிலென்ன குற்றம்!'

## பிறன்மனை நயப்பு

பிறன்மனை நயந்தவனைத் தமிழச்சியின் கத்தி குத்திக் கொல்லுகிறது. இதற்கென எழுதியதோ இக்காவியம் எனத் தோன்றுகிறது. வெளிப்பெண் ஒருத்தி (மண மானவள்)யிடம் விளையாட நினைத்தான் வம்பன் ஒருவன். ஒருகையில் உடைவாளும் இடதுகையில் ஓடிப்போ என்னு மொரு குறிப்புமாக நின்றாளாம். 'கொல்லவந்த வாளைக் குறை சொல்லவேண்டாம். கொடுவாள்போல் மற்றொருவன் உன் மனைவி மெல்லிடையில் நீ காணுக் காரணத்தால், விளை யாட நினைத்துவிட்டாய் ஊர்ப் பெண்கள்மேல், மனச்சான் றுக்குள் ஓடிப் பதுங்கிக்கொள்' என விரட்டுகிறார் கவிஞர். இவ்வுரிமை என்றும் சீறூர்ப் பெண்களிடம் சிறக்கக் காண்ப்தேயாகும்!

## கிழமணம்

90 வயதிற்கு மேலும் ஆண் கருவுண்டாக்குதற்காம் சக்தி உடையனும் எனக் காமநூலறிவு கூறும். இன்றும் மேனாட்டுத் தத்துவப் பேரறிஞரும் எண்பதுக்கு மேலும் மணக்கின்றனர். குறிஞ்சிக்கலி கடைசிப் பாட்டில் சிறு நகைச் செய்தி யொன்று கிழக்காதலைக் கூறுகிறது.

இங்கு இதுவரை பாராத மருமகனைப் பார்க்க மாமி போனாளாம். அவன் பெண்ணுடன் உறங்குமிடம் இரவில்

சிறிது திறந்திருந்ததாம். அதைச் சாத்தச் சென்ற மாமி மெல்ல உள்ளே தலையை நீட்டினாளாம். வாயின் கடையில் எச்சில் வழியக் குறட்டையுடன் கண்குழிந்து நரைத்த தலையுடன் நரம்பும் எலும்புமாய்ச் சொந்த மருகக்கிழவன் தூங்கினானும். இளமையும் எழிலும் ததும்பக் 'காதல் ததும்பக் கண்ணீர் ததும்பி' மகள் அருகே கிடந்தாளாம். காதல் ததும்பக் கண்ணீர் ததும்ப என்ற வரி கவின் ததும்புவதாகும். விழிப்பான் எனக் காதலும் தானும் கனலும் புழுவுமாய்க் காத்திருந்தாளாம். பின்பு வெடுக்கென் றெடுத்து சிமிழ் ஒன்றைப் பாலில் சாய்த்தாளாம். எதையோ எண்ணித் தேம்பி உட்கொளப் போனாள். ஓடித் தாய் பிடுங்கினாள்; பால் கொட்டிவிட்டது, அதனை ஒரு பூனை குடித்தது. அது ஓடி விழுந்து மடிந்தது.

> 'மண்ணாய்ப் போக மண்ணாய்ப் போக
> மனம்பொருந்தா மணம் மண்ணாய்ப் போக'

இவள் அடிமை மனம் உள்ளவள். உரிமையுடையவளானால் மணவிலக்குடன் மற்றொருவனை மணந்துகொள்ளக் கவிஞர் கருத்தில் இடந்தருகிறார். இருக்கும் நிலை, இருக்கவேண்டிய நிலையெனக் கவிஞன் இரண்டு நிலைகளை எடுத்துக் காட்டுவான்; இது இருக்கும் நிலை. கம்பன் கதையும் 'இருக்கும் நிலையே'; அவன் கவி பல, 'இருக்கவேண்டிய நிலை' பற்றியன.

## கைம்மை

கூண்டில் கிளி வளர்ப்பார் அதன் விருப்பறிந்து வேண்டியது தருவார். ஆனால் மாண்டவர் மாண்ட பின்னர் அவன் மனைவி உள்ளத்தை ஆண்டையர் காண்பதில்லையாம். அடிமைப் பெண் கதி இதுவாம். உவமைப் பொருத்தம் சிறிது குறைகிறது. வேறுவமையிருப்பின் நல்லதே. கூண்டுக் கிளியும் உரிமையற்றதே; வெளியே

பறப்பதற்கு மட்டுமன்று, தன் துணையுடன் கூடிக் குலாவு தற்கும். சங்க காலத்திருந்தே ஏனை பெண்கள் கணவனை இழந்தோர் கைம்மையே மேற்கொண்டனர்; மாதவி மறு மணம் செய்து கொள்ளவில்லை. பிள்ளை பெறாத பெண்கள் இளமையாக இருந்தால் மறுமணம் இன்றியமையாதாகும். பிள்ளை பெற்றால் அவர்கள்மேல் அன்பு பரவி அவள் தாயாகி விடுகிறாள். தாயன்பு என்பதே முதுமொழி. கன்றினைப் பசு காக்குமாறுபோல எருது காத்தலில்லை. குழந்தைகளைக் கொண்டு, கணவனை மணக்கவும், துறக்கவும் பெண்மனதால் முடியும். ஆனால் ஆண்களால் முடியாது என இன்றைய அகவியல் அறிஞரும் கூறுகின்றனர். இன்னொருவனுக்குத் தமியளாக முடிவதில்லை. எப்படியும் விருப்பமிருந்தால் இன்னொருவனை மணக்க விட்டுவிட வேண்டுவதே.

மற்றவர்கள் கணவன்-காதலை மாற்றி மணிமேகலை போல மக்களினத்தின்மேல் பாய்ச்சலாம். இளங்கைம் பெண்கள் அழகிய பெண்கள் நமக்கு அழகிய பழத்தோல் (ஆரஞ்சுத் தோல்). கோரிக்கையற்றுக் கிடக்குதண்ணே இங்கு வேரிற் பழுத்த பலா! இவ்வுவமை இன்பமும் இசைவும் நிறைந்தது, கேட்பாரற்றுக் கிடக்கிறது கைம்மை. வேர்ப்பலா இருக்கவேண்டிய இடத்தில் இல்லாதது. கொம்பைத் தழுவிக் கிடக்காமல் வேரில் அழகும் மங்கலமும் மறைந்து அகப்பட்டுக் கிடக்கிறது. என்றாலும் இனிமை மிக்கது!

காதற் குற்றவாளிகள் என்ற கதைக்கவியும் மாந் தோப்பில் மணமும் கவிஞர் குற்றமற்று மணக்கவைத்தவை. பாடற்பொருளும் இன்பம்; பாடப்பட்ட யாப்பும் சொல்லும் எல்லாம் இன்பம்.

சுந்தரம், சொர்ணம் இருவர். சொர்ணம் கைம்பெண். தோட்டத்து வழியே வந்து சுந்தரத்தின் தாயிடம் பேசிப் பொழுதுபோக்குவாள். ஒருநாள் தாய் கடைக்குப் போக,

சுந்தரம் தனித்துப் படித்திருந்தான். வந்த பெண்ணின் உள்ளம் அவனிடம் பாய்ந்தது. இருவரும் ஒன்றினர். தாய் திரும்பினவள் இதனைக் கண்டாள். கைம்பெண்ணுக்கு இது கூடுமோ என்றாள். ஏன் கூடாது என்கிறார் கவி. இந்த ஊமைகள் செய்ததில் தீமையுண்டோ என்கிறார். குற்றமறுத்திடக் காரணங்கள் கோடியிருக்கையில், கற்றவை யாவையும் உள்ளத்திலே வைத்துக், கண்ணில் பெருக்கினர் நீரருவி. ஆணழகை ஓடைக்குளிர் மலர்ப் பார்வையினால் அவள் உண்ணத்தலைப்படும் நேரத்திலே

**பாடம் படித்து நிமிர்ந்த விழிதனிற்**
**பட்டுத் தெரித்தது மானின் விழி**

என்ற அடிகள் இக்கட்டத்திற்கு ஏற்ற உணர்ச்சியை எழுப்புவன. ஒப்பற்றன.

**ஆடை திருத்திநின்றாள் அவள்தான்—இவன்**
**ஆயிரம் ஏடு திருப்புகின்றானும்.**

உணர்ச்சி வயப்பட்டவர் உள்ளமும் செயலும் வரிகளில் உருவெடுத்து மயக்குகின்றன. நல்ல வீணையும் நாதமும் ஆகிவிட்டார் என்கையிலும் அப்படித்தான்.

சாதலும் வாழ்தலும் அற்ற இடம், காணல் நினைத்தல் தவிர்த்திருந்தார் எனப் படிக்கும்போது ஏதோ தத்துவ உலகில் இருப்பதாய்த்தான் தெரிகிறது. 'காதல் உணர் வெனும் லோகத்திலே' என்கையிற்றான் காதற்பொருள் படிப்பது, என உணர்வு வருகிறது.

மாந்தோப்பில் மணத்தில் இன்பம் கொள்ளை கொள்ளை கொள்ளை போகின்றது. குளித்துக் கரையேறும் குமரியைக் (கைம்பெண்) கண்டான் குமரன். கொள்ளை யிட்டான் உள்ளத்தை. பின்தொடர்ந்து மாந்தோப்பில் இருவரும் காண்கின்றனர். இன்னல் கைம்பெண் நான் என்றாள்

இப்பொழுதே 'மணம்' இசைவா என்றான். சமூகத்தார் இதைப் பார்த்துச் சமூக வழக்கத்தை யெடுத்துரைக் கின்றனர். மீறி மணக்கின்றனர் மங்கையும் நம்பியும்.

தாமரை பூத்த குளத்தினிலே என்பது தனிவரி. நாடு முழுவதும் பேர்போனது இப்பாடல். முழுகிடும் கோமள வல்லியைக் கண்டுவிட்டான் குப்பன். கொள்ளை கொடுத் திட்டான் உள்ளத்தினை. உணர்ச்சியின் உயர்ந்த சிகரத்தை யெட்டுகின்றன வரிகள். முதலில் முகத்தாமரையைப் பார்த்தான். பின் கோமளவல்லியைக் கண்டான் என்ற குறிப்பில் கொடி (வல்லி) போன்ற அவள் துவளும் மேனியை யெல்லாம் கண்டான் என்பது குறிக்கப்படும். இன்றேல் உள்ளம் அவ்வளவு கொள்ளை போயிராது.

முகிலைக் கிழித்து வெளிக்கிளம்பும் ஒரு முழுமதி போல நனைந்திருக்கும் தன் துகிலினைப்பற்றித் துறைக்கு வந்தாள், இவன் சோர்ந்துவிட்டான் அந்தக் காமன் அம்பால், இதற்கு ரவிவர்மா படம் வரையவேண்டும். இவர் காதற் பாடல்கள் உணர்ச்சிக்குப் பரபரப்பை யூட்டுகின்றன எனப் பலர் குறை கூறுவது இத்தகைய இடங்களை எண்ணியே ஆகலாம். கலை உணர்ச்சிக்கு அமைதி தரவேண்டும், எழுப்பவேண்டும் அன்றி உணர்ச்சியை ஆடவிடக்கூடாது. எனினும் இத்தகு காதல் கட்டங்கள் மிகுதியாக ஓவியம் முதலிய கலையிலெல் லாம் காணப் பெறுவதால் குறைகூறற்கில்லை. கலித் தொகையுள் இது போன்ற ஓரிரு பாடல்களையும் முன்பு பார்த்தோம். சங்க இலக்கியங்களில் இத்தகைய உணர்ச்சி அமைப்பு குறைவு.

'மூடர் எதிர்ப்பில் வெளிப்படும் நமது சக்தி, பேடி வழக்கங்கள் மூடத்தனம் இந்தப் பீடைகளே இங்குச் சாத்திரங்கள் எனப் பேசுகிறார்.' பேயரசு செய்தால் பிணந் தின்னும் சாத்திரங்கள் என்ற பாஞ்சாலி சபதத்தின் இடமும் உணர்ச்சியும் இங்கு இசைந்து நிற்கின்றன.

காதல் துளிர்க்கும் கவின்மலர்கள் பல இரண்டாம் தொகுதியில் இடம்பெற்றுள்ளன. 'தொழுதெழுவாள்' என்பதற்கு இருகையால் தொழுதெழுந்தாள் எனப் பொருள் செய்கிறார். அடிபணியவில்லையாம். 'என்கால் தொட்டே அவனுடையால் துடைத்து' என அடிகளை ஆண் வணங்குகிறான் தொடுகிறான் என்ற கருத்தைக் காட்டி வள்ளுவர் விட்ட இடத்தை நிரப்புகிறார். மனைவியின் கால்களைத் தொழக்கூடாது கணவன், என அடிமைத்தனத்தை அகற்றுகிறாராகலாம்.

**முல்லை விலை என்ன என்றான்**
**இல்லை என்று நான் சிரித்தேன்**
**பல்லை இதோ என்றுகாட்டிப் பத்து முத்தம்**

(விலை) வைத்து நின்றாளும். பல்லே முல்லையாம். இன்பத் துளிகள் இவை. நயமான சொட்டுக்கள் இக்கவிகள். கலித்தொகையுள் இத்தகு துளிகள் பலவுள்ளன.

பந்தாடப் போனாலும் இப் புதுக்காலத்து **(Tennis)** தலைவன், இடையில் பந்து துள்ளி அவன் தோளில் பட்டதாம். உடனே ஆட்டத்தை விட்டுவிட்டு அவளை நினைத்துக் கொண்டு ஓடிவந்துவிட்டானும். மனவியல் அறிந்து மொழிந்த கவி இது. களிறு நடப்பது கண்ட சீதை இராமனை நினைத்துக்கொள்கிறாளாம், அதன் நடை அவன் நடையை நினைவூட்டுகிறதாம்.

அத்தான் என அழகுச் சொல்லால் அழைக்கிறாளே ஏன்டீ என்னலாகாதாம். அன்பில்லைஎன்றும்,'ஏன்' என்றால் அதட்டல் என்றும் 'இன்னுயிரே' எனின் உயிர் போல் நானும் பொய்யோ என்றும் போய்விடுவாளாம். 'காத்திருக்கின்றேன் கட்டழகே' என்னவேண்டுமாம்! வள்ளல் ஒருவனைப் புலவன் கற்பகமே அரிச்சந்திரனே எனப் பலவும் புகழ அவன் 'என்னை மரம் (கற்பகம்) என்றும் மனை

விலை விற்றவன் என்றுமா பழிக்கிருய்' எனக் கவிச்சுவை காணத் தெரியாமல் கழறிஞனும்! அவ் விடத்தை எண்ண வேண்டும்.

**மலடி:**

'நமக்கு மக்கள் இல்லையெனின் உலக மக்கள் நமக்கு மக்கள்.' இந்தப் பேரறிவு ஆணிடம் இல்லாததால் கவிஞர் ஒரு பெண்ணை அழித்து (கனவில்) அக்கொடுமையைக் காட்டுகிருர். கடைசிவரைக் கன்னியாகவே காலம் கழிப் பதனை உலகின் சமயங்கள் பல குறைகூறுதலில்லை. ஆனல் மலடி என்ருல் மாநரகம் என்கின்றனர் மக்கள். மலடை நீக்குதற்கு இன்று புதிய நல்ல முறைகள் பல வந்துள்ளன.

மலடி என்று கடிந்து மனைவியை வெளியேற்றினன் மணாளன். கதறிக்கொண்டு காடடைந்தாள். இட்டலிக்கும் சுவை மிளகாய்ப்பொடிக்கும் நல்ல எண்ணெய்க்கும் நானிங்கு என்செய்வேன். கொழுந்து வெற்றிலை பொறுக்கி வெட்டிவைத்த பாக்குத்தூள் இந்தா என்று வெண்முல்லைச் சிரிப்போடு கண்ணுற் கொல்லும் தெள்ளமுதம் கடைத் தெருவில் விற்பதுண்டா என ஏங்கி, இவை மலடியாயினும் மனையாளிடந்தானே கிடைக்கும் என்கிருன். நகைச்சுவை, உள்ளே உண்மை ஒளிந்து கிடக்கிறது.

**பிள்ளை பெறவேண்டாமே உனைநான் பெற்ருல்**
**பேறெல்லாம் பெற்றவனே ஆவேன்.**

என அகமிசைகிருன். இதுவே சாகாத நிலையாம் கவிஞர் கருத்தில்!

**அறம்:**

தமிழ் அகப்பொருளில் அறத்தொடு நிற்றல் என்ப தொரு நிலை. பெண், விரும்பியவனை மணக்க இடந்தர வேண்டும் என்பது இதன் குறிப்பு. ஒரு தலைவனைக்

காதலித்து இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்துகொண்டிருக்கையில், பெற்ருேர் அவளே வேருெருவனுக்கு மணஞ்செய்விக்க முயன்ருல் தோழி மெல்லத் தாயினிடம் தலைவியினுடைய காதற் குறிப்பையும் வந்துபோகும் தலைவனைப் பற்றியும் குறிப்பிடுவாள். இதுவே அறம் எனத் தமிழர் கருதியதால் இதனை அறத்தொடு நிற்றல் என்றனர்.

விரும்பியவர்கள் மணந்துகொள்ள மறுத்த நாட்டில் வள்ளிக்கிழங்கு வேர் விழாதாம், வரைமேல் தேன் தொடராதாம். 'பெற்ருேர் இன்பத்தில்' பாரதிதாசன் இதுபற்றிப் பேசுகிருர். இங்கும் தோழி அறத்தோடு நிற்கிருள். சந்தைக்குச் சென்ற தலைவி சிந்தைக்குட் சென்ற காதலை வாங்கிவந்தாள். இதையே தோழி பெற்ருேரிடம் புகன்ருள். இருவர் உள்ளமும் கன்னலின் சாற்றுக் கடலின் மூழ்கினவாம். பெண் பெற்றபோது பெருமை பெற்ருேம். அத்தூயனின் (தலைவன்) பொன்னடிதனில் எம்பொருளெலாம் வைத்தும், இரந்தும் பெண்ணை ஏற்றுக் குடித்தனம் புரிந்திடச் செய்வோம் என்றனராம்.

மகள் தன் மணாளனைக் குறித்ததில் இவர்கட்கு இத்தனை இன்பம் வந்ததே! என இவரும் இன்புறுகிருர்.

# திராவிடம்

பாரதி விடுதலையைப் பற்றிப் பாடியே, வீரவுணர்ச்சியைத் தூண்டியே பேர்பெற்ருர். காங்கிரஸ் கட்சியினுற்ருன் அவர்க்கு எல்லாப்பெயரும் ஏறின. இக்கவிஞர் திராவிடக் கட்சியைச் சேர்ந்தவர். இக்கட்சியாற்ருன் நாட்டில் இவர் பெயர் மிகுதியும் பரவிற்றென்பதுண்மை. உலகில் பெரியவர்களும் புலவர்களும் தம் நாட்டைப் பிரித்து இழுத்துச் செல்லும், பிணங்கிச் செல்லும் ஏதோவொரு கோட்பாடு அல்லது கட்சி அல்லது சமயம் இவற்றில் இணைந்தே இருந்துள்ளனர். அதனுல் அவர்கள் பட்டபாடு கொஞ்சமன்று என்ருலும் அவர்கள் அதற்கெல்லாம் அசைந்துவிடவில்லை.

நமக்கு வேண்டியது கவியின்பம், கருத்தின்பம். கவிஞன் இருக்கும்போதுதான் அவன் கட்சிபற்றிக் கருதுகிருேம். ஆனுல் அவனுக்குப் பின் ஐம்பது அறுபது ஆண்டுகள் சென்ருல் பெரிதும் கவியிற்ருன் அவன் காட்சியளிப்பான். கவித்திறன் பற்றியே இங்குப் பார்க்கிருேம், கட்சித்திறன் பற்றியன்று. கவிஞன் கட்சியும் அவனைக் கற்போர்க்குப் பிடித்திருந்தால் நல்லதானுல் அனைவர்க்கும் நன்மையே. இல்லையானுல் கவிஞனுக்கே அவன் கவிதைக்கே கெடுதி. அவன் கவிதைகளின்மேல் காழ்ப்பும் பொருமையும் பகை

யும் ஏற்படும். சைவ சமணப் போராட்டமும் ஆற்றிலும் நெருப்பினும் அருஞ் சுவடிகளையெல்லாம் அள்ளிப் போட்டதும் இத்தகைய வீண்வெறுப்புச் செயல்களாலேயே.

எதைப்பற்றி ஒருவன் திருத்த வருகிறானோ பேச வருகிறானோ அதுவே அவனிடம் இல்லாவிட்டாலும் அது போன்ற ஒன்று அவன் வாழ்க்கையில் ஒட்டியிருக்க வேண்டும். 'இயற்கை யறிந்தக் கடைத்தும் உலகச் செயற்கையறிந்து செயல்' என்றார் வள்ளுவர். இதில் வெறும் கோட்பாடும் பேச்சுமட்டும் போதாது; செயற்கையும் வழக்காறும் கலக்கவேண்டும் என்ற கருத்தும் உள்ளது.

கடவுள் என்றால் திருமாலையோ இராமனையோ சிவனையோ பழுத்த சமயப்பற்றர் செய்வதுபோல வழிபாடு செய்யவேண்டுமென்பதில்லை. ஆனால் ஒரு கடவுளை ஏதாவது ஒரு முறையில் நினைக்கவோ பற்றவோ வேண்டும். ஒரு சமயமும், வழிபாடும் இன்றிச் சமயத்தைத் திருத்த முடியாது. அரசியலில் காங்கிரசைத் திருத்துவதென்றால் நாட்டு விடுதலைப் போராட்டத்தில் ஒரு பங்கும் கொள்ளாமல் வீண் குறை சொல்வதால் பாடுபடுவோர்க்கு எரிச்சல் வரவேசெய்யும். போரில் கலந்து உரிமை வந்தபின் வேண்டின் விலகலாம். வேறுகட்சி கொள்ளலாம்.

தன் நாட்டான், தேர்ந்தெடுக்கப்பட்ட எதிர்க்கட்சி உறுப்பினன் ஒன்றைச் சொன்னால் அது எத்தனை இழிவான குறையாயினும் அதுபற்றி அரசாங்கம் குற்றமாக எடுத்துக் கொள்வதில்லை. ஆனால் ஒரு அயல்நாடு பகைநாடு இந் நாட்டைப்பற்றி ஏதோ எள்ளளவு குறை சொல்லிவிட்டாலும் உள்நாட்டு விஷயத்தில் தலையிட்டுவிட்டதாகக் கூறிவிடுகிறோம்.

எப்படியும் ஓர் கடவுள், உரிமை, பொதுவுடமை, சாதியொழிப்பு, ஒற்றுமை, தமிழ், பெண்ணுரிமை, கவியின்பம்

முதலிய மக்கள் பண்பும் பிடிப்புக்களும் அனைவர்க்கும் (கட்சி, சமயத்தார்) பொதுவே. இவற்றை இக் கட்சியினர் ஏற்கிற வரை, பாராட்டும் வரை இவர்களிடம் வீண் வெறுப் புக் கொள்ளவேண்டுமென்பதில்லை.

குறை இல்லாமலில்லை, அதனையும் எடுத்து எவ்வள வும் சொல்லலாம். இராமாநுசரும் இராமலிங்கரும் சொல்ல வில்லையா? அவர்கள் சமயத்துள் இருந்துகொண்டே சீர் திருத்தினர். அதுபோல விடுதலைக்காக மற்றோருடன் சேர்ந்து போராடிய பின், ஒரு சமயத்தைத் தம் வாழ்வில் கொண்டபின் எவ்வளவு சொன்னாலும் நினைத்துப் பார்ப்பர் மக்கள். இன்றளவு இக்கட்சி வாழ்ந்ததும் ஈ வே. ராவை வெளியில் போற்றாதோரும் மனதுள் மதிப்பதும் அப் பெரி யார் முதலில் காங்கிரசில் அரும்பாடு பட்டுப் பின்பு வெளியே சென்றதாற்றான்! அத்துடன் அவ்வளவு தேவை அப்போதில்லாத மொழி, சமய எதிர்ப்புப் போராட்டம் இவற்றைக் கிளப்பி அவற்றில் அனைவரும் சேரவில்லையென அவமதிப்பும் வெறுப்பும் காட்டினர். இவ்வாறு ஏற்பட்டு வந்த வெறுப்பே உள்ளே நினைக்கும் பலர்க்கும் இவர்தம் கவிகளைப் பாராட்டவோ படிக்கவோ முடியாமற் போயிற்று.

'திராவிட நாடு' கொள்கை இந்நிலைக்குரிய காரணங் களுள் தலைசிறந்தது. தமிழ் தெலுங்கு கன்னட மலையாள துளு மொழிகளைப் பேசுவோர் திராவிடர். இப்பண்பினை அடியாகக்கொண்டு இவர் வாழும் பகுதியை ஒன்றாக்கி இந்திய ஆட்சியிலிருந்து தனியே பிரித்து ஆளவேண்டும் என்பது இக்கட்சி. இதுவரை வடவர் நாகரிகம் இப் பண்பை யழித்தது; இன்று வடவர் செல்வாக்கும் செல்வ மும் திராவிடப் பகுதியை அழிக்கின்றன என்பது இதற் குக் கூறப்படும் காரணங்கள்.

இந்திய விடுதலைக்கு முன் இக்கட்சிக் கோட்பாடுகள் ஓரளவு புறக்கணிக்கத் தக்கனவாக இருந்தபோதிலும்

இன்று இதுபற்றி ஒன்றும் அஞ்சவேண்டியதில்லை; அகம் நோவவும் வேண்டாம். இக்கட்சியின் தலைவர்கட்கே இன்று இக்கோட்பாட்டில் நம்பிக்கை இல்லை. அதற்குப் பதிலாக காங்கிரஸ்காரர் பன்மொழி மாகாணம் தட்சிணப் பிரதேசம் இந்தி ஆதிக்கம்பற்றியெல்லாம் இன்று பேசத் தொடங்கி விட்டனர். இதனால் இக்கொள்கைகள் எதிர்க்கட்சிக் கொள்கைகள் எனக் கொண்டு ஆராயவேண்டுவதும் பிடிக்க வில்லையெனில் பராமுகமாய் விட்டுவிடுவதும் தவிரப் பழிக் கவோ இழித்துரைக்கவோ தக்கவல்ல எனவே தெரி கின்றன.

இக் கோட்பாடு (திராவிடப் பண்பு பற்றியது) நேரு கால்டுவெல் போன்ற வரலாற்றறிஞர் பலராலும் ஒப்பப்பட் டதே; அறியாத அறிஞர் பலர் இந்தியாவில் இருப்பினும் இப்பண்பு தனியானதே என்பதை இனி நாட்ட வேண்டிய தேவையில்லை. இந்தியாவின் பாதி (நாகபூர்) வரை இந்நாடு (பிரிவுபடின்) ஏற்படும். மராட்டிரமும் இதில் இணையலாம். இந்தியாவுடன் இணைந்திருப்பதா இல்லையா என்ற கேள் வியைத் தவிர இக் கோட்பாட்டை ஏற்காவிடினும் ஏன் எதிர்க்கவேண்டும், ஏளனமோ இழிவோ செய்யவேண்டும் எனப் புரியவில்லை! உலக நடைமுறை உண்மை நிலையை (அதுவும் அரசியலில்) ஒப்பிட்டுப் பார்த்துக் கடைப்பிடிக்கச் சொல்லும் கோட்பாடுகளைத் தீவிரமாகப் பரப்பவேண்டும்.

இக்கோட்பாட்டை எதிர்க்கக்கூட இதனை எழுதுவ தாக எண்ணவேண்டாம். இன்று உலகம் உண்மையாக 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்ற உச்சி நோக்கி முன்னேறிக்கொண்டுள்ளது. எவரெஸ்டைத் தாவியது இவ் விடத்தையும் தாவும். போர், பொருளாதாரம் கல்வி-கலை, பழக்க வழக்கம், மணமுறை முதலாம் எவ்வகையிலும் உல கின் ஒருகோடிக் கொருகோடி வேற்றுமைகள் அருகிக் கொண்டே வருகின்றன. ஓருலக ஆட்சி உயரத்திலிருந்து

மண்ணுலகை நோக்கி இறங்கிக்கொண்டிருக்கிறது. எனவே மக்களின் ஆதரவு (ஓட்டுப் போடுவோர் ஆதரவு) இன்று எதற்கும் வேண்டுவதாகிறது.

ஒரு பகுதி சமயச் சழக்கர், ஒரு பகுதி காங்கிரஸ்காரர், ஒரு பகுதி வடவர், ஒரு பகுதி பார்ப்பனர் என அவரை இழித்துப் பேசி மக்களுள் பெரும்பகுதியோர் மனதில் இடம் பெருதொழிந்தனர் இக்கட்சியார். கொள்கை குறையுடையதால் உள்ளது என்பதை விடப் பேசும் முறையில் இழிவு, பண்பில்லாத படிக்காதவர்களின் பெரும்பாலான உறுப்பினர்த் தன்மை (இப்போதே படிக்கும் மாணவர் தொகை இதில் பெருகுகிறது) இவற்ருலேயே ஏற்பட்டது இந்நிலை என்னலாம்.

இது திராவிடப்பகுதிக் கவி பற்றியமையின் சிறிது நீளப் பேசினேம். கவிக்கும் இக்கொள்கைக்கும் உயிர்த் தொடர்பாகத் தெரிகிறது. ஆனல் கவியின் கவிதையே நம் ஆராய்ச்சிக்குரியது. இவர் தம் கவிதையுள் நூற்றுக்கு 1-2 பங்கு என்னும்படியே திராவிடம் பற்றிய பாடல்களுள்ளன. ஏதோவொரு மிகச் சிறு காவியம் (நல்லமுத்துக் கதை) இதற்காக எழுதப்பட்டுள்ளது; மற்றன தனிக் கவிகள். எனவே கவி தன் தனித்தன்மையை நிலைநாட்டிக்கொண்டார். கட்சியைப் பரப்பவே கவி எழுதினர் என்பதில்லை. பாரதியின் காங்கிரஸ் பாடல்களிலும் இவருடைய கட்சிப் பாடல்கள் குறைவென்றே கூறலாம். இப்பாடல்களை விட்டுப் படித்தாலும் இவர்தம் தமிழும் தொண்டும் கவித்திறனும் நன்ருக விளங்கும் என்பதில் ஐயமில்லை. இனி அப்படித்தான் படிக்கவேண்டும்; அதுவே உண்மை மதிப்பீடு. எப்பொருளும் யார்யாரிடமும் கேட்டு வளரும் அறிவும் அதுவே.

**நான்தான் திராவிடன் என்று நவில்கையில்**
**தேன்தான் நாவெலாம் வான்தான் எனபுகழ்**

செந்தமிழ் நாடென்றதும் இன்பத் தேன்வந்து பாய்ந்தது பாரதிக்கு. 'இனப்பெயர்' என்ற பாடல் எளிய தெளிந்த வரலாற்றுச் சுருக்கம். லெமூரியா, குமரி மறைந்து இமயந் தோன்றியது பற்றியெல்லாம் அங்குப் பேசுகிறார். உலக மெங்கும்

**திராவிடன் நான் என் பெருமை**
**இராவிடம் இல்லை மகிழ்ச்சி பெரிதே.**

ஆரியர் 'தங்கள் வாழ்வையும் மொழியையும் தமிழால் ஒழுங்கு செய்தனர்' என்கிறார். சமஸ்கிருதம் எனில் செப்பஞ் செய்யப்பட்டது என்பதே பொருள். திராவிடத்தோடொட்டி வடமொழி வளமுற்றதுபற்றி வேண அறிஞர் எழுதியுள்ளனர். சுனீத்குமார சாட்டர்ஜி, கால்டுவெல் ஆகியோர் மொழிநூல்கள் சான்றும். வட இந்திய மொழிகளின் இலக்கண அமைப்பு திராவிடத் தன்மையை அடியாக் கொண்டதென்பது அனைவர்க்கும் இன்று விளங்கி வருகிறது.

பாரதியிடமும் இந்தியாவுக்குட்பட்ட திராவிட ஒற்றுமைப்பொறி ஒன்று காண்கிறோம். சிந்து நதியின்மிசை நிலவினிலே சேரநன்னாட்டிளம் பெண்களுடனே சுந்தரத் தெலுங்கினில் பாட்டிசைத்துத் தோணிவிட்டு விளையாடுகிறார். கேரளம் என்று பிரிப்பதுவும் ஆந்திரம் புய்ப்பதும் திராவிடர் சேராதழித்திடச் சூழ்ச்சி என்கிறார். அவர்கள் பிரிந்து ஆயிரம் ஆண்டுகள் ஆயின. மலையாளத்தைத் தவிர தெலுங்கைத் தமிழன் தங்கைமொழி என்னலாமன்றி மகள் மொழி என்னலாகாது. சங்க இலக்கியங்களிலேயே ஆந்திரம் வேங்கடந் தாண்டிய மொழி பெயர் தேயமாகவே இருந்துள்ளது. தெளிவில்லாவிடினும் கன்னடமும் அப்படித்தான். மலையாளம், தெலுங்கு, கன்னடம் ஆயவற்றை வடமொழி உறவினின்று இனிப்பிரிப்பது தோலை உரித்தபின் ஆட்டைக் காத்தல்போல்தான். ஆனால் பண்பியல், அரசியல் அடிப்படையில் ஒருமுயற்சி நல்லதேயாகும்.

மொழிநூலார் சிலரையன்றி மக்களெல்லாம் வடவர் பண்பு, மொழிக்கு யாங்கள் ஏழ்பிறப்பும் தொடர்புடையோம் அடியோம் எனவே நெஞ்சத்தெண்ணுகின்றனர். மொழிவாரி பிரித்தாய்விட்டது. இனிப் பத்தாண்டு போகவேண்டும். உணர்ச்சியெல்லாம் ஒருவாறு தணிந்து வரட்டும். இனி முயன்று பார்க்கலாம். பிறமொழியினரும் தேச நலங்கருதி இந்தியைப் பொதுவாக ஏற்றது போலத் திராவிடர் தமிழின் பல சிறப்பியல்களைத் தம்மிடம் ஏற்றுக்கொள்ளவேண்டும். இது முதல் நடந்தாற்ருன் இம்முயற்சி வெற்றியுறும்.

தமிழ் என்னும் பேருணர்ச்சி இந்நாள் போலே தமிழ் நாட்டில் எந்நாளும் இருந்ததில்லை; 'தமிழுக்குத் தொண்டு செய்வோன் சாவதில்லை தமிழ்த்தொண்டன் பாரதிதான் செத்ததுண்டோ!' என்கிருர். 'அல்லல் அருளாள்வார்க் கில்லை, மல்லன் மாஞாலங் கரி' என்ற திருவள்ளுவரின் அறிவும் நம்பிக்கையும் இங்கு அகமலர்கின்றன. எங்குப் புதுமையுண்டோ அங்கெல்லாம் தமிழன் திறமும் தோளுமே உள்ளனவாம்.

தீபாவளியா தீவாளியா என்கிருர். இராவணன்பற்றிச் சஞ்சீவிச் சாரலில் எழுதியதே இங்கும் பொருந்தும். கார்த்திகை விளக்கு விழாவே வடநாட்டில் தீபஆவலியாயிற்று. மறைமலையடிகள் தமிழர் மதத்தில் இதனையும் தமிழ்ப் பண்டிகையென்பார். வேண்டாமெனில் கார்த்திகை இருக்கிறது, தீபாவளியை விட்டு இன்று விடுதலை விழா போன்ற புதுவிழாக்களைக் கொண்டால் என்ன? தமிழர் தம்மை இணைத்த சீர் இராமசாமி என இவ்வொருவிடத்தேதான் தலைவர் பெயரைக் குறிக்கிருர். மற்றவிடங்களில் பெரியார் என்று குறிப்பாகச் சொல்லுகிருர். இது சிறந்த கலைத்திறன்!

திராவிடக் கொள்கையால் தெலுங்குக்கோ மலையாளத்துக்கோ தமிழை அழித்துக்கொள்ளவோ அடிமைப் படுத்தவோ கவிஞர் விரும்பவில்லை. இது சிறந்த தெளி

வாகும். தக்ஷிணப்பிரதேசம் ஆட்சிமுறை நலனுக்கு என்பது. ' இனநலனுக்கெனவே ' இதனைக் கவிஞர் பரப்புகிறார்.

ஆயிரம் ஆண்டுகளாக வடவர் மொழிப்பண்புச் செல்வாக்கால் வடவேங்கடத்திருந்த தமிழ் சென்னைக்கு வந்துவிட்டது. அப்பிரதேசங்கள் அல்லாடுகின்றன. செங்குட்டுவனது, சேரமான்பெருமாளது தமிழ் மேற்குத் தொடருக்கு கிழக்கே விரட்டப்பட்டுவிட்டது. கொங்கும் மராடமும் கன்னடமாயின. இவ்வொற்றுமைக் கொள்கையால் இன்னும் இப்படியாகிக் குறைந்தழியுமோ தமிழ் என்பதே வரலாற்றுப் பாடத்தாலறிந்த பலர் அச்சமும் ஐயமும்.

**செந்தமிழ் நாட்டில் தெலுங்குப் படங்கள்**
**தெலுங்கருக் கிங்கு நடிப்பெதற் காக**
**வந்திடும் கேரளர் வாத்திமைப் பெற்றார்.**

என உரிய இதயத்தைப் பிறர்க்கு அளவாகவே பகிர்ந்துள்ளார் பாரதிதாசன். தெலுங்கிசை வேண்டாமென பலவிடங்களில் பகர்கிறார். திராவிடநாடு என்கையில் உலகையெல்லாம் உலகப்பரெனத் தழுவுகிறார். வடவரை இந்தியப்பர் என்பதைவிட உலகப்பரில் சேர்த்துவிட்டால் அவரிடம் இவர்க்கு வெறுப்பிராது. தமிழகத்துள்ள கிறித்துவர் மகம்மதியர் எல்லாம் அயல் அல்ல திராவிடரே என்கிறார்.

## கவித்துளி

*முன் தலைப்புக்களில் அகப்படாத பல பாடல்களைப் பற்றி இங்கு எண்ணுகிறோம். கடவுள், சமயம்பற்றிக் கூறும் இவருடைய பாடல்கள் சில பண்பும் சுவையும் நுட்பமும் உடையன.*

*இயேசுவைப்பற்றிய இரண்டொரு பாடல்கள்; உரையாடலாக அமைந்தவொரு பாடல் மனதுள் உறையத்தக்கது. திருவாசகத்துள் இம்முறையில் இயற்றப்பட்ட பாடல்பற்றி முன்பும் கூறினோம்.*

**காதினிக் கும்படிச் சொன்னசொல் ஏதடி தோழி-அந்தக்**
**கர்த்தர் உரைத்தது புத்தமு தென்றறி தோழா.**

*இங்குப் பெண் ஆணுக்கு அறிவு கொளுத்துகிறாள். அவர் 'கோயிலென்றால் அன்புதோய் மனம் என்றனர் தோழா! ஆண்டவன் தொண்டராகத் தக்கார் அன்னியர்-தான் என்ற அகவேற்றுமை யற்றவர் என்றாராம்.'*

*யேசுவின் தொண்டரைப்பற்றிச் சொன்னது சமயத் தொண்டர்க்கெல்லாம் பொருந்தும். புல்லிய பேதத்தை போக்கினரோ அவர் என்கிறான் தோழன். போதாக்*

குறைக்கு முப்போகம் விளைத்தனர் தோழா, என்கையில் உண்மையும் கலையின்பமும் உடனே முப்போகம் அளிக்கின்றன.

**மாலைத் (மயக்கத்தை) தவிர்த்து வழிசெய்வ ரோ இனித் தோழி—செக்கு**
**மாடுக ளாக்கித்தம் காலைச்சுற் றச்செய்வர் தோழா!**

ஆண்டவன் உறையுமிடம் எங்கே, எளிமையிலா ஆடம்பரத்திலா இயற்கை கைபுனைந்தியற்றாக் கவினிலா செயற்கையிலா என்ற கேள்வி இனிமையாக விடை பெறுகின்றது-தலை, காது, தாள் முதலிய எட்டுறுப்பிலும் தங்க, வெள்ளி, இரத்ன நகை ஒன்றுமின்றி விலைகுறைந்த ஆடையுடன் கோயிலுக்கு வரவேண்டுமெனச் செய்தி விடுத்தாராம் பாதிரியார். வெறுத்தார்களாம் கோயிலை!

நிலைகண்ட பாதிரி எட்டுறுப்பன்றி நீள் இமை, உதடு நாக்கு நிறைய நகை போடலாம் கோயிலில் நிலைக்கண்ணாடியும் உண்டு என இலைபோட் டழைத்ததும் நகை போட்ட பக்தர்கள் எல்லோரும் வந்து சேர்ந்தார். "ஏசுநாதர்மட்டும் அங்கு வரவில்லையே!" என்கிறார். மிக மேலான பாடல். காந்தியும் திரு. வி. க. வும் கோயிலாடம்பரத்தைக் கண்டு மனங்கொதித்து உரைத்த மொழிகள் பல.

சமயமும் உருவமும் வேண்டாம் என்கிறாரன்றிக் கவிஞர் 'ஒரு கடவுளை' ஒப்புகிறார். எனினும் கடவுள் உண்டென்று நிலைநாட்ட உரைக்கப்படும் சமயவாதம் ஒன்றைக் கேலி செய்கிறார், கடவுள் மறைந்தார் என்ற கவியில். வேதநாயகம் பிள்ளை நீதிநூலில் இவ்விவாதம் விரிவாயுள்ளது.

கடவுள், கற்பனையில் தன்முன் வந்தாராம். எனக்கில்லை கடவுள் கவலை என்றாராம் கவிஞர். எடுப்பு சுவர் உண்டெனில் அதனை எழுப்பிய ஒருவன் இருக்க வேண்டும்; அதுபோல இவ்வுலகத்தைக் கண்டு இதனைப் படைத்தவன்

யானே என அறி என்றாராம் கடவுள். அப்படியானால் உம்மைப் பார்த்ததும் உம்மைப் படைத்த ஒருவன் இருக்க வேண்டுமென்ற உணர்வு வருகிறதே அவன் யார் என்றாராம் இந்தக் கீரர். என்றதும் 'கடவுளைக்' காணவில்லையாம்! (மறைந்தார்).

இக்கருத்து மறுக்கப்பட்டிருக்கலாம். இதனால் உடனே கடவுள் இல்லை என்ற முடிவு கிடைத்துவிடவில்லை. எதிரி வக்கீலின் ஏதோ ஒரு கேள்விக்குத் தோற்றுவிட்டதாலேயே நம் வழக்கு முழுவதும் தோற்றுவிட்டதாகாது.

கடந்தது கடவுள். உலகின் முக்காலத்திலும் தோன்றி நிற்கும் அறிவு, ஆற்றல், அன்பு, அழகு ஆகியவை எந்த ஒரு மனிதனிடத்தும் ஒரு தனி இனத்திடத்தும் முற்ற இருந்து விடமுடியாது. இது இன்றும் என்றும் மறுக்க முடியாத உண்மை. கடந்த இவற்றின் அடையாளமே கடவுள். அவர்க்குக் கோயில், சமயம், உருவம், பெயர் இல்லை யாக்கி விடலாம். சமயப் பெரியோரே இவ்வாறுக்கியுள்ளனர், ஒப்புக்கொண்டுள்ளனர். ஆனால் எனக்கு மேம்பட்ட அறிவோ ஆற்றலோ இவ்வுலகில் இல்லையென எந்தத் தனி மனிதனும் இறுமாந்து கூறிவிட முடியாது. அந்த நினைவை அவன் மனதில் நினைவூட்டிக்கொண்டே இருப்பது, இயன்ற வரை மேலே உயர்ந்து செல்ல உணர்த்துவது வழிபாடு, சமயம், தத்துவம், உருவம் எல்லாம். இவை வேண்டா மெனின் குறையில்லை. ஆனால் கடந்த ஒன்று (அதற்கு உருவம் வேண்டுமென்பதில்லை) இல்லையென இன்றுவரை யாரும் எடுத்துக்காட்டமுடியாது.

பத்திரிகை நூல் நிலையங்களாய புதுவளர்ச்சி பற்றிப் பல பாடல்களைப் பாடியுள்ளார்.

**அறைதனில் நடந்தவற்றை அம்பலத் திழுத்துப் போட்டு**
**கறையுளம் தூய்மை செய்வாய்**

இது தெளிவான பத்திரிகை இலக்கணம். பத்திரிகை நாளும் உண்டென்ருல் வாழ்க்கை பெற்ருராம்.

நாடகம் சினிமா பிறநாடுகளில் எந்நோக்கத்துடன் எழுகின்றன? ஒரு நாட்டின் வேரிலுள்ள பகைமை நீக்கி உள்ளே புத்தொளி சேர்க்கவும் பெருநாட்டில் முயன்ருலும் முடியாவொன்றைப் பிடித்தபிடியில் பிடித்துத் தீர்ப்பதற்கும் பெருநோக்கங் கொள்வதற்குமாம்! தமிழ்நாட்டில் நாடகத்தால் சம்பாதிப்போர் தமிழ் மொழியின் பகைவராம். கொள்கையற்ருேராம்.

'பாரத நாடு பழம்பெரும் நாடு, பாரினிலே எங்கும் அதற்கில்லை ஈடு' என்று பாடினன் பாரதி.

**சாதிக்குச் சாவுமணி அடிக்க! பழம்நிகர்**
**தமிழகம் வையத் தலையாய்**

அமையத் தொடங்குக 'அறம் இன்பம்' என்றே குழந்தை: செம்பவழத்துச் சிமிழ்சாய்ந்த அமுதாய்ச் சிரித்தது; பிள்ளை சிரிக்ககையில் சிரித்தது வையம்! சிரித்தது வானமே! பிள்ளைக்கோர் தமிழ் பாடிய பரம்பரையினர் அல்லவா பாரதிதாசன்!

முல்லைக் காட்டில் மகளிர்க்கும் குழந்தைகட்கும் பல நல்ல பாட்டுக்கள் உள; பாரதி நெறியை நினைத்துப் பாடியன போலுள்ளன.

**கற்பது பெண்கட் காபரணம்—கெம்புக்**
**கல்வைத்த நகைதீ ராத ரணம்.**

கற்ருேர்க்குக் கல்வி நலனே கலன் என மீண்டும் இந் நூற்ருண்டிலும் இடித்துரைக்கிருர். உடல்நலம் பேணல் பற்றி உரைக்குமிடங்கள் சில. "சாவைப் போக்கிய நோய் களில் அசுத்தத்தில் தீ, வை; அயர்வினில் தொடரும் துயர் எனும் சேதி அறிவுலகினில் இல்லை."

காந்தட்பூ கீழிருந்து கையேந்துகிறதாம். மேலிருந்து கொன்றைப் பொன் (மலர்) சொரிகிறதாம். இதனைக் கொடைமுரசு போலக் குயில்கள் எக்காளம் இயம்பினவாம். மண்ணிற் கொடைவாழ்க என்று இது குறிக்கின்றதாம். கொன்றை பொன்சொரியும் கற்பனை, தமிழ் இலக்கியத்தும் புராணத்தும் எத்தனையோ இடங்களில் வருகின்றன.

குயில் பத்திரிகையில் வந்த பாட்டொன்று: பாடு பெற்ற பாட்டு அது வென்பேன். இன்பமும் உணர்ச்சியும் எட்டாத அளவு ஏற்றமுற்றன அப்பாட்டில். தெருவில் ஆடும் தொம்பங்கூத்தாடி பற்றியது. அவன் திடு திடு திடு திடு என மேளமடித்தல் முதல் அவன் பேச்சு மாய வித்தையெல் லாம் அப்படியே நம் முன் நிற்கின்றன. கவிஞன் கற்பனையும் கூத்தாடியின் மாயமும் ஒன்றே. ஒரு எலும்பை எடுக்கிறான் எல்லோருக்கும் காட்டுகிறான் அதன் மேல் எதையோ பூசு கிறான் அதனை எதனாலோ மூடித் திறக்கிறான். எலும்பு மனித உருப்பெற்று ஒய்யாரமாக மகிழ்ந்து ஆடுகிறது. கவிக் கற்பனை விரிகிறது. எலும்புதான் உயிரற்ற உணர்ச்சியற்ற தமிழகம். அதன்மேல் தமிழுணர்ச்சி ஏற்றிப் பூசப்படு கிறது. உடனே தமிழகம் உயிர்த்து ஓங்கி உவகையால் ஆடுகிறது இவ்வாறு கண்ட கற்பனை என்னை எப்பாடலை விடவும் இழுத்து மயக்கிற்றென்றே கூறுவேன். என்புக்கும் உருவேற்றி உயிரேற்றுகிறான் கலைஞன்.

## நகைச்சுவை

கவிஞரின் வாழ்க்கை பற்றிய குறிப்பில் 'நகைச்சுவைப்' படப் பேசுபவர் எனக் கண்டிருந்தது. அவர்தம் நூல்களனைத்தையும் அலசி யாய்ந்தபின் இப்போது அவ்வாறுரைத்தது உண்மையேயென வுணர்கிறேம். ஆங்காங்கே நகைச்சுவைக் குறிப்புகளைச் சுட்டிக் காட்டினேம்.

கலைச்சுவை ஒன்பதுள் நகையும் அவலமும் இன்றியமையாத இரண்டு பெரும் பிரிவுகள். இன்பம் விளைக்கக் கலைஞனுக்கு நகைச்சுவையுண்டாக்குந் திறன் மிகவேண்டும். பெர்னர்ட்ஷா போன்றோரிடம் இச்சுவை இருந்ததனை எடுத்துக் காட்டுவர். அறிவொடு கலந்திருக்கவேண்டும்; வெறும் பேசும்படச் சிரிப்பாகக் கூடாது. நினைத்த பின் நகைப்பு நிகழவேண்டும். கலை வெறும் பொழுது போக்காக மனதிற்கு ஒரு ஆறுதலாகமட்டும் இருக்கலாமா அன்றி அதனுள் ஒரு உண்மை அல்லது அனுபவம் இருக்க வேண்டுமா என்பதுபற்றி ஆராய்ச்சியாளரிடையே பெரும் பெரும் பேச்சு! உள்ளே ஒரு நீதி-உண்மை இருப்பதே சிறந்ததென்பதே பலருடைய கருத்தும் ஆகும். அறம் பொருள் இன்பம் பயத்தல் நூற்பயனே என்பதில் இன்பத்

தில் பொழுதுபோக் கமையினும் அறம் பொருளில் 'உள்ளுண்மை' தேவையே என உறுதிப்படுகின்றது.

பெர்னார்ட்ஷாவிடம் உலகில் அழகிய பெண்ணொருத்தி வந்து 'என்னை நீர் மணந்துகொண்டால் என் அழகும் உம் அறிவும் சேர்ந்து ஒரு குழந்தை பிறந்தால் அது உலகிற்கே பேரொளியாகும்' என்றாள். 'உன் அறிவும் என் அழகும் சேர்ந்துவிட்டால்!' என்றாராம் ஷா. நகைச்சுவை இப்படி இருக்கவேண்டும். பீர்பால், தெனாலிராமன் கதைகளெல்லாம் இதற்கே பெரிதும் படிக்கப்படுவன. கவிஞரின் பாடல் பலவற்றும் நல்ல உயர்ந்த நகைச்சுவை யுள்ளது. முல்லைக் கொடியில் நகைச்சுவைப் பகுதி ஒன்றே உள்ளது. அம்மானை ஏசல், அண்ணியை ஏசல் நல்ல இடங்கள்;

**அண்ணி வந்தார்கள்**
**கண்ணாலம் பண்ணி யாச்சு கழுத்தில்தாலி கட்டி யாச்சு**
**பிண்ணாக்குச் சேலை பிழிய பெரியகுளமும் சேறாய்ப்போச்சு**

இது உயர்ந்த கலை. அண்ணியின் துணி அத்தனை அழுக்கு. குளமே சேறாகுமளவு அழுக்குச் சேலை! உண்மையும் கேலியும் உண்டு. நல்ல நகைச்சுவையுமாம்.

நத்தைப் பல் சொட்டை மூக்கு நாவற்பழ மேனியிலே

**'கத்தாழை நாற்றம் எங்கள்**
**கழுத்தைப் பிடித்துத் தள்ளிடுதே'**

இதுவும் தரம்.

**'கோல்போல் இடுப்புக் கொருகோல ஒட்டியாணம் செய்ய**
**பேல்கட்டு வாங்கவேண்டும் பிரித்துத் தகட்டை**
**எடுக்க வேணும்!'**

மாமாவை ஏசல்:

**'கோடாலிப் பல் திறந்து குலுங்கக்குலுங்க நகைக்கையிலே**
**காடே நடுங்கிடுமே காட்டைவெட்டக் கூடுமென்று**
**மாமா—எங்கள் வாசமலரை நீர்மணக்க லாமா!'**

மிகச் சிறந்த சிரிப்புத் துளி.

*சென்னையில் வீட்டு வசதி:* சென்னையில் வெளியூரான் ஒருவன் சென்றான். ஒரு வீட்டில் ஒருபடித் திணையைக் கொடுத்து அன்றிரவு மட்டும் காத்துவைத்துக் காலையில் தருமாறு வேண்டினான். வீட்டுக்காரன் கடவுளை வேண்டுகிறான். பராபர வஸ்துவே!

**படித்திணைக் கிடமிருந்தால்**
**குடித்தனத் துக்கிடம் கொடுத்திருப் பேனே!**

**பழைய நினைவு:** நேற்றுவரைப் போலீஸ் சேவகனாயிருந்து இன்று விடுதி பெற்று ஊரில் ஏற்றம் இறைக்கும் ஏற்றமான வேலையில் அமர்ந்தான். ஏற்றமிதித்துக் கொண்டிருக்கும்போது குறும்பன் ஒருவன் மணி அடித்தானும், வண்டி சத்தம் பாதையில் வழிவிலக்கக் கேட்கிறானென பழைய நினைவு வந்ததாம். வழி காட்டுவதற்காக இரு கையையும் முழுதும் தூக்கினான்.

**'விழுந்து விட்டாண்டி அவன் வீணிற் கிணற்றினிலே'**

இது பெர்னார்ட்ஷா நகைச்சுவை யெனலாம்.

புதுச்சேரியில் 'ஈ' யின் தொல்லை; சாக்கடை நாற்றம் மிகுதி. தெருவில் வெளிப்படையாய்ச் சாக்கடை ஓடும். வாசலில் ஈக்கள் கும்பலாய் மொய்க்கின்றதும் மிளகுக் கூட்டம் போலாம்! பெருக்கினால் அவை கொல்லென மேலே பறக்கின்றன. இதனையே 'மிளகு பறக்குமா' என்கிறார்.

## சொந்த கருத்து

கவிஞன் சொந்த, இலக்கியம் பற்றிய கருத்துக்கள் பலவற்றையும் கவியிலேயே கூறிவிடுகிறான். எல்லாவற் றிற்கும் கவி எழுதுகையில் இதற்குமட்டும் உரைநடை ஏன்?

குறளுக்கும் மற்ற பாடல் சிலவற்றிற்கும் கவியாலேயே உரை சொல்கிறார்—பலவிடங்களில் குறிப்பிட்டுள்ளோம்.

வள்ளுவரைப்பற்றிப் பல கருத்துக்களை விள்ளுகிறார். எந்த பொருளையும் அழகும் சுவையும் உண்டாகச் செய்வதே கலை, கவி. கொழுநற் றொழுதெழுவாள் எனில் காலில் வீழ்ந்து வணங்கல் அன்று, கையால் வணங்கி எழுதல் எனப் பொருள் செய்கிறார்; குறையில்லை.

ஆரூர்க் கபிலரின் நூலடிப்படையில் குறள் எழுதப் பட்டதாம்; சாங்கிய சமயக் கருத்து வள்ளுவரின் கடவுள் வாழ்த்துக் கருத்து என்பர் வடமொழியார். மதமிலார் நூற்கு மதமுளார் உரைசெயின் அமையுமோ எனக் கேட் கிறார்.

பரிமேலழகர் உரை பண்பழிப்பது என்கிறார். ஒழுக்க முடைமை குடிமை என்பதற்குப் பரிமேலழகர் வருணத்திற் கும் நிலைக்கும் ஓதப்பட்ட ஒழுக்கம் என்கிறார். அன்று

'உயர்தமிழ்க் குடிகளின் தன்மை யுடையராதல்'

என இவர் இயம்புவது தீதற்றதேயாம்.

வள்ளுவர் அரசனின் உட்படு கருமத் தலைவர்; பறையர் என்பது பொய் என்கிறார் இவர். டாக்டர், சோமசுந்தர பாரதியின் கருத்தை மேற்கொள்கிறார். வள்ளுவன் என்பான் ஓர் பேதை என்ற பாடலும் குறிப்பும் பொய் என்பதற்குப் போதிய ஆதாரம் காட்டவேண்டும். நீக்ரோவான டாக்டர். பஞ்சியும் (Bunche) டாக்டர். அம்பேத்கரும் இழிகுலத்தில் பிறந்தவர் என்பதால் இழிவுண்டா? கண்ணப்பரையும் நந்தனையும் நாம் இழிந்தவர்களென எண்ணுவதில்லை. எனவே வெறும் கற்பனையையன்றி ஓரளவு போதிய அகச் சான்றுகளைத் தக்க ஆதாரம் கிடைக்கும் வரை ஏற்பதால் இழுக்கிருப்பதாய்த் தோன்றவில்லை.

இராவணத் தமிழன் தீவாளிபற்றி முன்பே ஆய்ந் தோம். கம்பனால் கடுகளவும் நன்மை யேற்படவில்லை இந் நாட்டுக்கு என்ப திவர் கருத்து—முதலிலேயே குறித்தோம்.

கம்பன் இதனையெல்லாம் முன்பே எதிர்பார்த்து அஞ் சித்தான் செய்யப்போவதென்ன எனக் குறித்துள்ளான். 'வையம் என்னை இகழவும் மாசெனக்கு எய்தவும் இஃ தியம்புவன்' என்கிறான். ஆயிரம் ஆண்டுகளாயின அது பலிப்பதற்கு! 'பொய்யில் கேள்விப் புலமையினோன் புகல் தெய்வ மாக்கவி மாட்சி தெரிக்கவே' இராமகாதை புகன் றனும். கதை மாட்சியன்று கவிமாட்சி என்றிருக்கும் பாடமே இன்று ஏற்றது. இவனது கவியே இவ்வியப் புடையது! அவன் கவித்திறம் கண்டின்புறவே கம்பனைப் படித்தாற் போதும், கதைமாட்சி வேண்டின் வேண்டாம். இராமனை வழிபடாவிடில் ஒன்றும் குறைந்துவிடாது. திரு மாலும் சிவனும் முருகனும் இருக்கின்றனர் வழிபடு கடவு ளாதற்கு!

வைணவ இராமாநுசரும் இராமலிங்கரும் குமரகுரு பரரும் செய்தன நாட்டிற்கு நல்லவே என இவர் ஏற்றுக் கொள்கிறார் எனத் தெரிகிறது.

தமிழகத்திற்குற்ற தீங்கெல்லாம் வடநாட்டாராலும் பார்ப்பனராலுமே என்பது இவர் எங்கும் அடிக்கடி இயம்பு வது. அகத்தியன் விட்ட புதுக்கரடியைப் படியுங்கள், இதனை வீணே இன்னும் வளர்த்துப் பயனில்லை. அது உண்மையேயாயினும் நெற்செய்யப் புல் தேயுமாறுபோல எதிர்ப்பெல்லாம் அற்றுப்போகும். இந்தியர் ஆங்கிலேய ரைப்பற்றிக் கூறியது போன்றதே இது. இது வரலாற்றியல்; உயிரியல். இத்தகையன நிகழாமல் தடுப்பது அரிது; காலப்போக்கு இது! சோற்றுப் போராட்டத்தைஎண்ணுகை யிற்றான் இவ்வெறுப்பெல்லாம் எழும். தமிழன் தூங்கினான் எனவே இழிநிலையுற்றான். இனி விழித்துத் தன்னைக் காத் துக்கொள்ளத் தூண்டலாம். எழுந்து பிறனைப் பழித்துக் கொண்டிருப்பதால் காரியம் ஒன்றும் நடவாது. எல்லார்க் கும் எல்லாம் கிடைத்துவிட்டால் இதெல்லாம் சின்னதாகப் போய்விடும்.

அமிழ்து எது எனக் கவிதை ஆராய்ச்சி மூன்றாந் தொகுதியில் அது 'தமிழ்தாம்' தான் அமிழ்தம் என்று உணரற்பாற்று என்ற குறளைக்காட்டுகிறார். துணைவியுடன் இதுபற்றிச் செய்யும் உரையாடல் திறனும் கவிச்சுவையும் கெழுமியதாகும்.

வடமொழிபற்றிக் கால்டுவெல், சுந்தரம் பிள்ளை ஆகி யோர் கருத்தினை ஆதரிக்கிறார். தமிழின் குழந்தைகளே தெலுங்கும் கன்னடமும் கூட என இவர் இசைக்கிறார்.

## கலைத்தரம்

உயர்ந்த கலைஞன் கைப்படும் கவியெல்லாம் கவின் மேம்பட்டே விளங்கும். கவிஞர் பாரதிதாசன் கவிகள் 95 பங்குக்கு மேலும் நல்ல கலைநலம் வாய்ந்தனவே. சில கருத்து வேற்றுமைக் குரியவாகலாம். ஓரிரண்டே கலைக் குறையுடையவாகக் காண்கின்றன. பிறைமதியில் கலைக் குறைவிருப்பினும் அதனைக் காண்போர்க்கு அதில் அழகு குறையாததுபோலக் கடைசியான ஒன்றிரண்டுங்கூடப் பலர்க்குப் பிடிக்கலாம்.

அழகும் ஈடுபாடும், மதிப்பும் கலையைப் படைக்கவும் அதனைச் சுவைக்கவும் ஆய இருநிலைக்கும் வேண்டும். சுவைப்போருடைய மரியாதையைக் குறைப்பதாகவோ சுளிக்கச் செய்வதாகவோ அமையும் கவிகளின் கலைத்தரம் 'குறைந்தது' (இரண்டாந்தரம்) ஆகிவிடுகிறது. அதன்மேல் அவமானப்படுத்தியும் இழிவுபடுத்தியும் எழுதினால் அங்குக் கலைத்தரம் 'இழிந்தது' (கடைசித்தரம்) ஆகிவிடுகிறது.

மறைமுகமாக வள்ளுவர் 'இன்சொல்'லில் கலைக் கொடைபற்றி, கலைவிருந்துபற்றிக் கூறலாகக் கொள்ளலாம். கூறல் என்பதை விட்டு 'இன்சொல் எழுதல்' என்று

கொண்டால் அது நன்ருகப் புரிந்துவிடும். நம்முடைய கவியைப் படிப்போர் அனைவரும் புதியவர்கள் (விருந்தினர்). நாம் அளிப்பது கவி (கலை) விருந்து. அதனை அகனமர்ந்து அளித்தலினும் (அதுவும் வேண்டும் என்பது வள்ளுவர் கருத்து) முகனமர்ந்து இன்சொலுடன் அளித்தல் ஏற்றமாம். அகனமர்ந்தால் அடி மன உணர்ச்சியைப் பண்படுத்துகிறது கலை. முகனமர்ந்தால் வெளி மனதிற்கு அழகும் ஆறுதலும் அளித்துப் பொழுதினை இன்பமாகப் போக்குகிறது. முன்னது பொருட் சுவையையும் பின்னது சொற்சுவையையும் தருவது. ஏதாவது ஒன்றனை அளிக்கும் கவிகளும் உண்டு, எப்படியும் விருந்திற்கு முகனமர்வு (மரியாதை) மிக இன்றியமையாதாம்.

எந்தக் கருத்தினையும் இந்நெறியில் நின்று இயம்பி விடலாம்; இயலாதென்பதில்லை. வள்ளுவரும் பார்ப்பனரைக் கடிந்துகொள்கிருர், தெருட்டுகிருர். 'அந்தணர் என்போர் அறவோர்' அவ்வளவுதான். அதன்மேலும் ஆத்திரம் வந்தால் 'பார்ப்பான் பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்.' உலகிற் கெதிரான கீழ்மக்களைச் சொல்லவேண்டும்; இதனை எத்தனை வகையாலும், கடுமையாலும் கூறலாமே! கொடிறுடைக்கும் கூன்கையரல்லாதவர்க்கு; கொல்லப் பயன்படும் கீழ் (கயமை அதிகாரம்) – புரட்சிக் கொடுமை முழுவதும் ஒரு வரிக்குள் வந்துவிடுகின்றது. நிறைய எழுதினுல் கிளர்ச்சி, கவியையும் கெடுத்துவிடும்.

கவிஞரின் கவிகள் நூற்றுக்கு ஓரிரண்டு பகுதிகூட இரா, ஏனை கலையின் இழிதரத்திற்கு இழுத்துச் செல்கின்றன. எக்கவிஞனிடமும் இதுபோல ஒன்றிரண்டிடங்கள் இல்லாமல் இரா. எண்ணற்ற கவிகளை எழுதமட்டும் கலைஞன் ஒரே உணர்ச்சியுடன் மன அமைதியுடன் இருப்பதில்லை. புறவாழ்விலும் அகவாழ்விலும் அளவற்ற இடையூறுகள். அவற்றையெல்லாம் தாண்டிக் கலையைப் படைக்க வேண்டும்.

நகைச்சுவைப் பகுதியில் குறிப்பாகக் காட்டப்பட்டது அண்ணியையும் மாமனையும் ஏசல் கலைத்தரம் அழகுபட்ட இடங்களைக் கண்டோம். அங்கேயே கலை 'குறையும்' இடமும் ஒன்றிரண்டுள்ளன.

**அண்ணி வந்தார்கள்**
**அழுக்கு சுமந்து செல்லும் அழகுவெள்ளை முகக்குதிரை**
**வழுக்காது நடப்பது போல் வாய்த்தநடை என்ன**
**[சொல்வேன்.**

அண்ணியின் அழுக்கைக் கரைக்கக் குளம் ஒன்று வேண்டுமென்றது சரி. கலைத்தரம் தாழவில்லை. ஆனால் அழுக்கு சுமக்கும் கழுதை என்றால் அது அண்ணனை இழித்ததாகும்! இங்குக் 'குறைகிறது' கலை.

**மந்தை எருமைகளில் வளர்ந்திருந்த காரெருமை**
**இந்தவிதம் சோமன்கட்டி மாப்பிள்ளையாய் இங்கு வந்தீர்**

இது மாமாவை ஏசல்; எருமையுவமை ஆகாதெனப் பாண்டியன் பரிசிலில் பகர்ந்தோம். இது 'குறைந்தது,' இவற்றைவிடக் கலை 'தாழ்ந்தது' ஆகுமிடங்கள் சில உள்ளன. செருப்பும் துடைப்பமும் விருந்தினர் முன் (பிறரை அடிப்பதாலும்) ஓங்குகின்றன. எங்கானலும் எனைத் தானும் யார்மட்டும் தீமைசெய்த லாகாதென வள்ளுவர் கூறுவதை நோக்கவேண்டும். பகைமை, வெறுப்பு, அவமரியாதை இவற்றிற்கு அதிக மதிப்புத் தரலாகாது; அடிக்கடி கவிஞர் மஸ்தான்சாயபுவாக மாறிவிடுகிறார். அவற்றைக் கலையாக்கி அமரத்தன்மை (நிலை) அளிக்கக்கூடாது. இவற்றைப் பேசுதலோடு விடலாம், அன்றிப் பத்திரிகைகளில் எழுதி 'ஈசல்' வாழ்வளிக்கலாம். ஆனால் அழகுக்கும் அழியாமைக்கும் தரும் இடத்தை இந்த இழிவுகளுக்கு அளித்தல் ஆகாது.

பொதுவுடைமையைத் தலையற்ற முண்டங்களெல்லாம் பேசினால் அதனைத் தடுக்கத்தகர்க்க 'பெரும் பெரும் தலை

யெலாம் உம்மில் உண்டு, தாழ்ந்தவர்க் கேதுண்டு காற் செருப்பே உண்டு' என்பது இடம். மற்ருேரிடத்தில் துடைப்பம் வருகிறது. காலிலும் மூலையிலும் கிடப்பது கலை நடுவே இடம்பெற்றுக் கலையைக் காற்கீழும் மூலைக்கும் கொண்டு செல்லும் 'தாழ்ந்தது' ஆகின்றது.

வெளியிலிருந்து வந்த முகம்மதியரையும் கிறித்தவரையும் திராவிடர் என ஏற்கும்போது அதற்குமுன் ஆயிரம் ஆண்டுகளாகத் தமிழ்நாடே என வாழ்வோரை (பார்ப்பனர்) வீணே இனியும் வெறுப்பதில் நன்மையில்லை. அந்த இனத்தின் தன்மை இன்னும் தமிழுக்கென மாறவில்லையேனும் தனிமனிதர் பலர் பெரும்பாலோர் தமிழ்த்தன்மை பெற்று வருகின்றனர். வருங்காலத்தே அவ் இனத்தன்மையும் தமிழ்த்தன்மையாகிவிடலாம் என நம்ப இடமிருக்கிறது.

**'ஊர்ப்பானை தன்னை உருட்டியே உயிர்வாழும்**
**பார்ப்பானை நீக்கி'**

தமிழ் மணம் கொள்ளுமாறு கூறும் இடம். தமிழியக்கத்தில் சொரிபிடித்த பார்ப்பான், குள்ளநரிக் கூட்டம் என்றெல்லாம் வருகின்றது.

**'எத்துப் பழுத்தவர் ஏமாற்றும் ஆரியர் நான்மறைபோல்**
**அத்திப் பழமன்று';**

சமண்கொள்கை மாற்றிச் சம்பந்தப் பார்ப்பனன் சூழ்ச்சி செய்து; தொந்தி சுமக்கும் புரோகிதர்; இவை பல 'குறைந்தும்' தாழ்ந்தும் தரங்கொண்டனவாம்.

சைவம் எனில் மங்கலம் என்பதாம். சைவத்தில் இருக்கும் சீற்றத்தைச் சொல்லில் காட்டுதலாகாது. எய்தவனை நோகவேண்டும். சமயத்திற்கும் எடுத்த கோலத்திற்கும் முற்றும் எதிரான இழிந்த காமலீலைகளைத் தொடங்கினர் என்பதற்கு 'பட்டு மெத்தைகளிலே, மணமே பரவும் பூக்

களின்மேல், தட்டினிற் பக்ஷணங்கள் அருந்திச் **சைவத்தை** ஆரம்பித்தார்' என்றது கருத்திலும் கருத்தாலும் மிகத் தாழ்ந்தது' ஆகும்.

முதுபெரும் புலவரையெல்லாம் தமிழியக்கம் தாழ்த்து துவது பற்றி முன்பே கண்டோம்.

இத்தகைய 'கலைக்கட்டம்' ஏற்படாமை நலம். ஆனால் அது எதிர்பார்த்தற் கரிது. பிடிக்காத பைபிளுக்குப் பெர்னார்ட்ஷா நூல்நிலையத்தே ஒரு அலமாரியில் ஒரு மூலை யிடத்தைக் கொடுத்து அதனை அத்துடன் விட்டுவிட்டார். இத்தகைய கவிகளை, இடங்களைமட்டும் தனிப் பதிப்பாக்கித் தனியே வேண்டுவோர்க்கு விற்கலாம். இவற்றைச் சமணர் காட்டிய எரியிலும் நீரிலும் எறிதல் தவறு. கால நிலையையும், கவிஞன் வாழ்வையும் அறிந்துகொள்ள உதவும் சீரிய வரலாற்றுச் சான்றுகலாம் இவை. எப்படியும் கலையை அழிக்காமல் கலைஞன் புகழை இவை மறைக்காமல் செய்து கொள்ளவேண்டும்.

## முடிவென்ன?

பாரதிதாசனின் பாடல்கள், காவியங்கள் எல்லாவற்றுள்ளும் அவர் உள்ளம் உணர்ச்சி அனைத்தினும்கூட ஆழ்ந்து பார்த்தோம். கலையைப் பார்க்கவேண்டிய 'ஈடு பாட்டுடன்' இறங்கினோம். சமயக் கண் அரசியல் கண் அனைத்தையும் அப்பால் வைத்துக் கவிக்கண்ணுடனேயே நோக்கினோம். அவர் கவிதை அனைத்தையும் ஆராய்ந்தபின் அங்கே பாரதிதாசனாகிய திராவிடரைக் காணோம். நாத்திகர் என்கிறார்களே காணவே காணோம்! பாரதியின் வழிப்பட்ட சிறந்த சீர்திருத்த வாதியை, புரட்சிக்காரனை நல்ல தமிழ்க் கவிஞனையே கண்டோம் கவிதைகளில் கவிஞன் மறையவில்லை; என்றுங் கவிஞனைக் கவிதைகள் சாகாநிலையில் வைத்திருக்குமென்று உறுதிகொள்ளலாம் போலிருக்கிறது. தெளிவில்லாத புன்கவி எனக் கம்பன் கூறுபவன் அல்லன்; கருத்துத் தெளிவுள்ள 'நன்கவி' நம் கவி. பாரதியை விடவும் பாடல்களை எளிமையாக எடுத்தளிக்கிறார்.

தமிழ் நாட்டின் வாழ்வில் அணுஅணுவாய்க் கலந்து அகங்கரைந்து பாடுகிறார். சொல்லின் பொருளின் சுவை கனிந்து நிற்கின்றன கவிகள். பாடல் வகைகளில் எல்லாம் பாடக் காண்கிறோம், எனவே இங்கொரு முழுக்கவிஞன்

தோன்றிவிட்டான். யாதும் ஊரே என்று அனைவரையும் அணைக்கும் உள்ளம் இவரிடம் இல்லாமல் இல்லை; பிறர்க்கென நினைக்கும் பேராண்மை இவரிடம் இல்லாமல் இல்லை. தன்னலத்திற்காக அன்றிச் சிறையும் இழிவும்கூட இவர் ஏற்றுள்ளாரென அறிகிறோம்.

காவியம் ஒன்றிலேயே 'கவிஞன்' ஆய்விடுகிறான், காவியம் பல பாடியுள்ளார் இக்கவிஞர். காதல், நகை, வீரம், அவலம் இவ்வுணர்ச்சிகளை ஒருவித உணர்ச்சியுடன் உருப்படுத்திக் காட்டுகிறார்; இவ்வுணர்ச்சிகளை இவர்க் கவிகள் எழுப்புகையில் ஒருவித பரபரப்பும் உடனெழுவதே பாரதியுடன் இவர்க்குள்ள வேற்றுமை. உவமை வேறுபாடுகளைக் கொண்டு கவியுகத்தைத் கணக்கிடலாம். குறுந்தொகை சிறப்புறுதல் அதன் உவமைகளாலும் குறுகிய பாடல்களாலுமேயாம். இக்கவிஞர் தமக்கென ஒரு நூறு நல்ல உவமைகளைப் படைத்திருப்பார்; இவ்வாறு இவர் தமக்கென ஒரு 'யுகத்தையே' படைத்து விட்டார் எனலாம். பாரதிதாசன் பரம்பரை என்று பெருமையுடன் தம்மைப் பேசிக்கொள்ளும் கவிஞர் பலர்க்குக் காரணராய்விட்டார். இளைஞரும் மாணவரும் இவரை எல்லையற்ற ஆர்வமும் மதிப்புங் கொண்டு 'சான்றோன்' என வழிபடுகின்றனர்.

இளைஞர் உணர்ச்சி என்றும் புதிதாகவே இருக்கும். நாட்டு மக்களின் வாழ்வையும், அக்காலத்தின் கருத்து நிலையையும் அகப்படுத்திய உயிரோவியங்களாக வேண்டும் கவிதைகள். முதியர் உணர்ச்சிகளைப் பாடுபவன் நல்ல கவிஞன்; இளையர் உணர்ச்சிகளை எடுத்துக் காட்டுபவன் புரட்சிக் கவிஞன். இன்றைய முற்போக்கான கோட்பாடுகளையெல்லாம் இவர் முன்னின்று பரப்புகிறார் தம் பாடல்களில்.

வள்ளுவர் வழிவந்த பரம்பரைக் கவிஞர். முன்னோர் கண்ட நெறியை மூடிப்போடாத மேம்பாடுடையவர். நல்லது செய்தார் என நம்பினரை நாவார வாழ்த்துகிறார்; அல்லது

செய்த புலவரை அடியோடு வெறுக்கிறார். அச்சம் என்பது அணுவளவுமில்லை, அச்சமில்லை என்று ஆர்த்த பாரதிக்கு ஒரே ஒரு சான்றானவர். இவர் சொல்லும் ஒரு கடவுளுக்கு ஏதோ ஒருவித வழிபாடு, இந்திய சுதந்திரம் வருமுன் அதற்காக ஒரு சில பணிகள், இவற்றைமட்டும் இவர் இது வரை மேற்கொண்டிருந்தால், வெளிப்படையாக இவரை வாயார வாழ்த்தி மனமாரப் பாராட்டுவர் மக்களும் அறிஞரும். ஆனால் கவிஞன் எல்லையுடையவன்; கவியோ எல்லை கடந்து என்றும் இருப்பது எனவே அதனைத்தான் பிற் காலத்தார் பார்ப்பர், பயன் செய்வர்; அதனை இன்றே, நம் காலத்தேயே செய்து நம் பங்கையும் அடைதலே அறிவுடைமை.

அடிமை நாளிற்றான் அரசியல், கட்சி, காழ்ப்பு எல்லாம். உரிமை வந்துவிட்டது. இனிப் பிறர் அரசியல் கோட்பாடு, கட்சி, காழ்ப்பில் அதிக ஊக்கம் செலுத்தலாகாது. இனி வாழ்வதுபற்றி, இன்புறுவதுபற்றி எண்ணித் திட்டமிட வேண்டும். அதற்குக் கவிஞனின் கட்சியைப்பற்றிக் கருதவே கூடாது. அவனால் நாடு பெற வேண்டிய நன்மை என்ன, இன்பமென்ன என்றே நோக்க வேண்டும்.

ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றாண்மை அவர்தம் கடைசிக் கவிகளில் காணக் கிடைக்கின்றது. அவர் கவிச் சோலையிலிருந்து கிடைப்பனவெல்லாம் தேனூறும் நற்கனி, களாம்.

கவி நிலைப்பது; பேச்சு காற்றில் பறப்பது. எனவே கவிஞர்களை அடிக்கடிப் பேச்சுக்கு (கூட்டங்கட்கு) அழைத்து நீண்ட நல்ல கவிதை தோன்றும் காலத்தை வீணாக்கக் காரணமாகக்கூடாது. கவிஞர் தொடர் நிலைச் (காவியம்) செய்யுள் பல செய்யும் கற்பனையில் காலங் கழிக்க, நாடு உதவவேண்டும்.

**"செவ்விய மதுரஞ் சேர்ந்தநற் பொருளில்**
**சீரிய கூரிய தீஞ்சொல்**
**வவ்விய கவிஞர்"**

*என இலக்கணம் பகர்கிறான் கம்பன். அவ்வியல்பெல்லாம் இணைந்தவராக இக்கவிஞரை ஏற்கலாம். சீரிய தாகப் பலரிடமும் தீஞ்சொல்லாகப் பலரிடமும் பாடல் பிறக்கலாம். ஆனால் 'கூரிய' என்ற கவிப்படைப்புக்கு எளிதாக ஆள் கிடைக்காது, பாரதிதாசன் ஒருவர்!*

*பாரதிதாசனைக் கண்டு பயப்படுகிறார் சிலர்; முகஞ் சுளிப்பார் பலர்; பராமுகமாகிறார் பலப்பலர். பாரதிதாசன் கவிகள் காய்களல்ல, கனிகள் தாம், மலர்கள் தாம்!*

*பாரதிதாசன் ஒரு தாழம்பூ. அது தமிழ்நாட்டார்க்கே உரியது. அதில் அருமையான கண்ணுக்குத் தெரியாத பாம்பிருக்கும்; தாழம்பூவின் எல்லாவிடத்திலும், தோன்றும் எவ்விடத்திலும் பாம்பு இருக்காது. பூ, மண முடையதே; விரும்பத்தக்கதே. ஆனால் பழக்கத்துடன், பண்பறிந்து தொட வேண்டும். இன்றேல் அதிலுள்ள பாம்பு நம்மைத் தொட்டுவிடும், கொட்டிவிடும்.*

**பாரதிக்கடுத்த, பாட்டுக்கொரு புலவன்**

**பாரதிதாசன்தான்!**

